KALKI
14.7.2002
ரூ.6.00

# கல்கி

வைரவிழா ஆண்டு



**"எங்களுக்கு வேண்டாம் இன்ஜினியரிங்!"**

## சேலத்திற்கு அறிமுகம்

# ANS ன் பிளாட்டினம் ஜுவல்லரி




## துவக்க விழா மற்றும் கண்காட்சி

**ஸ்வர்ணபுரி ஷோரூமில் ஜூலை 1 முதல் 14 வரை**

ANS JEWELRY

ANS ஜுவல்லரி

| ஸ்வர்ணபுரி ஷோரூம் | கடை வீதி ஷோரூம் |
|---|---|
| 284 ஓமலூர் மெயின் ரோடு | 184 கடை வீதி |
| ஸ்வர்ணபுரி, சேலம் 636004 | சேலம் 636001 |
| Tel (0427) 440703, 440704 | Tel (0427) 264221, 265180 |
| Fax (0427) 442946 | Fax (0427) 267516 |

**ஞாயிறு (ஜூலை 7 மற்றும் 14) கடை உண்டு**



# பஞ்ச தந்திரம்

'ஏன் பார்த்துத் தொலைத்தோம்?' என்று வெறுப்பின் விளிம்புக்குத் தள்ளுகிற தமிழ் சினிமாக்களின் மத்தியில், அவ்வப்போது அபூர்வமாகத் தலை காட்டும் முழுநீள நகைச்சுவைப் படங்கள்தான் ஆறுதல் ஒத்தடம்.

சர்வதேச விமானி கம் சர்வதேச ஜொள்ளர் (படத்தின் தொடக்கத்தில், ஆங்கிலேயப் பெண், ஆப்ரிக்கப் பெண், சீனப் பெண் என்று பல பெண்களை ஒரே நேரத்தில் காதலிப்பதால் இந்தக் கூடுதல் பட்டம்) கமல், தமது பழைய வாழ்க்கையை விட்டு விட்டு, சிம்ரனைக் கைபிடிக்கிறார். வீட்டில் எலியாகவும், வெளியே புலியாகவும் இருக்கும் இவரது நான்கு நண்பர்களின் நல்ல (?) நட்பு காரணமாக, மனைவி சிம்ரன் கண்களில் மீண்டும் மீண்டும் மெகா ஜொள்ளர் என்பது போலத் தெரிகிறார். இதனால் திருமண வாழ்க்கை 'டமார்'! மீண்டும் இவர்கள் எப்படி இணைந்தார்கள் என்பதை புதுமையேதுமில்லாத பழைய திரைக்கதை மூலம் ஆனால் விறுவிறுப்பாகச் சொல்லியிருக்கிறார்கள்.

கிரேசி மோகன் நகைச்சுவை தோரணங்களால் பின்னியிருக்கும் வசனக் காமெடி அபாரமாகக் கை கொடுத்திருக்கிறது. பாத்திரங்கள் நொடிக்கொரு நகைச்சுவை துணுக்கை உதிர்த்தாலும், ரசிகன் ஒன்றைப் புரிந்து சிரிப்பதற்குள் அடுத்த நகைச்சுவை அவசரமாகப் பிரசவமாகி, தியேட்டரில் பாதி பேர் சிரிக்கிறார்கள். மீதி பேர் சிரிப்பவர்களைப் பார்த்து அசட்டுச் சிரிப்பு சிரிக்கிறார்கள். கொஞ்சம் மேட்டுத்தனமான டயலாக் காமெடி; கதையம்சத்தின் விளைவாக வசனங்களிலும் எக்கச்சக்க ஜொள்ளு என்பதால் A படமாக இல்லாவிட்டாலும் J படமாகி விடுகிறது.

தொடக்கக் காட்சியில் வரும் விமான கடத்தல் காட்சியைக் கொஞ்சம் கூட பரபரப்பில்லாமல் படமாக்கியிருப்பதே பெரிய நகைச்சுவை! (சத்தியமா இது கிண்டல் இல்லீங்க!) படத்தின் க்ளைமாக்ஸ் வரையிலும் சிம்ரனிடம் முன்பு மாட்டிக்கொண்டு கமல் விழிக்கிற அப்பாவி அழகை ரசிக்கலாம்.

பாவம், ஜெயராம்! கமலுக்கு இணையான நடிப்புத் திறமையுள்ள நடிகரை, சரியாகப் பயன்படுத்திக் கொள்ளாததால் பெரிய நடிகர் கும்பலில் காணாமல் போய் விட்டார்.

மீண்டும், மீண்டும் மென்மையான வில்லி வேடத்தில் அநாயாசமாகக் கலக்கி விட்டுப் போகிறார் ரம்யாகிருஷ்ணன்.

கனடாவைப் பின்புலமாகக் கொண்டு எடுக்கப்பட்டிருக்கும் காட்சிகளில் ஒளிப்பதிவாளர் ஆர்தர் ஏ. வில்சனின் திறமை பளிச். இப்போதெல்லாம் ஒரு படத்திற்கு ஒரு வெற்றிப் பாடலைக் கொடுத்தால் போதும் என தேவா நினைத்துவிட்டார் போலும். சிரத்தையே இல்லாத பழைய இசை.

நகைச்சுவை எங்களுக்கு 'ரிஸ்கி பிஸினஸ்' இல்லை என்று திரும்பவும் நிரூபித்திருக்கிறது கமல், கிரேஸி, கே.எஸ். ரவிக்குமார் கூட்டணி.

— விஷுவல்தாசன்

● ஆவெரஜ்

# சர்ச்சைகளுக்கு முற்றுப்புள்ளி!

சர்ச்சைகளைக் கிளப்பிய அரசியல் அனுமானங்கள் ஒரு வழியாக முடிவுக்கு வந்துவிட்டன. அத்வானியைத் துணைப்பிரதமராக நியமிக்கும் அதே நேரத்தில் மத்திய உள்துறை அமைச்சகமும் அவரிடமே தொடரும் என்ற முடிவையும் குடியரசுத் தலைவரிடம் தெரிவித்திருக்கிறார் பிரதமர். ஏற்கெனவே மத்திய அமைச்சரவையில் இரண்டாம் இடத்தை வகித்து வரும் அத்வானிக்கு இந்த பதவி யேற்றம் அவருடைய ஸ்தானத்தை அதிகாரபூர்வமாக உறுதி செய்கிறது. இந்தச் செய்தி அத்வானியின் ஆதரவாளர்களை வெகுவாகக் குதூகலிக்க வைத்துள்ளது. அவர்களின் குதூகலத்துக்கான காரணம் என்னவென்றால் அத்வானி மிகவும் மதிக்கும் அரசியல்வாதியான சர்தார் வல்லபாய் பட்டேலுடன் அவரை ஒப்பிட்டுப் பார்க்க வைத்துள்ளதுதான். பட்டேல், இந்தியாவின் முதல் துணைப்பிரதமர். நேருவின் தலைமையிலான அமைச்சரவையில் எப்போதுமே இரண்டாவது ஸ்தானத்தில் வைத்து மதிக்கப்பட்டவர்.



இதில் சுவாரஸ்யமான சங்கதி என்னவென்றால் பிரதமர் எப்போதும் நிர்வாகரீதியான விஷயங்களில் நேருவின் பாணியில் தம்மை வடிவமைத்துக் கொள்பவர் என்று அவருடைய ஆதரவாளர்கள் புளகாங்கிதம் அடைவதுண்டு – அது காங்கிரஸாருக்குத் துளியும் ஏற்புடையதாக இல்லாமல் போனாலும். வாஜ்பாயும் அத்வானியும் பாரதிய ஜனதா கட்சிக்கான நேருவும் பட்டேலும் என்று ஒப்பிட்டுப் பார்ப்பதில் அவர்களுடைய ஆதரவாளர்கள் பெரும் மகிழ்ச்சி அடைகிறார்கள்.

இந்தியாவில் துணைப் பிரதமராக இருந்தவர்கள் வெகு சிலரே. நேருவின் கீழ் பட்டேல், இந்திரா காந்தியின் அமைச்சரவையில் மொரார்ஜி தேசாய். 1977ல் காங்கிரஸின் படுதோல்விக்குப் பின் பிரதமரான மொரார்ஜி சரண்சிங்கையும் ஜெகஜீவன்ராமையும் துணைப் பிரதமர்கள் ஆக்க நேர்ந்தது. பின்னர் சரண்சிங் தாம் பிரதமர் ஆவதற்காக ஜனதா கட்சியை உடைத்து ஒய்.பி.சவானை, தம்முடைய துணைப் பிரதமராக நியமித்தார். தேவிலால், வி.பி.சிங் மற்றும் சந்திரசேகர் அமைச்சரவைகளில் துணைப் பிரதமராக இருந்ததும் நமக்குத் தெரியும்.

இந்திய அரசியல் சட்டத்தில் துணைப்பிரதமர் என்கிற பதவி வரையறுக்கப்படவில்லை என்றாலும் அத்வானியின் இந்த நியமனம் கடந்த காலத்தில் இருந்த முன் மாதிரிகளைக் கொண்டே நடந்துள்ளது. பிரதமருக்கு அடுத்து அதிக அதிகாரங்கள் கொண்ட ஒரு தலைவரின் செல்வாக்கு மீண்டும் உறுதி செய்யப்பட்டுள்ளது. பாரதிய ஜனதா கட்சி ஆட்சியைப் பிடித்ததில் முக்கியமான பங்கு வகித்தவர் அத்வானி என்பது அனைவருக்கும் தெரிந்த உண்மை. தனியொருவராகவே நின்று அந்தக் கட்சியை இப்போதுள்ள நிலைக்குக் கொண்டு வந்தவர் அவர். அத்வானி தனித்து நின்று முடிவெடுத்த சோம்நாத் பிரச்னையிலிருந்து 1990ல் அவர் மேற்கொண்ட அயோத்தியா ரதயாத்

# ராகவன்தம்பி

வரை அல்ல என்றும் பேசினார்.

அதன் பிறகு பல முக்கிய அரசியல் மாற்றங்கள் நிகழ்ந்தன.

அத்வானியைத் துணைப் பிரதமராக்கிய வாஜ்பாயின் நோக்கம் என்ன?

தேசிய ஜனநாயக கூட்டணியைப் பொறுத்தவரை வாஜ்பாய்க்கு அடுத்த வாரிசைத் தீர்மானிக்கும் பிரச்னை ஒரு முடிவுக்கு வந்துள்ளது என்றே சொல்லலாம். அரசியல் வட்டாரங்களில் முதலாவது மற்றும் இரண்டாவது இடங்கள் பாரதிய ஜனதா கட்சிக்கே அளிக்கப்பட்டுள்ளது ஒரு தெளிவான செய்தியைக் கூட்டணியில் உள்ள மற்ற கட்சிகளுக்கு அனுப்பியுள்ளது என்றும் சொல்கிறார்கள் அரசியல் நோக்கர்கள்.

மத்தியில் நடைபெறுவது தேசிய ஜனநாயகக் கூட்டணி என்று பேச்சுக்கு இருந்தாலும் ஆட்சி என்னவோ பாரதிய ஜனதா கட்சியின் ஆட்சி தான் என்கிற விஷயம் உறுதியாகத் தெளிவாக்கப் பட்டிருக்கிறது. ஆட்சியில் பங்கு பெறும் மற்ற கூட்டணிக் கட்சிகளுக்கும் அவர்களுக்கு இந்த விஷயத்தைப் பற்றிய ஆட்சேபனைகள் இருந்தாலும் அவர்களுக்கும் வேறு வழி கிடையாது.

'டைம்' பத்திரிகையில் வாஜ்பாய் உடல் நிலையைப் பற்றி வெளிவந்த சர்ச்சைக்குரிய கட்டுரையை முன் வைத்து அவருடைய இந்த முடிவைப் பற்றி மேலும் விமர்சிக்க வாய்ப்புக்கள் உள்ளன. ஆனால் வாஜ்பாயின் ஆதரவாளர்களோ "அத்வானி கட்சிக்கு வெகுகாலமாக ஆற்றியிருக்கும் பணிகளை மனத்தில் கொண்டு தாமதமானாலும் சரியான முடிவையே பிரதமர் எடுத்திருக்கிறார்" என்றுதான் சொல்கிறார்கள்.

ஏற்கெனவே சொன்னதுபோல அரசியல் நிர்ணய சட்டத்தில் துணைப் பிரதமர் பதவி என்பது எங்கும் வரையறுக்கப்படாத ஒன்று. குடியரசுத் தலைவர் அத்வானிக்கு செய்து வைத்த பதவிப் பிரமாணமும் அவரை அமைச்சராகத்தான் அறிவித்ததே தவிர துணைப்பிரதமராக இல்லை. பாராளுமன்றத்திலும் துணைப்பிரதமருக்கான பிரத்யேகமான இருக்கை எதுவுமில்லை. கடந்த காலத்திலும் துணைப்பிரதமர்கள் பிரதமருக்கு அடுத்த இருக்கையில் அமர்ந்திருந்தார்கள். நாடாளுமன்றக் கூட்டங்களில் அத்வானி ஏற்கெனவே பிரதமருக்கு அடுத்த இருக்கையில்தான் அமர்கிறார்.

ஒருவழியாக, பிரதமர் பற்றி எழுப்பப்பட்ட எல்லா சர்ச்சைகளுக்கும் அத்வானி நியமனம் ஒரு முற்றுப்புள்ளி வைத்திருக்கிறது. ஏற்கெனவே செல்வாக்கும் அதிகாரமும் மிகுந்துள்ள புதுடெல்லியின் நார்த் பிளாக் கட்டடம் தனது செல்வாக்கையும் அதிகாரத்தையும் இன்னும் கொஞ்சம் பலப்படுத்திக் கொண்டு நிற்கிறது.

நன்றி: ஹிந்துஸ்தான் டைம்ஸ்

திரை முதலிய அரசியல் ரீதியான விஷயங்கள் பாரதிய ஜனதா கட்சியின் அரசியல் செல்வாக்கில் பெரும் திருப்புமுனையை ஏற்படுத்தின. 1992ல் காந்தி நகரில் நடந்த பாரதிய ஜனதா செயற்குழு கூட்டத்தில் அப்போது நாடாளுமன்றத்தில் எதிர்க்கட்சித் தலைவராக இருந்த அத்வானியை அடுத்த பிரதமராக அறிவித்து அப்



போது கட்சிக்குள் நிலவிய பூசல்களைத் தவிர்க்க முயற்சித்தார் வாஜ்பாய். அந்தக் கூட்டத்தில் கட்சியின் பிரதிநிதிகளிடம் பேசும்போது காந்திநகரின் வாக்காளர்கள் (அது அத்வானியின் தொகுதி) ஒரு வருங்கால பிரதமரைத் தேர்ந்தெடுப்பார்கள் என்றும் எதிர்க்கட்சித் தலை

# நக்கீரன் கோபால் பேட்டி

**போலீஸாரின் பத்து நாள் விசாரணையைச் சந்தித்து விட்டு வந்திருக்கிறார் நக்கீரன் கோபால்.**

**''ஒரு யுகத்தைச் சந்தித்தது போலிருக்கிறது'' என்ற என்கிறார். ஆனால் விசாரணை ஏற்படுத்திய அழுத்தங்கள் அவரது வழக்கமான உற்சாகத்தை, சிறிதும் குறைக்கவில்லை.**



***பலமுறை காட்டுக்குச் சென்று வீரப்பனைச் சந்தித்தவர் நீங்கள். கடுமையான மன உறுதி, வைராக்கியம் இருந்தால்தான் அது போன்று சாதிக்க முடியும். இந்த நிலையில் பத்து நாள் போலீஸ் விசாரணை உங்களை உள ரீதியாகப் பாதித்துவிட்டது என்கிறீர்களே!***

அப்போதும் இப்போதும் நான் சந்திக்கின்ற சூழ்நிலைகளே வேறு. கொஞ்சம் கூட ஒப்பிட முடியாது. எனக்கு மைக்ரேன், ஸ்பாண்டிலிடிஸ் போன்ற உபாதைகள் இருந்தாலும், எடுத்த காரியத்தை முடிக்க வேண்டும் என்ற வெறியுடன் காடு, மேடு, மலைகள் கடந்து வீரப்பனைச் சந்தித்து பேட்டி கண்டேன். அப்போதைய என் மனோபலம் எனக்குள் நானே உருவாக்கிக் கொண்டது. ஆனால் இப்போது அப்படியல்ல; என் மனதைரியத்தைச் சோதிக்கும் விதத்தில் கடுமையான வெளிப்புற அழுத்தம். பத்து நாட்கள் ஐம்பது மணி நேர விசாரணை. உயர்நீதி மன்றம் சொல்லியும்கூட வழக்கறிஞர் வைத்துக் கொள்ள அனுமதி இல்லை. இந்த ஐம்பது மணி நேரத்தில் முதல் ஏழு மணி நேரம் நடந்த வார்த்தைத் தாக்குதல்கள் மனரீதியான கொடுமை. "நீ ஒரு தீவிரவாதி. நீ ஒரு குற்றவாளி. நீ என்ன பெரிய வி.ஐ.பி.யா. என்கவுண்டர் என்று உன்னைப் போட்டுத் தள்ளிவிடுவோம். உங்க ஊர்க் காரன் அனைவரும் கிரிமினல். உனக்கெதுக்கு மீசை? நீ தீவிரவாதின்னு நிரூபணம் ஆயிடுச்சு. ஏப்பா, இவனை போட்டோ எடுங்கப்பா. கைரேகையைப் பதிவு பண்ணுங்கப்பா" இதெல்லாம் அவர்கள் திரும்பத் திரும்பப் பேசியதிலிருந்து சில சாம்பிள்கள்.

ராஜ்குமார் கடத்தல் கேஸை விசாரிப்பது லட்சுமணசாமி என்ற இன்ஸ்பெக்டர். அவர்தான் கேள்வி கேட்க வேண்டும். ஆனால் ஒரு டி.எஸ்.பி., மூன்று இன்ஸ்பெக்டர்கள் மூன்று ஏட்டுகள், சுற்றி உட்கார்ந்து கொண்டு மாற்றி, மாற்றி சம்பந்தமேயில்லாமல் கேள்வி கேட்டால் தலை சுற்றுமா, சுற்றாதா? ஒரு கேள்விக்குப் பதில் சொல்லும் முன்னரே அடுத்த கேள்வி கேட்பது. அதற்குப் பதில் சொல்லலாம் என்றால் பாய்ந்து வரும் மூன்றாவது கேள்வி. இதில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஏனென்றால் முதல் கேள்விக்கு ''ஆம்'' என்று சொன்ன பதிலை மூன்றாம் கேள்விக்குப் பொருத்தி விட்டால் விஷயமே மாறிவிடும். மிக ஜாக்கிரதையாக கையாள வேண்டும்.

காலையில் வெறும் மூன்று இட்லி மட்டுமே சாப்பிட்டுச் செல் வேன். ஒரு பக்கம் மைக்ரேன் உயிரை வாங்கும். கழுத்தைத் திருப்பி, திருப்பி பதில் சொல்லியதில் முதுகு தண்டுவடம்







# விளையாடவில்லை!”

வலி தெறிக்கும். இந்த நிலையில் நெருப்புப் பந்தங்களாகக் கேள்விகள். அதுவும் ராஜ்குமார் கடத்தல் பற்றிய மேட்டருக்கு சற்றும் சம்பந்தமில்லாத மன உளைச்சலை உண்டாக்கும் கேள்விகள். திடீரென்று போலீஸுக்கு செல்போனில் கேள்விகள் வரும். எங்களை நசுக்க வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் செயல்பட்டு வரும் சிலர், கேள்விகள் தயாரித்து அனுப்பியதாகவும் தகவல் உண்டு. அவர்களுடைய விசாரணையின் நோக்கமே ''நக்கீரனை முடக்க வேண்டும், என்னைத் தீவிரவாதி என்று முத்திரைக் குத்தி உள்ளே தள்ள வேண்டும்'' என்பதுதான். இது தவிர கருணாநிதி, ரஜினிகாந்த் ஆகியோரையும் தொடர்புபடுத்தி வழக்கில் சேர்க்க வேண்டும் என்ற ஒரு சதித் திட்டம் அவர்கள் கேள்விகளின் மூலம் புரிந்தது. முறையான விசாரணையைச் சந்திக்க என்றும் நான் தயார்.

**ராஜ்குமார் கடத்தப்பட்ட விவகாரத்தில் இறுதி நிலையில் தமிழீழத் தீவிரவாதிகளுக்கும் வீரப்பனுக்கும் உள்ள தொடர்பு தெரிய வந்தது. எனவே இது பற்றி விசாரிப்பதில் என்ன தவறு இருக்கிறது? இரு அரசுகளும் உங்களுக்கு உறுதி மொழி கொடுத்திருந்தாலும் விசாரணைக்கு உடன்படுவதன் மூலம் பல விஷயங்களை நீங்கள் தெளிவுபடுத்தலாமே?**

ஆறு மாதத்துக்கு முன்பு முன்ஜாமீன் வாங்கியபோதே நான் விசாரணைக்குத் தயாராக இருந்தேன். ஆனால்

தாளவாடியில் விசாரணை என்றதும்தான் நான் உயர்நீதி மன்றத்தை அணுகினேன். ஏனென்றால் தாளவாடியில் கூட போலீஸ் ஸ்டேஷனில் வைத்து விசாரிக்காமல் என்னைத் தனியாக விசாரிக்க, காட்டில் ஓர் இடத்தை ஏற்பாடு செய்வதாகக் கேள்விப்பட்டேன். அதுதவிர தாளவாடியைச் சென்றடைய எட்டு செக்போஸ்டுகளைத் தாண்ட வேண்டும். இதையெல்லாம் தாண்டி பத்திரிகையாளர்கள் அங்கு வருவது கஷ்டம். மேலும் அங்கு எனக்கு என்ன வேண்டுமானாலும் ஆகலாம். இப்போது தாளவாடியில் பணிபுரியும் போலீஸ் அதிகாரிகள் என்னைப் பழி வாங்கும் நோக்கத்துடன் அலைவார்கள். எனவேதான் இந்த விஷயங்களை உயர்நீதி மன்றத்தின் கவனத்துக்குக் கொண்டு வந்தேன். உயர்நீதி மன்றமும் எனது நிலையை உணர்ந்து கோபிச்செட்டிபாளையத்தில், உயர்போலீஸ் அதிகாரி பார்வையில் விசாரணை நடத்தும்படி சொன்னது. ஆனால் போலீஸின் நோக்கம் ராஜ்குமார் கடத்தலைப் பற்றி விசாரிப்பதல்ல. ஏதாவது ஒரு குற்றத்தைச் சுமத்தி என்னை உள்ளே தள்ளுவதுதான். மேலும் காட்டிற்குச் சென்று வந்த நான்தான் தீவிரவாதிகளுடன் வீரப்பனுக்கு ஏற்பட்டிருக்கும் தொடர்பைப் பற்றி முதன்முதலாக உலகத்துக்குச் சொன்னேன். வீரப்பன் முன்பு போல இல்லை என்பதையும் அவனைத் தீவிரவாதிகள் தங்கள் கைக்குள் போட்டுக் கொண்டு சித்தாந்த ரீதியாக அவனை மாற்றப் பார்க்கிறார்கள் என்பதையும் எழுதினோம். தீவிரவாதிகள் காட்டில் கொடியேற்றி அணிவகுத்ததையும் படங்கள் போட்டோம். எனவே, எங்களிடம் எந்த ஒளிவு மறைவும் இல்லை. நாங்கள் அறிய வந்ததையெல்லாம் மக்களுக்குத் தெரிவிப்பதற்காக அவ்வப்போது நக்கீரனில் எழுதி வந்திருக்கிறோம்.

**ராஜ்குமார் கடத்தல் - ரிலீஸ் விவகாரத்தில் எந்தக் கட்டத்திலும் பணம் விளையாடவில்லை என்று சொல்ல முடியுமா?**

போலீஸ் மற்றும் தொழில் போட்டி காரணமாக சிலர் செய்யும் விஷமப் பிரசாரம் இது. ராஜ்குமாரை மீட்க முடியாமல் நான் தோற்றுப் போவோம் என்று கணக்குப் போட்டார்கள். ஆனால் அவர்கள் எண்ணத்தில் மண் விழுந்தது. அந்த வெறுப்பின் காரணமாக புழுதி வாரிப் போடுகிறார்கள். இப்போதும் சொல்கிறேன். ராஜ்குமார் கடத்தல் விவகாரத்தில் எனக்குத் தெரிந்த வரை எந்தக் கட்டத்திலும் பணம் விளையாடவில்லை.

**'ஒரு பத்திரிகையாளராகவே இருந்துவிட்டு போயிருக்கலாமே! ஏன்தான் இந்த வம்பில் மாட்டினோமோ' என்ற நினைப்பு தோன்றுகிறதா?**

நிச்சயமாக அது போன்ற எண்ணம் துளியும் கிடையாது. மாறாக ஆயிரக்கணக்கான கர்நாடகத் தமிழர்களின் உயிருக்கும் உடமைக்கும் எந்த பங்கமுமில்லாமல் ராஜ்குமாரை மீட்க முடிந்ததே என்ற மனத்திருப்திதான் நிறைந்திருக்கிறது. நினைத்துப் பாருங்கள். அன்று ராஜ்குமாருக்குக் காட்டில் ஏதாவது நடந்திருந்தால் கர்நாடகத்தில் என்னவாகி இருக்கும்? அப்பாவித் தமிழர்கள் தாக்கப்பட்டிருப்பார்கள். ரத்தம் சிந்தியிருப்பார்கள். அது போல நடக்கிறதா என்று ஓநாய் பார்வையோடு சிலர் காத்திருந்தார்கள். அவர்கள்தான் இன்று என்னைப் பழி வாங்கப் பார்க்கிறார்கள்.

**நக்கீரனின் குரல் வளையை நெரித்து ஆளுங்கட்சிக்குச் சாதகமாக மாற்றிக் கொள்வதுதான் அவர்கள் நோக்கமா?**

விசாரணையின்போது என் உறுதியைக் கண்டவர்கள், கடைசி நாளன்று ஆலோசனை என்ற பெயரில் தூண்டில் போட்டுப் பார்த்தார்கள். "உங்களுக்குச் சொல்லித் தரணுமா சார். சமாளிக்கிற வழி உங்களுக்குத் தெரியாதா" என்று ஆளும் கால்களைச் சரணடைய வழி சொன்னார்கள். இது தவிர என் தம்பி காமராஜ் மூலம் "அம்மாவைக் கொஞ்சம் அட்ஜஸ்ட் செய்து கொண்டு போகச் சொல்லுங்களேன்" என்கிறார்கள். ஆனால் நேர்மை, துணிவு இவையே எங்கள் பலம்.

சந்திப்பு : ப்ரியன்

---

**"எவ்வளவு தைரியமிருந்தா வாங்கின கடனைத் திருப்பித் தராம மறுபடி கடன் கேட்டு வந்திருப்பே?"**

**"தன்னம்பிக்கை அதிகரிக்கும்னு ராசி பலன்ல போட்டிருந்தது. அந்த தைரியம் தான்."**

**- அம்பை தேவா**



உ



ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரி ஸமேத

# ஸ்ரீஸற்குணேச்வரர் ஆலயம்

ஸற்குணேஸ்வரபுரம் : கருவேலி - 609 501.



*****

## அஷ்டதின ஸ்ரீருத்ரத்ரிசதீ, ஸ்ரீலலிதாத்ரிசதீ அர்ச்சனைகள்

மற்றும்

## பன்னிரு திருமுறை பாராயணம்

**சித்ரபானு வருஷம் ஆடி மாதம் 19ம் தேதி (4.8.02) ஞாயிறு முதல் 26ம் தேதி (11.8.02) ஞாயிறு முடிய எட்டு தினங்கள்**

காலை மணி 9 முதல் பகல் 12.30 மணி முடிய
மாலை மணி 4 முதல் இரவு மணி 8.30 முடிய

அன்புடையீர்!

குருவருள் திருவருள் துணை கொண்டு தங்களைப் போன்ற மெய்யன்பர்களின் ஒத்துழைப்புடன் கருவேலி என்று அழைக்கப்படும் ஸற்குணேச்வரபுரத்தில் மகிழ்வுடன் வீற்றிருந்து அருள்பாலிக்கும், **ஸ்ரீ ஸர்வாங்கஸுந்தரி ஸமேத ஸ்ரீ ஸற்குணேச்வரப் பெருமானின்** திருவடிவாரத்தில் பல சிறப்பு வழிபாடுகளும், ஹோமங்களும் பாராயணங் களும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இவ்வாண்டு இத்தலத்தில் அம்பிகையின் அருளாணையின் வண்ணம் தஞ்சாவூர், ஸ்ரீ வாஞ்சாகல்பலதா ஸ்ரீவித்யாகணபதி உபாஸனா யோக பீடாதிபதி ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீவித்யாகணேச ஸ்வாமிகள் தலைமையில் 400 ஆவ்ருத்தி ஸ்ரீருத்ர, ஸ்ரீலலிதா த்ரிசதீ மந்த்ரார்ச்சனைகள் நடைபெற இருக்கின்றன. ''முற்றோதல்'' எனப்படும் பன்னிரு திருமுறை பாராயணமும் நடைபெற இருக்கிறது.

ஸ்ரீ ருத்ர த்ரிசதியையும், ஸ்ரீலலிதா த்ரிசதியையும் சேர்ந்து செய்வது தான் முறை என்பதாலும், அதுவே விசேஷ பலன்களை அளிக்கும் என்பதாலும் இரு த்ரிசதீ அர்ச்சனை களுக்குமாகச் சேர்த்து ரூ. 200/- காணிக்கையாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இதில் பங்கு பெறும் எல்லா பக்தர்களுக்கும், இரு புறங்களிலும் பீஜாக்ஷரங்கள் பொறிக்கப்பட்ட வெள்ளிக்காசு ரக்ஷையாக கொடுக்கப்படும்.

அர்ச்சனைகளில் பங்கு பெற விரும்பும் பக்தர்கள் கீழ்க்கண்ட முகவரிகளில் ஏதேனும் ஒன்றில் காணிக்கையை நேரிலோ / மணி ஆர்டர் மூலமோ செலுத்தி, தத்தம் பெயர், நக்ஷத்திரம், ராசி, கோத்ரம் இவற்றை பதிவு செய்து கொள்ள வேண்டுகிறோம். நிர்வாக ஸௌகர்யம் கருதி பக்தர்கள் 25.7.02க்குள் தங்கள் காணிக்கைகளை அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இங்ஙனம்,
என்றும் இறைப்பணியில்
**ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா**
கும்பகோணம் – கருவேலி.

Dr. V. Krishnamurthy
*Hereditary Trustee*

**காணிக்கை அனுப்பப்பட வேண்டிய முகவரிகள்:**

G. குஞ்சிதபாதம் FCA, ஆடிட்டர், G. நடேசன் & கோ., டபீர் மேல வீதி, கும்பகோணம் - 612 001. போன்: 0435-420047. G. கண்ணன், D-127/A, ராஜமன்னார் சாலை, கே.கே.நகர். சென்னை - 600 078. போன்: 044 - 4836495. K. வைத்யநாதசாமி H.M.,(Retd) 24, பச்சையப்பா தெரு, (உடையார் காலனி) கும்பகோணம் - 612 001. போன்: 0435-435772. M.S. ராமசாமி, 77, செம்பருத்தி தெரு. திருநகர், தஞ்சாவூர் - 9. போன்: 04362 - 323350. A.K. சுப்ரமணியன், 1. முதலாவது குறுக்குத் தெரு, பிளாட் எண். 72, 1, கலைதாரா நகர், வளசரவாக்கம், சென்னை - 600 087. போன்: 044-4865335. A. சந்த்ரமௌலி, 9A, வெள்ளைபிள்ளையார் கோவில் தெரு, S.S. காலனி, மதுரை -10. போன்: 0452 - 601464

# திசை திருப்பும்



தடை செய்யப்பட்ட விடுதலைப் புலிகள் இயக்கத்துக்கு ஆதரவாக செயல்படுதல், தீவிரவாதத்தை ஆதரித்து பேசுவது ஆகிய குற்றங்களுக்காக வைகோ உட்பட ஒன்பது ம.தி.மு.க. பிரமுகர்களின்மீது பொடா சட்டத்தின் கீழ் வழக்கு பதிவு செய்யப்பட்டு அதில் சிலரை போலீஸ் கைது செய்திருக்கிறது. அமெரிக்காவில் இருக்கும் வைகோ இந்தியா வருவதற்காக காத்துக் கொண்டு இருக்கிறது தமிழக போலீஸ். குற்றங்கள் நிரூபணமானால் பத்து வருட தண்டனை.

தடை செய்யப்பட்ட ஓர் அமைப்புக்கு ஆதரவு தெரிவித்து வெளிப்படையாகப் பேசும் நபரை சட்டத்துக்குக் கீழே கொண்டு வர அரசுக்கு முழு உரிமை இருக்கிறது. அந்த வகையில் ஜெயலலிதா செய்தது சரிதான். ஆனால் இந்த விவகாரத்தில் அரசியல் 'பொடி' இல்லையா? இந்த நேரத்தில் மேற்கொள்ளப்பட்ட இந்த அணுகுமுறை மக்களை திசை திருப்புவதற்காக என்று சொல்பவர்களும் உண்டு.

"தண்ணீர் இல்லாமல் காவிரி பாசன விவசாயிகள் ரத்தக் கண்ணீர் விட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இப்போது வைகோ விவகாரத்தைக் கிண்டி விட்டுப் பெரிதாக்குவதால் பிரச்னை திசை திருப்பப்பட்டு கவனம் மாறிவிட்டது" என்கிறார்கள் கம்யூனிஸ்ட் பிரமுகர்கள்.

"வைகோ இன்றோ நேற்றோ புலி ஆதரவாளர் கிடையாது. அந்த விஷயத்தில் அவருக்கு நீண்ட பாரம்பரியம் உண்டு. 1998 பாராளுமன்றத் தேர்தலில் இதையெல்லாம் தெரிந்து கொண்டு தானே அவரோடு கூட்டணி அமைத்தார் ஜெ. இப்போது நாங்கள் ஸ்டாலின் பதவி பறிப்பை எதிர்த்து பெரிய இயக்கமாக நடத்திக் கொண்டிருக்கிறோம். வைகோவைக் கிளப்பிவிட்டு அவரை சென்டர் ஸ்டேஜுக்குக் கொண்டு வருவதன் மூலம் தி.மு.க.வின் நடவடிக்கைகளை ஓரங்கட்டிவிடலாம் என்று நினைக்கிறார் ஜெ. அது நடக்காது. கிட்டத்தட்ட முடங்கிப் போய்விட்ட ம.தி.மு.க.வுக்கு உயிர் கொடுக்கும் விதமாக, இந்தப் பிரச்னையை கிளப்பிவிட்டதான் மூலம் தி.மு.க.வுக்கு இணையாக - அதுவும் ஸ்டாலினுக்கு - எதிராக, வைகோவுக்கு முக்கியத்துவம் கொடுத்து அவரை அரசியல் அரங்கில் நிறுத்தி வைக்கும் முயற்சியில் இறங்கியிருக்கிறார் ஜெ" என்று சொல்கிறார் தி.மு.க. ஸீனியர் பிரமுகர் ஒருவர்.

"ஜெ. எதிர்பார்த்தபடி 'புலிகள்' என்றதும் அலர்ஜியாகி காங்கிரஸ் கோஷ்டித் தலைவர்கள் போட்டி போட்டுக் கொண்டு 'வைகோவைப் பிடித்துப் போடு' என்று ஜோதியில் கலந்து கொண்டிருக்கிறார்கள். இது ஓர் அரசியல் நடவடிக்கைதான்." என்கிறார் காங்கிரஸ் பிரமுகர் ஒருவர்.

காங்கிரஸுடன் கூட்டு சேர வாய்ப்பு உண்டு என்று செய்தி அடிபடும் நிலையில்

கலைஞரும் வைகோவுக்கு ஆதரவாகக் குரல் கொடுக்கும் வாய்ப்பு மிகவும் குறைவு. வைகோவின் புலிகள் ஆதரவு காரணமாக அதிகமாக தேர்தல் அரசியலில் பாதிக்கப்பட்டது தி.மு.க.தான். இந்த விஷயத்



# அதிரடி!

தில் மிதவாதியாக இருக்க ஆசைப்படுகிறார் கலைஞர். புலிகள் பிரச்னையில் தீவிரமாக நடவடிக்கை எடுப்பதால், காங்கிரஸ் தம்மை விட்டுப் பிரிந்து விடாத நிலையை ஏற்படுத்த முயல்கிறார் ஜெ. என்று சொல்பவர்களும் உண்டு. "இதை பழிவாங்கப் பயன்படுத்துவார்கள்" என்று 'பொடா' சட்டத்தைக் கடுமையாக எதிர்த்த மேலிட காங்கிரஸ், வைகோ விவகாரத்தைப் பற்றிய கருத்தைச் சொல்வதில் கொஞ்சம் குழப்பமடைந்திருக்கிறது. அதற்குக் காரணம் வைகோ என்.டி.ஏ. அணியைச் சேர்ந்தவர் அவர் புலிகள் ஆதரவாளர் என்பதும்தான்.

'பொடா' சட்டப்படி ஒருவர் குற்றம் செய்திருக்கிறார் என்று மாநில அரசு கருதுமானால் நேரடியாகவே நடவடிக்கை எடுக்கலாம். அதைவிட்டு விட்டு மத்திய அரசுக்குக் கடிதம் எழுதி பரபரப்பு உண்டாக்குவதைப் பார்த்தால் நோக்கம் வேறு ஏதாவது இருக்குமோ என்று சந்தேகப்படுபவர்களும் உண்டு.

"இவர் ஏதோ மத்திய அரசைக் கேட்டுக் கொண்டுதான் எல்லா காரியங்களையும் செய்வது போல ஸீன் போடுகிறார். மூன்று போலீஸ் அதிகாரிகளை மத்திய அரசு பணிக்கு அனுப்பச் சொன்னபோது அனுப்பினாரா? அல்லது "பாலசிங்கத்துக்கு தமிழ்நாட்டில் மருத்துவ சிகிச்சை அளிக்க அனுமதிக்கமாட்டோம்" என்று பேசியபோது மத்திய அரசின் சம்மதம் கேட்டுப் பேசினாரா? பிரபாகரனை இந்தியாவிடம் ஒப்படைக்க வேண்டும் என்று சட்டசபை தீர்மானம் போட்டபோது மத்திய அரசைக் கேட்டாரா? இன்னமும் சொல்லப்போனால் "உங்கள் கூட்டணி கட்சிப் பிரமுகரையே கைது செய்யவிருக்கிறேன் பாருங்கள்" என்று மத்திய அரசுக்கு சவால் விடும் போக்குதானே இது. இவ்வளவு 'சப்தத்தையும்' எழுப்பிவிட்டு வைகோ விஷயத்தை அப்படியே ஆறப் போட்டாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை" என்று சொல்கிறார்கள் தி.மு.க. பிரமுகர்கள்.

இந்த விவகாரத்தில் உள்துறைச் செயலாளர் நரேஷ் குப்தாவின் செயல்பாடு ஜோக்காக உள்ளது. வைகோவைப் பற்றிக் கேட்டால் "முதல்வர் நேரிடையாக அந்த விஷயத்தைக் கையாள்கிறார்" என்கிறார் அவர். (தம்மை மாற்றிவிட்டால் பரவாயில்லை என்று நினைக்கிறாரோ!) அம்மாவின் வானர சேனையான வீரமணிக்குப் பதைபதைக்கிறது.

"அம்மா! ஜாக்கிரதையாகக் கையாளுங்கள். இதைக் காரணமாக வைத்து மத்திய அரசு உங்களைப் பழி தீர்த்துக் கொண்டுவிடும்" என்று முட்டுக் கொடுப்பதாகத் தகவல்கள்.

பா.ஜ.க. தலைமை, இத்தருணத்தில் பொடா பிரயோகிக்க வலுவான காரணமில்லை என்று கூறினாலும் கூடவே 'ஆனால், மாநில அரசுதான் முடிவெடுக்க வேண்டும்' என்றும் கூறுகிறது. அதற்கும் அம்மா கூட்டணி நப்பாசை உண்டு.

மக்களை மட்டுமல்ல, தமிழக அரசியல் கட்சிகளையும் தமது நடவடிக்கையால் தலை சுற்ற வைத்துவிட்டார் ஜெ. அரசியல் தலைவர் என்ற முறையில் வைகோ மட்டுமே சந்தோஷப்பட்டுக் கொள்ள முடியும்.

- கௌசி

படங்கள் : சௌரா





# நடக்கும் என்பார்;

**மேஷம் :** இந்த வாரம் மகிழ்ச்சி வாரம். மனகல துணிச்சல், தன்னம்பிக்கை. எடுத்த காரியங்களை எப்பாடுபட்டாவது நிறைவேற்றுதல் என்று அசத்தலா போகும். அரசியல்வாதிகளுக்கு அடிக்குது லக். புதிய பொறுப்புகள், பதவிகள் தேடி வரலாம். சிலருக்கு இதுவரை தாமதமாகிவந்த பதவி உயர்வு, இடமாற்றம் இப்ப கிடைக்கும். புதிய முயற்சிகள் கைகூடும். எதிர்ப்புகள் இருக்காது. பொருளாதார நிலையில முன்னேற்றம் உண்டு. குடும்பத்துல அமைதி, நன்மை ஏற்படும். பெண்களுக்கு இது அதிர்ஷ்டகரமான வாரம். புதிய பொருள் சேர்க்கை நிகழ வாய்ப்புண்டு.

**ரிஷபம் :** இந்த வாரம் பணம் பல வழிகள்ல இருந்து வரும். எந்தவிதமான தடங்கல்களும், இடையூறுகளும் உங்களை ஒண்ணும் செய்ய முடியாது. இதுவரை இழுத்தடிச்சிட்டிருந்தப் பிரச்னைகள் இப்ப முடிவுக்கு வரும். சிலர் எதிர்பாராத பயணம் போக வாய்ப்பிருக்கு. வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரும். 'பார்ட்னர்ஷிப்'ல தொழில் பண்றவங்களுக்கு லாபம் கொட்டும். குடும்பத்துல சுபகாரியம் நடக்க வாய்ப்பிருக்கு. சிலருக்கு வீடு கட்டும் வாய்ப்பு வரும். சண்டை சச்சரவு காரணமாக பிரிந்தவங்க இப்ப கூடுவாங்க.



**மிதுனம் :** இதுவரை டென்ஷன் படுத்திட்டிருந்த குறுக்கீடுகள், இடையூறுகள் ஓடிப் போகும். எதிர்ப்புகள் இருக்காது. எதிரிகள் ஓடிப் போய்டுவாங்க. பதவி உயர்வு, ஊதிய உயர்வு கிடைக்க வாய்ப்பிருக்கு. மதிப்பு, அந்தஸ்து, புகழ் கூட வாய்ப்பிருக்கு. பண வசதி தாராளமா இருந்துவரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்க முன்னேற்றம் பெறுவாங்க. தொழில் சம்பந்தமா சிலர் வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. ஏற்றுமதி இறக்குமதி ஆதாயம் கொண்டு வரும்.

**கடகம் :** குரு பெயர்ச்சிகாரணமாக கடன் தொல்லை நீங்கி, தெளிவான மனநிலையோடு இருப்பீங்க. மனகல மகிழ்ச்சி தாண்டவமாடும். எதிரிகள் ஓடி ஒளிவாங்க. சிலருக்குப் பதவி உயர்வு இடமாற்றம் ஏற்படலாம். வியாபாரிகளுக்கு முன்னேற்றம் உண்டு. குடும்பத்துல மகிழ்ச்சி உண்டாகும். உறவினர்கள், நண்பர்கள் ஓடி வந்து உதவுவார்கள். சினிமா துறையைச் சேர்ந்தவங்களுக்குப் பாராட்டு கூடும். பெண்களுக்கு இது உற்சாகமான வாரம். தங்கள் எண்ணங்கள், அபிலாஷைகள் நிறைவேறும். வம்பு தும்பு பக்கம் போக வேண்டாம். எதிலும் பதற்றம், அவசரம் கூடாது.

**சிம்மம் :** இந்த வாரம் காரியங்களில் வெற்றி உண்டு. பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. சிலர் பயணம் மேற்கொள்ள வாய்ப்பிருக்கு. வேலை பார்க்கற இடத்துல பாராட்டு கிடைக்க வாய்ப்பிருக்கு. சிலருக்குப் பதவி உயர்வு இடமாற்றம் கிடைக்கலாம். வெளிநாடு போறதுக்கான வாய்ப்பு கூடி வரும். கொடுக்கல் வாங்கல்ல இதுவரை இருந்து வந்த பிரச்னை இப்ப விலகும். குடும்பத்துல அமைதி நிலவும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. பெண்களுக்கு மகிழ்ச்சியான வாரம். ஜமாய்ங்க!

**கன்னி :** இந்த வாரம் துணிச்சல், தன்னம்பிக்கை அதிகரிக்கும். உத்தியோகத்தில் இருந்த சங்கடங்கள், பிரச்னைகள் இனி காணாமல் போகும், எல்லோரிடமும் சகஜ நிலை ஏற்படும். கொடுக்கல் வாங்கல் சுமுகமா இருக்கும். சினிமாத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புதிய ஒப்பந்தம் வரும். கணிதம், பத்திரிகை, எலக்ட்ரானிக்ஸ் ஆடை வகைகள் போன்ற துறைகளில் நல்ல முன்னேற்றம் உண்டு. குடும்பத்துல மகிழ்ச்சி குதூகலிக்கும். உறவினர்கள், நண்பர்கள் வருகை தருவாங்க. திருமணமாகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வந்து சேரும். பெண்களுக்கு இது அதிர்ஷ்டம் நிறைந்த வாரம்.

**அக்னிசர்மா பக்கம்**

# நடக்கும்!

**துலாம் :** இந்த வாரம் எதிர்ப்புகள் இருக்காது. பொருளாதார நிலை திருப்தியா இருக்கும். தாமதம், தடங்கல், இடையூறு விலகும். புதிய முயற்சிகள் வெற்றி தரும். தைரியமா இறங்கலாம். அலுவலகப் பணியாளர்கள் மற்றவங்க பாராட்டைப் பெறுவாங்க. சிலர் சாதனை புரிய வாய்ப்பிருக்கு. இதனால் பெயர், புகழ் பாராட்டு ஏற்படும். வியாபாரிகளுக்கு இது லாப வாரம். எதிர் பாராத வளர்ச்சி, பண வசதி கிட்டும். குடும்பத்தில் ஒற்றுமை அமைதி நிலவும். சுபகாரியங்கள் திருமண முயற்சிகளில் வெற்றி உண்டாகும். மாணவர்கள் நலம் பெறுவார்கள். பேச்சில் நிதானம் அவசியம்.

**விருச்சிகம் :** இந்த வாரம் உங்க சாமர்த்தியம் வெளிப்படும். உத்தியோகத்தில் அனுகூலமான திருப்பம் உண்டாகும். இடமாற்றம், பதவி உயர்வு, ஊதிய உயர்வு கிடைக்க வாய்ப்பிருக்கு. நிர்வாகத்துறையில் இருக்கறவங்களுக்குப் புதிய பொறுப்பும் அந்தஸ்தும் கிடைக்கும். பண வசதிக்குப் பஞ்சமில்லை. இதுவரை இருந்து வந்த பண நெருக்கடி விலகும். கொடுக்கல் வாங்கல் சுமுகமா நடக்கும். வியாபாரத்தில் தொழில் போட்டிகள் விலகும். பெண்கள் புதிய ஆடை, அணி கலன்கள் வாங்க வாய்ப்பிருக்கு. புது வீடு கட்டும் / வாங்கும் பாக்கியமிருக்கு.

**தனுசு :** உங்க மதிப்பு, செல்வாக்கு உயரப் போகுது. எதிர்ப்புகள் விலகி அமைதியான சூழ்நிலை உருவாகும். சுயமாகத் தொழில் பண்றவங்க உயரு வாங்க. பயணங்களால் நல்ல பலன் உண்டு. புதிய தொழிலில் ஈடுபட சந்தர்ப்பம் வரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. ஏற்றுமதி இறக்குமதியில் லாபம் உண்டு. குடும்பத்துல அமைதி நிலவும். வீட்ல கல்யாணம் போன்ற சுப காரியங்கள் நடக்க வாய்ப்பிருக்கு. பெண்களுக்கு எல்லா வகையான அனுகூலமான வாரம். அரசியல்வாதிகளுக்கு நல்ல திருப்பம் காத்திருக்கு.

> **மிதுன ராசிக்காரரான நெப்போலியனுக்கு பதவி உயர்வு வருமாமே! ஆஹா!**

**மகரம் :** இதுவரை காலதாமதமாகிவந்த பிரச்னைகள் இப்ப முடியும். தடைகள் குறுக்கீடுகள் மாயமாகும். வெளிநாட்டிலிருந்து எதிர்பார்க்கும் நல்ல செய்தி வந்து சேரும். உத்தியோகத்தில் நல்ல சுமுகமான சூழ்நிலை ஏற்படும். அலுவலகப் பணியாளர்களுக்குப் புகழ் பாராட்டு கிடைக்கும். எதிர்ப்புகள் அகலும். பண நடமாட்டம் தாராளமா இருந்து வரும். குடும்பத்தில் அமைதி நிலவும். திருமணம் போன்ற சுபகாரியங்கள் நடக்க சந்தர்ப்பம் வரும். பேச்சில் நிதானம் அவசியம். வீண் வம்பு தும்பு பக்கம் தலைகாட்டாமலிருப்பது நல்லது.

**கும்பம் :** இதுவரை கண்டும் காணாமலிருந்த நண்பர்கள் உறவினர்கள் இப்போது ஓடி வந்து உதவுவார்கள். உடல் ஆரோக்கியம் சீரா இருக்கும். கடன் தொல்லைகள் நீங்கும். தொழில் சம்பந்தமான பயணம் போக சந்தர்ப்பம் இருக்கு. இதுவரை இழுத்தடித்துக் கொண்டிருந்த தொகை எதிர்பாராமல் வந்து சேரும். ரியல் எஸ்டேட், வீடு, மனை போன்ற துறைகளில் எதிர்பாராத முன் னேற்றம் உண்டு. சிலர் புதிய தொழிலில் ஈடுபடலாம். குடும்பத்தில் கணவன் மனைவிக்குள்ள இருந்த சண்டை சச்சரவுகள் நீங்கும். மாணவர்கள் திறமை வீண் போகாது. முன்னேபின்னே தெரியாதவங்க கிட்ட அடக்கி வாசிங்க.

**மீனம் :** உங்க அறிவாற்றல், பேச்சாற்றல் வெளிப்பட போற நேரம் இது. தெய்வீகமான காரியங்களில் மனசு ஈடுபடும். தொழிலாளர்கள், விவசாயி களுக்கு முன்னேற்றம் உண்டு. பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. பட்டு, ஜவுளி, ரெடிமேட் ஆடைகள், ஏற்றுமதி இறக்குமதி இனங்கள் நல்ல லாபம் கொடுக் கும். பார்ட்னர்ஷிப்பில முன்னேற்றம் உண்டு. வெளிநாட்டிலிருந்து உற்சாகமான செய்தி வந்து சேரும்.








**ஜூலை 10 முதல் 16 வரை**



# கல்கி சந்தாதாரருக்குக் கொண்டாட்டம்!

★ ஓராண்டுச் சந்தா ரூ.330/- செலுத்துவோருக்கு (அயல்நாடு ரூ.2000 ஏர் மெயில்) இரு பரிசுகள் :

● ரூ.70 பெறுமானமுள்ள கல்கி வைர விழா மலர் 2002

● மற்றும் அதன் ஓர் அங்கமாக "சுபம்-சிவம்" - எம்.எஸ். அவர்களின் இன் குரலில் அற்புதமான பாடல்கள் அடங்கிய ஆடியோ கேஸட்!

★ இரண்டு ஆண்டுச் சந்தா ரூ.660/- செலுத்துவோருக்கு (அயல்நாடு ரூ.4000 ஏர் மெயில்) மூன்று பரிசுகள் :

● ரூ.70 பெறுமானமுள்ள கல்கி தீபாவளி மலர் 2002

● ரூ.70 பெறுமானமுள்ள கல்கி வைர விழா மலர் 2002

● மற்றும் அதன் ஓர் அங்கமாக எம்.எஸ். அவர்களின் இன் குரலில் அற்புதமான பாடல்கள் அடங்கிய ஆடியோ கேஸட்

★ குறிப்பிட்ட சில பிரதிகள் மட்டுமே சந்தாதாரர்களுக்காக இவ்வாறு ஒதுக்கப்படுகின்றன. எனவே மலர் ஸ்டாக் உள்ளவரைதான், இந்தத் திட்டத்தின்படி சந்தா தொகைகளை ஏற்க முடியும்.

★ முந்துங்கள். கடைசி தேதி ஜூலை 22, 2002.

★ ஏற்கெனவே சந்தாதாரராக உள்ளவர்களும் உடனடியாக சந்தா தொகை செலுத்தி இத்திட்டத்தால் பயன் பெறலாம். அவர்கள் சந்தா முடிவு தேதியிலிருந்து புதுப்பிக்கப்படும்.

★ DD அல்லது MO அனுப்பவும்.

★ வெளியூர் Cheques ஏற்கப்படமாட்டா.

★ ஏற்கெனவே சந்தாதாரராக உள்ளவர்கள் சந்தா எண் குறிப்பிட்டு எழுதவும்.

★ பின்கோடு உள்பட முழு விலாசம் தெளிவாக எழுதவும்.

★ 'கல்கி சந்தாதாரர் பரிசுத் திட்டம் 2002' என்று குறிப்பிடவும்.

★ DD, MO அல்லது Cheque (சென்னை மட்டும்) KALKI என்ற பெயருக்கு அனுப்பவும்.

★ அயல்நாட்டு சந்தாதாரருக்கு மலர் மற்றும் கேஸட் இந்திய விலாசத்துக்கு மட்டுமே அனுப்ப இயலும்.

★ நண்பர்கள், உறவினர்களுக்குப் பரிசாகவும் நீங்கள் சந்தா கட்டலாம். மலர், கேஸட் ஆகியன உங்கள் நண்பர், உறவினருக்கே அனுப்பப்படும்.

★ சந்தா தொகை அனுப்ப வேண்டிய முகவரி :

சர்க்குலேஷன் மானேஜர்,
கல்கி,
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 097.




2002 ஜூலை 14
சித்ரபானு ஆனி 30
மலர் : 60
இதழ் : 50

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# பத்திரிகைத் துறைக்கு ஆபத்து!

இரண்டு வருடங்களுக்கு முன் நிராகரித்த ஒரு சட்டத் திருத்தத்தை மத்திய அரசு இப்போது நிறைவேற்ற அவசரம் காட்டுகிறது. பத்திரிகைத் துறையில் அன்னிய முதலீடை அனுமதிக்கும் அத் திருத்தம் இப்போது மட்டும் ஆதரவு பெறுவதற்குக் காரணம் என்ன...?

பார்லிமென்டரி கமிட்டியின் பரிசீலனைக்கு இச் சட்டத் திருத்தத்தை அனுப்பியபோது, அக் கமிட்டியும் இதற்கு எதிராகவே வாக்களித்திருக்கிறது.

அவ்வாறிருந்தும் அன்னிய முதலீடை அனுமதிக்க அரசு தீர்மானித்திருப்பது விந்தைதான்.

தமிழக முதல்வரும், மத்திய அரசின் கூட்டணி உறுப்பினரான ஆந்திர முதல்வரும் இந்த நடவடிக்கைக்கு உடனடி எதிர்ப்பு தெரிவித்திருப்பது ஆறுதலான விஷயம்.

அனைத்துத் துறைகளிலும் அன்னிய முதலீடு அனுமதிக்கப்படும்போது பத்திரிகைத் துறை மட்டும் எதற்காக விதிவிலக்கு பெற வேண்டும்? என்றொரு வாதம் முன் வைக்கப்படுகிறது.

பிற துறைகளைப் போல் பத்திரிகைத்துறை என்பது வெறும் வியாபாரம் அல்ல. ஜனநாயக அமைப்பின் நான்காவது தூணாக, அதனைப் பாதுகாத்து, மக்களின் சிந்தனையைத் தூண்டி, கருத்துருவாக்கத்துக்குப் பொறுப்பேற்று வந்துள்ளன பத்திரிகைகள். சுதந்தர இயக்கத்தின்போது பத்திரிகைகள் ஏற்ற பொறுப்பும் பங்களிப்பும் மிக அதிகம். எத்தனையோ குறைபாடுகள்




இருந்தாலும் இன்று இந்திய பத்திரிகையுலகம் இந் நாட்டின் மெய்க் குரலாக ஒலித்துக்கொண்டுதான் இருக்கிறது.

அன்னியர் முதலீடை அனுமதிப்பதன் மூலம் இந்த மெய்க்குரல் வலுவிழந்து போக வாய்ப்பு ஏற்படுத்துகிறோம்.

26 சதவிகித அன்னிய முதலீடுதான் அனுமதிக்கப்படும் என்பதால் கட்டுப்பாடு உரிமை இந்திய முதலீட்டாளர் கையை விட்டுப் போகாது; அவர் வைத்ததே சட்டமாக இருக்கும் என்றும் வாதிடப்படுகிறது.

சட்டரீதியாக இந்த வாதம் எடுபடுமேயொழிய நடைமுறை என்பது வேறாகவே இருக்கும். இருபத்தாறு சதவிகிதம் வரை முதலீடு செய்யத் தயாராயிருக்கும் அன்னியர்கள், அதனை எந்த நிபந்தனையுமின்றி வழங்கிவிடப் போவதில்லை.

அனுமதிக்கப்பட்ட முதலீடின் அளவை அதிகரிப்பதன் மூலம் அன்னிய முதலீடு தொகையைப் பெருக்கிக் கொள்ளலாம். டாலர் மதிப்பில் பார்த்தால் முதலீடு மிகப் பெரிதாக இருக்கும்.

மேலை கலாசாரம் என்பதே மனிதர்களை நுகர்வோராகப் பார்ப்பதுதான். ஒரு மிகப் பெரிய 'கன்ஸ்யூமர் மார்க்கெட்' இந்தியாவில் உள்ளது என்கிற நம்பிக்கையில்தான் முதலீடு செய்ய முன் வருவார்கள் அயல்நாட்டினர். இதன் விளைவாக, பத்திரிகைகளின் உள்ளடக்கம் வியாபார ரீதியாக மாறும். அங்கும் இங்கும் நீர்த்துப் போயிருக்கும் இந்திய இதழியல் கலாசாரம் ஒரேயடியாகக் கெட்டு குட்டிச் சுவராகிவிடும். சமுதாயத்துக்குப் பெரும் பாதிப்பு ஏற்படும்.

இன்டர்நெட், தொலைக்காட்சி மூலமாக ஏற்கெனவே அன்னிய கலாசாரம் நாட்டுக்குள் நுழைந்துவிட்டது; பத்திரிகைகளில் அன்னிய முதலீடு காரணமாகப் புதிதாக எந்த கலாசார அச்சுறுத்தலும் ஏற்படாது என்றும் வாதிடுகிறார்கள்.

நம் நாட்டில் இன்டர்நெட்டும், தொலைக்காட்சியும் சென்றடையும் ஜனத்தொகை, அச்சு ஊடகம் அடையும் மக்கள் தொகையை ஒப்புநோக்க மிகக் குறைவு. நாளிதழ் வாசிப்போரின்




எண்ணிக்கை ஜனத்தொகையைக் காட்டிலும் வேகமாகப் பெருகிவருவதாகப் புள்ளிவிவரங்கள் கூறுகின்றன.

மேலும், ஒரு தவறு மற்றொரு தவறு நிகழாமல் தடை செய்ய உதவ வேண்டுமே தவிர, மற்றொரு தவறை நியாயப்படுத்துவதாகிவிடக் கூடாது.

பத்திரிகைத் துறையில் முதலீடு செய்ய முன்வரும் அன்னிய நாட்டவர், பெரிய, மிகப் பெரிய, நிறுவனங்களுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளவே விரும்புவார்கள். சிறிய, மத்திய ரக நிறுவனங்களில் முதலீடு செய்ய முன் வர மாட்டார்கள். பெரிய மீன் சின்ன மீனை விழுங்கிவிடும் கதையாக, இந்தச் சிறு, மத்திய ரக நிறுவனங்களைப் பெரிய நிறுவனங்கள் விழுங்கிவிடும். இவை பெரும்பாலும் இந்திய மொழிப் பத்திரிகைகளாகவே இருக்கும். இவற்றை வாசிப்போர் பெரும்பாலும் கிராமப்புற மக்களாகவே இருப்பர். முதல் அல்லது இரண்டாம் தலைமுறை எழுத்தறிவாளர்களாகவும் இருப்பர்.

இத்தகைய மக்கள் செய்திகளைத் தரம் பிரித்து ஆராய்ந்து ஏற்கும் பக்குவம் பெற்றவர்கள் இல்லை.

அன்னிய ஆதிக்கம் அதிகரிக்க, அதிகரிக்க, பத்திரிகைகளில் வெளியாகக்கூடிய அபாயமான, தரக் குறைவான, கேளிக்கை சார்ந்த விஷயங்களை நிராகரிக்கக்கூடிய முதிர்ச்சி இந்தியாவின் பெரும்பான்மை வாசகர்களுக்கு இராது.

இத்தகைய சூழ்நிலையில், சுதேசி முழக்கமிட்டு வரும் நமது மத்திய அரசு, இப்படி ஒரு முடிவை எடுத்திருப்பது பத்திரிகைத் துறைக்கு விரோதமானது மட்டுமல்ல; மக்கள் விரோதமானதும்கூட.

ஓரிரு பத்திரிகை நிறுவனங்கள் அரசின் முடிவை ஆதரிக்கின்றன என்பது எந்த வகையிலும் ஆறுதல் இல்லை. இந்த நிறுவனங்கள் சொல்வதுபோல் ஆரோக்கியமான தொழில் போட்டிக்கு இம் முடிவு வழி வகுக்காது. மாறாக, ஆரோக்கியமற்ற வியாபார போக்குக்கே பாதை அமைக்கும். ○

# வட்டமேஜை

## 'தலை'க்குத் தலை!

📨 விக்கிரமன் தன் 'ஃபார்முலா' கதையை புதிய மொந்தையில் பழைய 'கள்'ளாகத் தந்து அரைத்த மாவையே அரைத்து அதைக் கற்பூரம் என்று சொல்வது விந்தை! குடும்பத்துடன் பார்க்கலாம் என்பதைத் தவிர புதிதாக ஏதும் அவர் படங்களில் கிடையாது என்பதே உண்மை.

மயிலாடுதுறை, எஸ்.தாண்டவன்

📨 பல பிரச்னைகள் இருந்தும் ஜனநாயகம் தழைப்பது பற்றிய கேள்விக்கு, தராசு பதில் பளிச்!

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்



📨 இயக்குநர் விக்ரமனின் பேட்டி மயிலிறகின் இதத்தை அளித்தது. அவரது திரைப்பட வாழ்க்கைக்கு வசந்தமேற்படுத்திய புதுவசந்தம் திரைப்பட ஸ்டில்லைப் பிரசுரிக்க மறந்து விட்டீர்களே!

நெய்வேலி, எஸ்.ஸ்ரீகாந்த்





📨 மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு மேயரை முன் தேதியிட்ட ஒரு சட்டத்தின் மூலம் கொல்லைப் புறமாக வெளியேற்றிய ஜெ.வின் உள்நோக்கச் செயலைத் தோலுரித்துக் காட்டிய உமது 'தலை'யங்கத்துக்குத் 'தலை' வணங்குகிறேன்.

திருவாரூர், எஸ்.பாலச்சந்தர்



📨 'கமலவேலன்' 'கை' வண்ணத்தில் 'பை' சிறுகதை ஒரு சாதாரண மனிதனின் எண்ணங்களை அழகாகப் பிரதிபலித்தது.

சென்னை, மயிலை கோபி

📨 கண்பார்வை இழந்துவிட்ட வேதனையிலும், சோதனைகளைக் கடந்து, வெற்றிகரமாகத் தொழில் நடத்திவரும் டாக்டர் பரமேஸ்வரனின் சாதனை நம்பிக்கை ஒளி தந்தது.

மதுரை, வீ.பா.கிருஷ்ணன்

📨 'பதவியிழப்பைத் துணிந்து ஏற்கும் மனப்பக்குவத்துக்கு வந்துவிட்டார் ஸ்டாலின்' - என தெள்ளத் தெளிவாகக் காட்டியது அவரது பேட்டி!

சிதம்பரம், த.கு.பா.பட்டுதுரை

📨 வாசகர்கள் கலக்கும் 'தேன்கூடு' பல அறிய விஷயங்களைத் தெரிந்து கொள்ள உதவுகிறது. அந்தப் பகுதி இன்னொரு ரீடர்ஸ் டைஜஸ்ட்.

ஒட்டன்சத்திரம், செ.ரா.ரவி

📨 துபாய் என்றாலே பெட்ரோல் கிணறும், கடத்தல் விவகாரங்களும் நினைவில் நிற்கும் வேளையில் இப்படிப்பட்ட கலையம்சம் மிக்க நிகழ்வுகளும் நடைபெறுகின்றன என்பது புதிய தகவல்.

ஊத்தங்கரை, கவி.செங்குட்டுவன்

📨 ஜனாதிபதி தேர்தலுக்கு அப்துல்கலாம் ராக்கெட்டிலும், லட்சுமி அம்மாள் மாட்டு வண்டியிலும் செல்லும் கார்ட்டூன் சூப்பர்ப்.

கோவை, டி.ஜெய்சிங்

📨 சாதனை புரியும் காவல் துறையைப் பாராட்டுவதில் கல்கி எப்போதும் முந்திக் கொள்கிறது. தொடரட்டும் தங்கள் பணி!

சென்னை, ஆர்.கே.திருப்பதிரங்கன்



'''கோட்டை முதல் கோட்டை வரை'ங்கிற உங்க பயணக் கட்டுரை எதைப் பற்றியது?''

(1)




(2)

''இன்ஸ்பெக்டர் ஐயா... ரவுடி ராக்கப்பன் என்னோட பர்ஸைப் பிடுங்கிட்டு ஓடுறான். பிடிங்க...''

''பர்ஸ்ல எவ்வளவு பணம் வைச்சிருந்தீங்க...?''

''எதுக்குக் கேக்கறீங்க?''



# திருப்புங்க! எல்லாமே சிரிப்புங்க!

''எல்லா முடிவும் ஆரம்பித்திலிருந்து துவங்குகிறது. ஆனால் எல்லா ஆரம்பமும் முடிவதில்லைனு தத்துவமா பேசறாரே, யார் அவர்?''

(3)

''கல்யாணப் பத்திரிகையில் 'கண்டிப்பாக அன்பளிப்பு வழங்கக் கூடாது'னு போட்டது தப்பாப் போச்சு.''

''என்ன ஆச்சு?''

(4)



"சொந்த ஊரான அருப்புக்கோட்டையிலிருந்துக் கிளம்பி புனித ஜார்ஜ் கோட்டைக்கு முதல்வரிடம் மனு கொடுக்கப் போன அனுபவம் பற்றி எழுதியது."

- உ. ராஜாஜி

1






2

"மாமூல் கம்மியா கொடுத்தான்னா அடி பின்னியெடுக்கத்தான்...!"

- அன்னூர் அருள்மூர்த்தி



3

"பாவம், சீரியல் பார்த்துப் பார்த்து மனநலம் பாதிக்கப்பட்டுட்டாரு..."

- வந்தவாசி ஜெயக்குமார்

"கூட்டத்தைச் சமாளிக்க முடியலை"

- என். உஷாதேவி

4



# இது வேறு மழை

"பூவுக்கெல்லாம் சிறகு முளைத்தது எந்தன் தோட்டத்தில்.."

நினைவுகளை உருக்கி நெஞ்சத்தை மிதக்க விடுகிற இசை. உணர்வுகளின் மென்மைப் பிரதேசங்களை உயிர்ப்பிக்கிற ஓசை. இதய இழைகளை இன்பத்தில் நெய்யும் சங்கீத மாயம்.

"விண்மீன் எல்லாம் நிலவாய்ப் போனது எந்தன் வானத்தில்.."

அசைந்து கொண்டிருந்த தலைகளின் பாராட்டு ஆமோதிப்பில் இறங்கிப் போய்ப் பாடிக் கொண்டிருந்தான் சரண்.

ஆடிட்டோரியம் நிரம்பிக் கிடந்தது.

முதல் வரிசை தீப்தியின் பாதங்களில் லயம் மாறாத மெல்லிய தாளம். அடிக்கொரு தரம் மேடையிலிருந்த சரணின் பார்வை தீப்தியிடமிருந்து ஒரு புன்னகையை வாங்கிச் சேகரித்துக் கொண்டிருந்தது.

கடைசிப் பாடல் முடிந்து, ஒன்ஸ் மோர்களும் ஒரு வழியாக முடிவு பெற்றன.

"நாளைக்கு நான் கொல்கத்தா போறேன்.." - பைக்கில் சரணின் பின்னால் தொற்றியபடி அறிவித்தாள் தீப்தி.

"ப்ரோகிராம் முடிஞ்சு வர்றேன். அசத்தலாப் பாடினே; வெளுத்து வாங்கிட்டே... அப்டின்னு... நல்லதா நாலு வார்த்தை சொல்லாம ஸ்ட்ரெயிட்டா நீ கொல்கத்தாப் போறதைப் பத்திச் சொல்றியே? என்ன பொண்ணும்மா நீ?"

"உன் பாட்டை நான் கச்சேரிலதான் கேக்கணுமா? அதான் ஓயாமக் கேட்டுக்கிட்டு இருக்கேனே. வீட்டை மாத்தினாதான் எனக்கு உன் பாட்டிலேருந்து விடுதலை.."

சரண் வீட்டு ஜன்னலிலிருந்து தீப்தி தோட்டத்து ரோஜாவை, சுலபமாகப் பறித்து விடலாம். இருவரது வீடுகளும் அடுத்தடுத்தவை. நெருக்கமானவை. தீப்தி சரண் போலவே.

நான்கு வருஷத் தோழமை அவர்களுடையது. நாற்பது வருஷத்தைப் போன்று ஆழமானது. அதிகாலை நேரத்துப் புல் நுனி பனித்துளியைப் போல் அதி தூய்மையானது அவர்களுடைய நேசம்.

"பார். என் குரலும் இளையராஜா, ரஹ்மான் ம்யூசிக்கில் கேக்கத்தான் போகுது. நீ என்கிட்ட ஆட்டோகிராஃபுக்கு வரத்தான் போறே.."

"ரொம்ப அலட்டாதே. போனாப் போகுது. சொல்லித் தொலைக்கிறேன். நீ நல்லாப் பாடினே.. போதுமா?"

"பாராட்டைக் கேட்டு வாங்கிக்க வேண்டியிருக்கு. ம்... சரி விடு. நீ ஏன் கொல்கத்தாவுக்கு?"

"பெங்காலிக்காரன் ஒருத்தன் எங்க கம்பெனி சாஃப்ட்வேர் வாங்கினாம்ப்பா. அது என்ன ஏது எப்படி உபயோகிக்கிறதுன்னு அவனுக்கு எதுவும் புரியலையாம். சொல்லிக் கொடுக்கிறதுக்காகப் போறேன். நாளைக்கு எர்லி மார்னிங்கே கிளம்பறேன். அதுக்கு முன்னாடி உன்னைப் பாக்கணும்னுதான் கச்சேரிக்கே வந்தேன்."

"ஏன்? வீட்டுக்கு வரவேண்டியது தானே?"

"உன் பாட்டைக் கேக்கணும்னு வந்தேன் பாரு. என்னை.."

"சரி... சரி.. மேட்டர் சொல்லு.."

"என் கம்பெனி கிளையண்ட் ஒருத்தர். அவருக்கு ரஹ்மானோட அஸிஸ்டெண்ட்டைத் தெரியுமாம். நீ அவரைப் போய் பாக்கிறே. இந்தா அட்ரஸ்.." பில்லியனில் இருந்தபடியே சரணின் சட்டைப் பையில் ஓர் அட்டையைச் செருகினாள் தீப்தி.

"ஒண்ணு புரியலை தீப்தி. ஒரு சமயம் என்னை கழுதைக்கு வாத்தியாராப் போன்னு சொல்றே. அப்புறம் எனக்கு சான்ஸ் கிடைக்கணும்னு நீ அல்லாடறே.."

"உனக்கு என்னதான் புரியுது என் மக்கு நண்பா. வீடு வந்துடுச்சு பார். வண்டியை நிறுத்து...."

வழுக்கிக் கொண்டு நின்றது சி.பி.சி. இறங்கிக் கொண்டாள் தீப்தி.

"பை" என்றுவிட்டு திரும்பியவள்,




சட்டென்று நினைவு வந்தவளாக, "சரண், நான் கல்கத்தா போறதை உங்கம்மாக்கிட்ட சொல்லிடு. நாளைக்குக் காலையில் வாக்கிங் போறப்ப தேடப் போறாங்க..!" தன் வீட்டுப் படியேறிப் போனாள்.

"பாட்டு பாட்டுன்னு உயிரை விடு றான். எங்கூட வந்து பிஸினஸைக் கவனிச்சுக்கடான்னா கேக்கிறானா? கச்சேரி கண்றாவின்னு வெட்டியா சுத்திக்கிட்டு இருக்கிறவனை எம்புள்ளைன்னு சொல்லிக் கவே வெக்கமாயிருக்கு..!" கத்திக் கொண் டிருந்தார் அப்பா.

"அதான் ராத்திரி பன்னிரண்டு மணி வரைக்கும் 'சரண் வரட்டும். அவனோட சாப்பிட்டுக்கிறேன்'னு காத்துகிட்டு கிடந் தீங்களாக்கும்.." புன்சிரிப்போடு நொடித்தாள் அம்மா. தர்ம சங்கடத்தை மறைக்கும் வித மாக ஒரு பாசாங்கு கோபப் பார்வை பார்த்து வைத்தார் அப்பா.

மென்னகை படர்ந்தது சரண் முகத்தில்.

டவலில் கையைத் துடைத்துவிட்டு மாடிப்படி ஏறுகையில், "அம்மா!" திரும்பினான் சரண். "தீப்தி கல்கத்தா போறாளாம். காலையில் வாக்கிங் போறப்ப அவளைத் தேடாதே சொல்லச் சொன்னா..."

"கச்சேரிக்கு தீப்தி வந்திருந்தாளா?" அம்மாவின் முகத்திலும் குரலிலும் ஆர்வம் பந்தல் போட்டது.

"ஆமாம்"

அம்மாவின் ஆர்வத்தைக் கவனிக்காதவன் போல், தீப்தியின் வருகை தனக்கு ஒன்றும் அவ்வளவு முக்கியமான விஷயமில்லை என்பது மாதிரி ஒற்றைச் சொல்லில் அசிரத்தையாக பதிலளித்துவிட்டுப் படியேறிப் போனான் சரண்.

புரிதலுடன் கூடிய புன்னகையைப் பரிமாறிக் கொண்டார்கள் சரணைப் பெற்றவர்கள்.

மாலையும் கழுத்துமா வந்து நிக்காம இந்த சரணும் தீப்தியும் நம்மகிட்ட இன்ஃபார்ம் பண்ணினா சரிதான்...

**"ஹா**ய் தீப்தி" கொல்கத்தாலேருந்து எப்ப வந்தே? பெங்காலிக்காரனுக்கு ஒழுங்காப் பாடம் சொல்லிக் கொடுத்தியா?"

கேள்விகேட்ட சரணிடம் இருந்த உற்சாகம் அடுத்த வீட்டு வாசலில் அலுவலகம் புறப்பட்டுக் கொண்டிருந்த தீப்தியிடம் இல்லவே இல்லை.

"ம்" ஒற்றை எழுத்தில் பதில் சொன்னாள். "உங்கிட்ட பேசணும். ஈவ்னிங் ஆபிஸுக்கு வர்றியா?" குரலும் முகமும் இறுகிக் கிடந்தது.

"ஷ்யூர்" என்றான் சரண்.

**தா**யற்றக் குழந்தையினுடையது மாதிரி, தீப்தியின் முகம் களையைத் தொலைத்துவிட்டு பொலிவற்றுக் கிடப்பதன் காரணம் என்னவாக இருக்கும்? சரணின் சிந்தனையை அரித்தது கேள்விக் கறையான்.

அலுவலக வாசலில் தயாராகக் காத்திருந்தாள் தீப்தி.

"எங்கே?"

"பீச்!"

**வி**ரட்ட விரட்டக் கொஞ்சம் கூட கோபித்துக் கொள்ளாமல் திரும்பத் திரும்ப வந்து கரையைக் காதலித்துக் கொண்டிருந்தன அலைகள்.

"வீட்டுக்கு கெஸ்ட் வந்திருக்காங்க சரண்..." அறிவித்த தீப்தியின் வெளுத்த முகம் சரணுக்குப் புதிது.

"சரி!"

"யாருன்னுதான் கேளேன்!"

"யாரு?"

"என் அத்தையும், மாமாவும்..."

கர்நாடக கச்சேரி கேட்கப் போன இடத்தில் கானாப் பாட்டு கேட்க நேர்ந்தது மாதிரி எதுவுமே புரியவில்லை சரணுக்கு. மௌனமாக இருந்துவிட்டான். தீப்தி தொடர்ந்தாள்.

"அவங்களுக்கு ஒரு மகன். என்னை மாதிரி கம்ப்யூட்டர் இன்ஜினியர். ஆஸ்திரேலியாவில் இருக்கானாம்!"

புரியாதது புரியத் தொடங்க நிமிர்ந்து அமர்ந்தான் சரண்.

"சொல்லு" என்றான் தடுமாற்றத்தோடு.

"என்னத்தை சொல்ல? நீ நினைக்கிறதே தான். அவங்க மகனுக்கு என்னைப் பெண் கேட்டு வந்திருக்காங்க."

சரணிடம் ஆழமான அமைதி. விநாடிகள் கனமாக நகர்ந்தன. காற்று கலைத்த கேசத்தைச் சரி செய்து கொண்ட சரண், தீப்தியை ஏறிட்டான். அவள் பார்வையில் ஆயிரம் விசாரணைகள். விழிகளில் தெரிந்த உணர்ச்சிகளின் கேள்விகள் சரணைக் கலைத்தன.

தொண்டையைச் செருமிக் கொண்டான்.

"ஒரே தொழில். பர்ஃபெக்ட் மேட்ச். கல்யாணம் பண்ணிக்க வேண்டியதுதானே தீப்தி?"

சன்னமாக அடித்துக் கொண்டிருந்த சிற்றலைகள் மறைந்து உலுக்கிப் போடும் பேரலை வீசியது தீப்தியின் பார்வையில். அதன் தாக்கம் சரணைக் கிழித்தது. தீப்தியைத் தவிர்த்தான். கடலை வெறித்தான்.

அழுத்தமான மௌனத்தில் கரைந்தன நிமிஷங்கள்.

ஒற்றைக் கண்ணீர்த் துளி தீப்தியின் விழியோரத்தில் எட்டிப் பார்த்தது.

**"ஒருவருக்கு ஒரு பதவின்னு சட்டம் கொண்டு வந்ததுல உங்களுக்கு ரொம்ப மகிழ்ச்சியா? எதனால?"**

**"நான் இப்ப எந்தப் பதவியும் இல்லாம இருக்கேன்... இந்தச் சட்டப்படி எனக்கு ஒரு பதவியைக் கொடுத்தாகணுமில்ல..!"**

**- வெள்ளாளப்பட்டி சந்தோஷ்**

சரண் தன் பார்வையைக் கடலிடமிருந்து திருப்பினான்.

நங்கூரம் பாய்ச்சியது போல் பார்வையை அகற்றாமல் அப்போதும் அவள் ஈரக் கண்களோடு அவனையே பார்த்துக் கொண்டிருக்க...

வலித்தது சரணுக்கு. சட்டென்று திரும்பிக் கொண்டான். அவனின் தவிப்பு தீப்தியின் இதழோரம் ஒரு நம்பிக்கைப் புன்னகையை மலர்த்தியது.

அருகில் ஊன்றிக் கிடந்த சரணின் கரத்தை தன் கைகளுக்குள் எடுத்துக் கொண்டாள்.

"சரண், டோண்ட் யூ திங்க் வீ ஆர் இன் லவ்?" மிருதுவாகக் கேட்டாள்.

விருட்டென்று தன் கையை தீப்தியிடமிருந்து உருவிக் கொண்டான் சரண்.

"ரப்பிஷ். உளறாதே!" என்றான்.

"நான் பாட்டு, சினிமான்னு அலையறவன். என் திசையே வேற. உன்னுது வேற. நீயும் நானும் கல்யாணம் பண்ணிக்கிட்டா வண்டிக்கு முன் பக்கம் ஒரு குதிரையும் பின்னாடி ஒரு குதிரையையும் மாட்டி ஓட்டற மாதிரி இருக்கும். ஒரே சாலையில் போக வேண்டிய ரெண்டு பேர் இணைஞ்சாதான் சாதனைகள் சாத்தியம். இல்லேன்னா எதையுமே சாதிக்க முடியாம இரண்டுபேருமே ஏமாந்து போக வேண்டியதுதான். இரண்டு பேரோட அலைவரிசையும் ஒண்ணா இருக்கணும். அப்பதான் வாழ்க்கை இனிக்கும்."

தீப்தி மௌனமாக இருந்தாள்.

"வீ ஆர் ஜஸ்ட் ஃப்ரெண்ட்ஸ். அவ்வளவுதான். நீ உன் அத்தைப் பையனைக் கல்யாணம் பண்ணிக்க. ஆஸ்திரேலியா போ. ஜாவாவில் ப்ரோகிராம் பண்ணுங்க. டாலரில் சம்பாதிங்க. அதுதான் சரி."

தீப்தி மௌனம் கலைந்தாள்.

"ம்... அலைவரிசை...! சரண், நீ ரொம்ப தெளிவாப் பேசறே..." என்றாள் மெதுவாக.

சரணை நிம்மதி சூழ்ந்தது. மனசு குதூகலம் கண்டது. தீப்தியின் மனத்தை மாற்ற முடிந்துவிட்ட குதூகலம். அவளுக்கு அமைய இருக்கிற நல்லதொரு வாழ்க்கைக்கு அவளை ஒப்புக் கொள்ள செய்துவிட்ட திருப்தி. ஒரு நண்பனாக ஆனந்தப்பட்டான் சரண். ஆனால் ஒரு காதலனாக... இதயத்தில் அக்னிப் புள்ளிகள். நான்கு வருடங்களாக இதயத்தின் ஒவ்வொரு துடிப்பும் உச்சரித்த உணர்வு மந்திரம் எரிந்து பொசுங்கியது. வேதனைகளை உள்ளேயே புதைத்துக் கொண்டான்.

"ஒண்ணு மட்டும் சொல்லு சரண்..." தீப்தியின் கேள்வியில் வரவழைக்கப்பட்ட நிதானம். அதீதமாக...

"என்ன?"

"பாரதியார் எந்த அலைவரிசை? செல்லம்மா எந்த அலைவரிசை?"

தடுமாறினான் சரண்.

"தெரியாமத்தான் கேட்கிறேன். சொல்லு சரண். பெரியார் எந்த அலைவரிசை? மணியம்மை என்ன அலைவரிசை?"

சரணிடம் பதிலில்லை.

"சரி. அதை விடு. இருபத்தியஞ்சு வருஷத்துக்கு மேல ஒண்ணா குடும்பம் நடத்திக்கிட்டு இருக்காங்களே... உன்னைப் பெத்தவங்களும், என்னைப் பெத்தவங்களும். அவங்க அலைவரிசையெல்லாம் எந்த ரகம்?"

"ஜாதி, மதம், அந்தஸ்து, தொழில், ரசனை. இதெல்லாம் ஒரே மாதிரி இருக்கணும்னு அவசியமே இல்லை சரண். கணவனுக்கும் மனைவிக்கும் ஒரே மாதிரி இருந்தே ஆக வேண்டிய அலைவரிசை ஒண்ணு இருக்கு. அது என்ன தெரியுமா? அன்பு... அது நம்மகிட்ட இல்லேன்னா சொல்றே? நிஜத்தை சொன்னா நிறையவே இருக்கு. ஆழமா இருக்கு. அதைவிட வேற என்ன வேணும்? சும்மா அலைவரிசை மண்ணாங்கட்டின்னு பினாத்திகிட்டு உன்னை நீயே ஏமாத்திக்காதே. என்னையும் ஏமாத்திடாதே..."



மனசுக்குள் மழையடித்தது சரணுக்கு. காதல் ஜெயித்துவிட்ட மகிழ்ச்சி மழை. அதன் ஈரம் பார்வையிலும் தெறித்தது. மறைத்துக் கொள்ளவில்லை அவன். ●

பார்க்கும் இடமெல்லாம் பளீரென்று மின்னும் வெண்பனிமலைச் சிகரங்கள். பாதை எங்கும் படர்ந்திருக்கும் பனிக்கட்டிகள். ஆங்காங்கே உருகி ஓடும் வெள்ளியாய் நீரோடைகள். முந்தைய ஜீப்கள் போன டயர் தடத்தின் மீது கவனமாகப் போய்க் கொண்டிருக்கும் நமது டாடா சுமோ. பச்சை வண்ணத்தில் ராட்சத வடிவில் ராணுவ வண்டிகள். சங்கிலி சட்டை அணிந்திருக்கும் அதன் சக்கரங்கள் கூட பிரேக் போடும் போது பனியில் வழுக்கும்போது ஏற்படும் கிலி. பளிச்சென்ற வெயிலில் நமது ஸ்வெட்டர்களைத் தாண்டி இதமாக வருடும் குளிர்.

சிக்கிம் மாநிலத்தில் தலைநகரான காங்டாக்கிலிருந்து சுமார் 60 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள 'நாதுல்லா பாஸ்' என்ற இந்திய _ சீன எல்லைப் பகுதிக்குப் போய்க் கொண்டிருக்கிறோம். 14,400 அடி உயரத்தில் இந்தியாவுக்கும், சீனாவுக்கும் இடையே திபெத்திய பீடபூமியில் அமைந்திருக்கும் இந்த எல்லைப் பகுதியை இப்போது டூரிஸ்ட்கள் பார்க்க விசேஷ பாஸ் வழங்கி அனுமதிக்கிறார்கள்.



• பாபா ஆலயம்

பல நூற்றாண்டுகளாக இந்திய - சீன வர்த்தகம் இந்தக் கணவாய் வழியாக நடந்து வந்திருக்கிறது. நமது வர்த்தகர்கள் நூற்றுக் கணக்கான குதிரைகளில் சரக்குகளைக் கொண்டு போய் சீனாவில் விற்று, அங்கிருந்து சீனப் பொருட்களுடன் திரும்பியதாகச் சொல்லுகிறது சரித்திரம். 1962வரை திபெத்தின் எல்லையாகவும், பின்னர் சீனாவின் எல்லையாகவும் மாறிப் போன இந்த எல்லைப் பகுதி மிக அமைதியானது. இந்திய _ சீனப் போரில்கூட பிரச்னையில்லாத அமைதி










• சவாரிக்கு ரெடி!




• பளிங்குக் கல் வேண்டுதல்கள்!

யான பிரதேசமாக இருந்தது. ஞாயிற்றுக் கிழமை மற்றும் வியாழக் கிழமைகளில் இந்தியத் தபால் துறையினர் எல்லையைக் கடந்து சென்று, சீனத் தபால்துறையினருடன் தபால்களைப் பரிமாறிக் கொள்ளுமளவுக்கு அமைதியான பிரதேசம். ஆனாலும், எல்லா எல்லைப் பகுதிகளைப் போல மிகுந்த பொருட் செலவில் நமது ராணுவம் இந்தப் பகுதியைப் பாதுகாத்து வருகிறது. படர்ந்து பரவிக்கிடக்கும் பசுமையான டீ எஸ்டேட்களையும், அடர்ந்த காடுகளையும் கடந்து இரண்டு, மூன்று மலைகள் வழியாக இந்த இடத்துக்குப் போக நல்ல சாலை இருக்கிறது. இந்திய ராணுவத்தின் ஓர் அங்கமான எல்லைப் பாதைகள் நிறுவனம் அமைத்துத் தந்திருக்கும் அருமையான சாலைகளில் ஆங்காங்கே 'You are in a valley - not on a rally' 'Handle my curves gently' என்பது போன்ற



# சீன எல்லையில் பாபா!

கவர்ச்சியான வாசகங்கள்.

மிகப் பயங்கரமாக வளைந்து வளைந்து செல்லும் மலைப்பாதைகள், ஆங்காங்கே அழகான அருவிகள், அடுக்கடுக்காகச் செதுக்கிவிடப்பட்ட தேயிலைத் தோட்டங்கள், தொலைவில் பனிக்கிரீடம் அணிந்த மலைச் சிகரங்கள்.

"இந்திய ராணுவ எல்லையில், நமது ராணுவத்தையே பாதுகாக்கும் வாழும் தெய்வமான பாபாவை நீங்கள் பார்க்கப் போகிறீர்கள். பாபாவிடம் என்ன வேண்டுவது என்பதைத் தீர்மானித்துக் கொள்ளுங்கள்" என்று பேசிக் கொண்டே வந்தார் டிரைவர்.

சினிமாப் பாடல் காட்சிகளில் வருவது போல சட்டென்று காட்சி மாறி முழுவதும் பனிநிறைந்த ஒரு பகுதி.

பார்த்தவுடனேயே 'வாவ்' என்று சொல்ல வைக்கும் ஒரு பெரிய ஏரி. சுற்றிலும் உறைந்த பனி. நடுவிலே தெள்ளத் தெளிவாக நீர். இது சாங்கு ஏரி (Changu Lake). இந்த ஏரி மிகவும் புனிதமானது. இதைக் கடவுளாகவே வழிபடுகிறார்கள். இந்த ஏரியின் நீரை எவரும் தொடவோ, அசுத்தப்படுத்தவோ கூடாது. "போட்டோக்கள் தவிர வேறெதுவும் இங்கிருந்து எடுக்காதீர்கள். உங்களது கால் தடங்களைத் தவிர வேறெதுவும் விட்டுச் செல்லாதீர்கள்" என்று எழுதி வைத்திருக்கிறார்கள். வரும் டூரிஸ்டுகள் இதை மதித்து நடப்பது மனசுக்கு மிகவும் சந்தோஷமாக இருக்கிறது.

"அடுத்ததாக நீங்கள் பார்க்கப்போவது பாபா வாழ்ந்து கொண்டிருக்கும் இடம். உங்களுக்கு அதிர்ஷ்டம் இருந்தால் நீங்கள் அவரைப் பார்க்கவும் முடியும். பல வருடங்களாக நமது ராணுவத்தினரைப் பாதுகாத்துக் கொண்டிருக்கும் இந்த பாபாவிற்கு




அமைக்கப்பட்டிருக்கும் கோவிலுக்கு நீங்கள் போகப் போகிறீர்கள். பல வருடங்களுக்கு முன் அவர் மரணம் அடைந்து விட்டாலும் ஆவி வடிவில் அவர் இங்கு வாழ்ந்து கொண்டு இருக்கிறார். தினசரி அவர் வந்து போகிற அடையாளங்களை, அவரது கசங்கிய படுக்கைவிரிப்புகளிலிருந்தும், திரும்பியிருக்கும் செருப்புகளிலிருந்தும் நாம் தெரிந்து கொள்ளலாம். அவரை மனித வடிவில் பல முறை பார்த்த பலர் இங்கு இருக்கிறார்கள்" என்று நமது டிரைவர் சொல்லிக் கொண்டு வந்தார். விவேக் பாஷையில் சொல்வதானால் 'சற்று ஓவராகவே பில்டப் செய்கிறாரோ' என்று தோன்றியது.

"வெல்கம் டு நாதுல்லா" என்ற நுழைவு வாயில், அதற்கருகில் அடுத்த அனுமதி நேரத்தைக் காட்டி ஒரு பெரிய கடிகாரம். வலதுபுறம் மலைச்சரிவுக்கு நமது கார் மெள்ள இறங்குகிறது. சட்டென்று சமவெளிக்கு வந்தது போல நாற்புறமும் பனிமலை சூழ்ந்திருக்கும் அந்தப்பகுதியில் பளிச் சென்ற மஞ்சளில் 'ஓம்' என்ற ஆரஞ்சுக் கொடியுடன் சிறிய மண்டபம் மாதிரியான இடம். எங்கும் முழு சீருடை அணிந்த ராணுவத்தினர். வரும் பக்தர்களுக்கு, கை கால் நனைத்துக் கொள்ள வெந்நீரும், துடைத்துக் கொள்ள டவலும் தருகிறார்கள்.

இந்த பாபாவின் கோவிலைப் பாதுகாப்பது, பராமரிப்பது எல்லாமே இந்திய ராணுவம்தான். பாதையில் கொட்டிக் கிடக்கும் பனியை அகற்றுவதிலிருந்து, வரும் பக்தர்களுக்குப் பிரசாதம் வழங்குவது வரை எல்லாமே ராணுவத்தினர்தான். உருகும் பனிக்கட்டியில் டியூபைச் சொருகி, அடுப்பில் நீர் கொதித்துக் கொண்டிருக்கும் அண்டாவில் அதைச் சேர்ப்பதிலிருந்து, அப்பழுக்கின்றி அந்தப் பிரதேசத்தை வைத்துக் கொள்ளுவதுவரை நம் ராணுவத்தினரின் சாதுர்யம் தெரிகிறது. நாதுல்லா பாஸில் பணிபுரியும் ரெஜிமென்டின் ஒரு பகுதி வீரர்கள் இந்தப் பணிகளை அன்றாடப் பணிகளாகச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

ஞாயிற்றுக் கிழமைகளில் இங்குள்ள லங்கரில் இலவச சப்பாத்தி விநியோகிக்கப்படுகிறது.

ஹர்பஜன் சிங் என்ற சிப்பாய் 1968ல் சரக்கேற்றிய குதிரைகளுடன் இந்த இடத்தைக் கடக்கும்போது தவறி ஆற்றில் விழுந்து



* துன்பம் தீர்க்கும் தீர்த்தம்

மூழ்கி இறந்து போனார். சில நாட்களில் தம்முடன் வந்த சிப்பாய்களின் கனவில் தோன்றி, தமக்கொரு நினைவுச் சின்னம் ஏற்படுத்தினால் அதில் வாழ்ந்து கொண்டு, ஆபத்து வராமல் பாதுகாப்பேன் எனறாராம். அதை ஏற்று அவருடைய நண்பர்கள் ஏற் படுத்திய நினைவுச் சின்னம் இன்று வழிபாட்டுத் தலமாகி விட்டது. திருப்பி நிறுத்தி வைக்கப் பட்ட துப் பாக்கியின் தலையில் மாட்டிய தொப்பி யுடன் இராணுவ நினைவுச் சின்ன மாக நிறுவப்பட் டிருக்கும் இடத் திற்கு அருகிலுள்ள இந்த மண்டபத் தின் வெளிப்புறச் சுவரில் இந்த சம் பவத்தைக் கல் வெட்டாக்கியிருக் கிறார்கள்.



* பிரசாதம் விநியோகம்

இத்தனை பேரா? என்று வியக்குமளவிற்கு இராணுவத்தினரின் எண்ணிக்கை. இங்கு எல்லா வசதிகளும் இருக்கிறது — ஹெலிபேடிலிருந்து சிறிய ஆஸ்பத்திரி வரை.

ஒரு சிறிய கூடத்தின் நடுவே வைக்கப்பட்டிருக்கும் பாபாவின் படம். அதன் முன்னே எப்போதும் எரிந்து கொண்டிருக்கும் இரண்டு விளக்குகள். சுவரில் சில இந்துக் கடவுள்கள் படங்கள். ஓரத்தில் சிவப்பு உறையிட்ட திண்டு, படுக்கை — இதுதான் பாபாவின் சன்னிதி. அருகில் உள்ள ஓர் அறையில் ஏகப்பட்ட பாட்டில்கள். நீர் நிறைந்த இப்பாட்டில் களின் வெளியே பெயர், தேதி போட்ட ஸ்டிக்கர்கள். குடும்பத்தினருக்காகப் பிரார்த் தித்துக் கொண்டு வந்த நீரை சில நாட்கள் இங்கு வைத்திருந்து, பாபாவின் அருள் பெற்றபின் அவற்றைப் பயன்படுத்தினால், வியாதிகள் குணமாகும்; பிரச்னைகள் தீரும் என்பது நம்பிக்கை.

இங்கு வந்து பணிபுரிந்த ஒவ்வொரு ரெஜிமெண்ட்டும், "பாபா-எங்களுக்கு அருள் செய்யுங்கள்" என்ற வேண்டுதலை தங்கள் ரெஜிமெண்ட்டின் இலச்சினையோடு வரிசை யாகப் பளிங்குக் கற்களில் பதித்திருக் கிறார்கள்.

இந்த சிறிய இடத்தைப் பாதுகாக்க

"தனிமனித, மத நம்பிக்கைகளுக்கு அப்பாற்பட்டது இல் லையா ராணுவப் பணி? அப்படி இருக்கும் போது எப்படி ஓர் இந்துக் கோவிலை ராணு வம் ஏற்று நடத்துகிறது?" என்று அதிகாரி யைக் கேட்டபோது "நமது ராணுவத்தின் மிகப் பெரிய சக்திகளில் ஒன்று நமது வீரர் கள், அதிகாரிகளின் தெய்வ நம்பிக்கை. அது மட்டுமல்லாது பாபா எல்லா மதத்தினருக் கும் சொந்தமானவராக, காக்கும் கடவுளாகக் கருதப்படுகிறார். இந்த வழிபாட்டுத்தலம் உரு வான பின்னர் இங்கு பெரிய அளவில் விபத் துக்களோ, போரோ நடைபெற்றதில்லை என் பதையும் நீங்கள் யோசித்துப் பார்க்க வேண் டும். இங்கு எல்லா மதத்தைச் சேர்ந்த பல ரெஜிமெண்டுக்களும் வந்து பணியாற்றியிருக் கின்றன" என்று அவர்கள் சொல்வதற்கு சாட்சியாக அங்கு பொறிக்கப்பட்டிருக்கும் ஓம், சிலுவை, பிறையுடன் கூடிய நட்சத்திர மதச்சின்னங்கள் புனிதமாய் ஒளிருகின்றன.

- ரமணன்

படங்கள்: ஜெ.ஜி.

# வாஸந்தி

ஆஸ்பத்திரியின் தாழ்வாரத்தின் கைப்பிடிமேல் சாய்ந்து கொண்டு வேடிக்கை பார்ப்பது அத்தனை உற்சாகமான விஷயமில்லை என்று சரவணன் நினைத்துக் கொண்டார். வார்டுக்குள்ளும் அதிக நேரம் நிற்கத் தயக்கமாக இருந்தது. சற்றுமுன் வரை ராஜா படுத்திருந்த அறையில்தான் இருந்தார். எட்டு பேர் படுத்திருந்த இடம் விசாலமானதாக இருந்தாலும் அவருக்கு ஜெனரல் வார்டு போலத் தோன்றிற்று. ஒவ்வொரு படுக்கையருகிலும் இருவருக்குக் குறையாமல் நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். அவருக்கு மூச்சு முட்டி விடும் போல் இருந்தது. வேறு வார்டுகளில் இடமே இல்லை என்றார்கள். ஸ்பெஷல் வார்டில் பல ரகங்கள். சாதாவிலிருந்து டீலெக்ஸ், ஸ்வீட் என்று தினத்திற்கு ஆயிரத்திலிருந்து பத்தாயிரம் ரூபாய் வரை கட்டணம் வாங்கும் ஆஸ்பத்திரி. எல்லாம் நிரம்பியிருக்கிறது என்கிறார்கள் பெருமிதத்தோடு; ஐந்து நட்சத்திர ஹோட்டலில் எல்லா அறைகளும், புக்ட் என்று சொல்வதுபோல... பார்க்கவும் ஐந்து நட்சத்திர ஹோட்டலைப் போலத்தான் இருந்தது.

சரவணனுக்கு ஆச்சரியமாக இருந்தது. எந்த இடத்துக்குச் சென்றாலும் எப்படி இப்படிக் கூட்டம் வருகிறது? வியாதிக்கும் கூட்டம், கேளிக்கைக்கும் கூட்டம். எத்தனைச் செலவுக்கும் மந்திரம் போட்டது போல காசு விழுகிறது. எந்தக் கட்டண உயர்த்தலுக்கும் செலவு செய்வது நிற்பதில்லை. குறைவது கூட இல்லை. எப்படி செலவழிக்கிறார்கள் என்று புரியவில்லை. முன்பு வேலை விஷயமாக ஒரு மாதம் தில்லியில் இருந்தபோது சஃப்தர்ஜங் ஆஸ்பத்திரிக்கு சென்ற அனுபவம் அவருக்கு உண்டு. வார்டு தரையிலும் ரேழியிலும் நோயாளிகள் படுத்திருப்பார்கள். இது ஏழை நாடுதான் என்கிற நினைப்பு ஒரு விதப் பாதுகாப்பைக் கொடுத்ததாக அவர் நினைத்துக் கொண்டார். இப்பவும் சஃப்தர்ஜிங்கில் அப்படிப்பட்ட காட்சிகள் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. இங்கு மத்ய வர்கத்திலிருந்து மகாராஜாக்கள் வரை நடமாடுகிறார்கள். பேதம் பார்க்காமல் வரும் வியாதிகள். உறவினர்களின் முகக் கோடுகளில் ஒரே மாதிரியான கவலை ரேகைகள். எமனின் காலடியில் காசை வீசத் தயாராக இருக்கும் கனவான்கள். அதிகாரத்தின் மூலம் அந்திம நேரத்தை ஒத்தி வைக்கத் துடிக்கும் மந்திரிகளின் குடும்பங்கள்.

"மந்திரிகள் பேஷன்டாக வருகிறார்கள் என்றால் எங்களுக்குக் கவலை" என்றார் டாக்டர் நேற்று பேச்சு வாக்கில். "நாங்கள் எல்லாருக்கும் ஒரேவிதமாக அக்கறையோடுதான் மருத்துவம் பார்க்கிறோம். நாங்கள் தேவதைகள் இல்லை. ஏதாவது கோளாறு ஆகிவிட்டால் நாங்கள் கவனித்துக் கொண்டது போதாது என்று பாராளுமன்றத்தில் கூச்சல் போடுவார்கள். அந்தப் பழியிலிருந்து நாங்கள் மீள்வதற்கு ரொம்ப காலம் ஆகும். மக்களின் நம்பிக்கையினால்தான் இந்த ஆஸ்பத்திரி ஓடுகிறது." மத்திய அமைச்சர் ஒருவர் அங்கு இறந்து போனதைத்தான் அவர் பெயர் குறிப்பிடாமல் சொல்கிறார் என்று சரவணன் புரிந்து கொண்டார்.

"சந்தேகம் என்பது விஷத்தைவிடக் கொடுமையானது" என்றார் சரவணன் வேறு ஏதோ ஞாபகத்தில், 'தனி நபர் வாழ்க்கையில் பூகம்பத்தை ஏற்படுத்தும் - உறவு முறியும். மீண்டும் ஒட்டுவது தெய்வாதீனத்தினால்தான் - ஏதாவது ஒரு அற்புதத்தால்...'

"ஆனால் இப்பொழுது நாங்கள் மீண்டு விட்டோம்" என்றார் டாக்டர் ஒரு கெட்ட கனவிலிருந்து விழித்துக் கொண்டவர்போல,

"ஒரு பெட் காலியில்லை."

"தனி நபர் வாழ்க்கையிலேயே மேடு பள்ளங்கள் இருக்கும்போது ஸ்தாபனங்களில் ஏற்படாதா?" என்றார் சரவணன். ஒரு ஞானி



யைக் கண்டு கொண்ட பரவசம், டாக்டரின் கண்களில் தென்பட்டதாக சரவணன் நினைத்துக் கொண்டார்.

இப்பொழுது எதைப் பேசினாலும் வேதாந்தமாகப் பேசத் தோன்றிற்று. இப்போது அவர் வாழ்வில் ஏற்படும் சம்பவங்களுக்கு அவரால் வேறு விதமாக விளக்கம் தர முடியவில்லை. அமைதியில்லாமல் தவித்து வந்த அவர் மனதுக்கு ஆறுதல் தர வேண்டும் என்கிற ஒரே நோக்கத்தோடு எந்த தேவதையோ தட்டிவிட்ட மந்திரக்கோலின் மாயாஜாலமாகத்தான் தோன்றிற்று. 'தகனம் பண்ணியாச்சு' என்று நிராகரித்துவிட்டிருந்த உறவு உயிர்த்தெழுந்துவிட்டது அவர் எந்த முயற்சியையும் எடுக்காமலே. இன்னமும் நினைக்கும் போதெல்லாம் ரணமாக மனத்தைத் தைக்கும், அவமானப்படுத்தும், குற்ற உணர்வை ஏற்படுத்தும் அந்தக் கசப்பான அனுபவத்தின் நினைவேயில்லாமல் இன்று புதிதாய்ப் பிறந்ததுபோல உயிர்த்தெழுந்த உறவு. ஆனால் எதுவுமே நடக்காத உணர்வுடன் அவரைப் பார்த்து ராஜா வெள்ளையாகச் சிரிக்கும்போதும்

# பொய்யில் பூத்த நிஜம்



## 14

பாசத்துடன் பேசும்போதும் அவருள் ஒரு கூச்சம் பரவுகிறது. தான் கக்கிய சாபங்களெல்லாம் நினைவுவந்து வெட்கத்தில் அடி வயிறு துவண்டு போகிறது. அதனாலேயே அவன் எதிரில் அதிக நேரம் நிற்க முடிவதில்லை. அவருக்கும் சேர்த்துவைத்து காமாட்சி பேசுகிறாள். "அவன் மறந்து போன விஷயத்தை அவனுக்கு நினைவுபடுத்தாதே" என்றார் அவர், கட்டளையிடுவதுபோல, தனது இயலாமையை மறைக்க.

''எனக்கென்ன பித்து பிடிச்சிருக்கா?'' என்று அவன் பதிலுக்குக் கேட்டாள். உடனடியாகக் கண்ணீர் பெருக்கினாள். ''என் பிரார்த்தனைக்குச் செவி சாய்க்கிற மாதிரி அந்த ஏழுமலையான்தான் அவனுக்கு இந்த மறதியைக் கொடுத்திருக்கான்.'' இந்த மறதி இப்படியே இருக்கட்டும் என்று வேண்டிக் கொள்வதாகவும் சொன்னாள். ஒரு பக்தையின் வேண்டுதலுக்கெல்லாம் கடவுள் இப்படித்

திட்டமிட்ட பலனாகக் கொடுப்பானா என்று அவருக்குத் தெரியவில்லை. ஆனால் அவள் மூர்க்கமாக நம்பினாள். 'அஞ்சு வருஷ நினைவு ஏன் மறக்கணும்? ஒரு வருஷம் மட்டும் மறந்து போயிருந்தா, நமக்கு லாபமில்லே;' என்று அவள் வாதிடும்போது பிரமிப்பாகத்தான் தோன்றிற்று. அந்த லாபத்தில் பெருமளவு தனக்குப் பங்கு உண்டு என்கிற நினைப்பில், காமாட்சியிடம் மெல்லிய கனிவு சுரந்தது அவருக்குள். காமாட்சியின் தீவிர வேண்டுதலே இந்த மாற்றத்திற்குக் காரணம் என்று நம்பத் தோன்றிற்று.

"அந்தப் பொண் யாரு, வந்து வந்து நிக்கறா, உன் குழந்தைக்கு அம்மா நா என்கிறா' என்று ராஜா குழப்பத்துடன் கேட்டபோது காமாட்சி சலனமில்லாமல் "அப்படி யாரையும் எனக்குத் தெரியாது. நீ குழப்பிக்காதே" என்றதும் அவருக்கு என்னவோ போல இருந்தது. "நான் உண்மையைத் தானே சொன்னேன்?" என்று காமாட்சி நியாயம் பேசினாள். நமக்கு அந்தப் பெண்ணைத் தெரியாது. அவன் மறந்து போன விஷயத்தை ஞாபகப்படுத்தினால், பழசு எல்லாமே அவனது ஞாபகத்திற்கு வந்து விடலாம் என்று அவர் பயப்படுவது போலத் தோன்றிற்று. தனக்கும் அந்த பயம் உள்ளே நெருடுவதை அவர் உணர்ந்தபோது அது அவரை பலவீனப்படுத்திற்று. இந்த பயம்தான் அந்த விவேக் குப்தாவிடம் விடுவிடுக்க வைத்திருக்க வேண்டும். ஆனால் அந்தப் பையனுக்கும் விவஸ்தை இல்லை. அவர்களுக்குத் தெரியாத உறவைப் பற்றி, அவர்கள் சொல்வார்கள் என்று அவன் எதிர்பார்த்தான்? அந்தப் பெண் இதுவரை அவர்களிடம் வந்து பேசவில்லை. தமிழ் பேசும் பெண் என்று அவன் சொன்னானே தவிர ஒரு வணக்கம் கூடச் சொல்லத் தெரியவில்லை. எந்தச் சூழலில் எப்படி வளர்ந்த பெண்ணோ என்று காமாட்சி சந்தேகப்படுவதில் ஆச்சரியமில்லை. கல்யாண போட்டோவைக் காண்பிக்கச் சொல்லு, பதிவுச் சீட்டைக் காண்பிக்கச் சொல்லு என்று தாம் சொல்லியிருக்கத் தேவையில்லை என்று அவர் பிறகு நினைத்துக் கொண்டார். "ஒண்ணு கிடக்க ஒண்ணு ஏதாவது ஆயிடப் போவுது" என்று காமாட்சி அவன் சென்ற பிறகு முணுமுணுத்தாள். காமாட்சியின் மனத்தில் திட்டவட்டமாக என்ன இருக்கிறது என்று அனுமானிக்க முடியவில்லை. மெலிதாக எட்டிப் பார்த்த எண்ணத்தை அவர் ஒதுக்கினார்.

கடந்த இரண்டு ஆண்டுகளில் ராஜா ஒருத்தியைத் திருமணம் செய்து கொண்டு குடித்தனம் செய்கிறான். ஒரு குழந்தைக்கும் தகப்பன் வேறு எனும் போது சட்டப்படி அவன் அவர்களுடன்தான் இருக்க வேண்டும் என்பதை அவர் உணர்வார். ஆனால் அதை எடுத்துச் சொல்ல எவ்வளவோ பேர் இருக்கிறார்கள் இங்கு. டாக்டரே சொல்லலாம். அந்த வேலையைத் தன்னால் செய்ய முடியாது என்று சரவணனுக்கு உறுதியாகத் தோன்றிற்று. ராஜாவின் நண்பர்கள் அவனுக்குச் சொல்லட்டும். இங்கு இருக்கப் போகும் மிகுதி நாட்களைப் பாழாக்கக் கூடாது. அவர்கள் கிளம்புவதற்குள் ராஜாவுக்குப் பழைய நினைவு வந்தாலும் அதன் சூடு வெகுவாகத் தணிந்து விட்டிருக்க வேண்டும்.

"என்ன மிஸ்டர் சரவணன்? ராஜாவைப் பார்த்தீர்களா? முன்னேற்றம் தெரிகிறதா?"

சரவணன் திரும்பினார். டாக்டர் சென் குப்தா தமது மாலை ரௌண்ட்ஸுக்குக் கிளம்பியிருந்தார்.

சரவணன் மெலிதாகப் புன்னகை செய்து, டாக்டர் நீட்டிய கையைப் பிடித்துக் குலுக்கினார்.

"மிக நல்ல முன்னேற்றம் தெரிகிறது. நடக்கிறான். நார்மலாக உணர்வதாகச் சொல்கிறான். ஆனால் மறந்துபோன விஷயங்கள் இன்னும் நினைவுக்கு வரவில்லை."

"மெல்ல வரும்," என்றார் டாக்டர். "உடல் தேறி வருவதால் அதிக நாட்கள் இங்கு வைத்துக் கொள்ள மாட்டோம். ராஜாவுக்கு நாளைக்குக் காலை எல்லாவற்றையும் விவரமாகச் சொல்வதாக இருக்கிறேன். மீண்டும் இயல்பு வாழ்க்கைக்குத் திரும்ப அவரைத் தயார் செய்ய வேண்டும்."

"அதை அவன் புரிந்து கொள்ளணும் - குழம்பிடக் கூடாது," என்றார் சரவணன் மெல்ல.

"குழம்பும்தான், ஆனால் இது ஒரு மருத்துவப் பிரச்னை என்று விளக்கினால் புரிந்து கொள்வார். அவருடைய மனைவிதான் பாவம் ரொம்ப அப்ஸெட் ஆகியிருக்கிறார்."

"என்னை அவளுக்காக ராஜாவிடம் பேசச் சொன்னான் அந்த விவேக். நாங்கள் அந்தக் கல்யாணத்தில் பங்கு கொள்ளவில்லை. நாங்களே இப்பொழுதுதான் அந்தப் பெண்ணை பார்க்கிறோம். நாங்கள் எப்படிச் சொல்வது?" என்றார் சரவணன் தற்காத்துக் கொள்வது போல.

டாக்டர் அவரை யோசனையுடன் பார்த்தபடி சொன்னார்.

"நாளைக்குக் காலை ராஜாவுடைய நண்பர்

**"இன்ஸ்பெக்டர் ஐயா, கபாலி மாமூல் அதிகம் குடுக்கிறது உண்மைதான்; அதுக்காக நம்ம போலீஸ் ஜீப்ப அவன் மகளோட மஞ்சள் நீராட்டு விழா ஊர்வலத்துக்கு குடுத்திருக்கிறது சரியாப்படலை எனக்கு!"**
**- தூத்துக்குடி சகிதா முருகன்**

களை வரச் சொல்லியிருக்கிறேன். ராஜாவிடம் பக்குவமாக எடுத்துச் சொல்ல வேண்டும். மனோவியல் ரீதியான கௌன்சலிங் அவருக்குத் தேவை. முதலில் அவரை இந்த மறதியைப் பற்றின பிரச்னைக்குத் தயார் செய்வோம்."

டாக்டரின் வெள்ளை அங்கி பாக்கெட்டிலிருந்து செல்போன் ஒலித்தது. டாக்டர், சரவணனைப் பார்த்து 'எக்ஸ்க்யூஸ் மீ, என்று விட்டு செல்போனில் பேசியபடி நகர்ந்து சென்றார்.

பார்வையாளர் நேரம் முடிந்துவிட்டதாகத் தோன்றிற்று. வார்டை நோக்கி சரவணன் நடந்தார். நர்ஸ்களும் வார்ட் பாய்களும் 'கிளம்புங்கள் கிளம்புங்கள்' என்று துரிதப்படுத்திக் கொண்டிருந்தார்கள். வார்டை நெருங்கும் வேளையில் காமாட்சியே எதிரில் வந்தாள். முகம் பிரகாசமாக இருந்தது. "எங்கே போயிட்டீங்க?" என்ற கேள்வி குற்றச்சாட்டாக ஒலிக்கவில்லை.

"உள்ளே சந்தடியா இருந்தது. எல்லாரும் பேசினம்னா நோயாளிக்கு நல்லதில்லேன்னு வெளியிலே வந்தேன். என்ன சொல்றான்?"

காமாட்சியின் அதரங்களில் புன்னகை தோன்றிற்று.

"ஏதோ பழைய கதையெல்லாம் பேசினான். நமக்குப் பழக. அவனுக்கு நேத்து நடந்த மாதிரி!"

அவள் திடீரென்று சிரித்தாள். "உங்களுக்குக் கோபம் வரும் சொன்னா. இந்த விபத்து ஏற்பட்டது ஒரு விதத்திலே நல்லது போலிருக்கே. அப்பா உங்கிட்டே இணக்கமா இருக்காரேன்னான்!"

அவருக்கு மெல்லிய எரிச்சல் ஏற்பட்டது. சற்று மௌனத்திற்குப் பிறகு சொன்னார். "நீதான் உம்புள்ளை மனசைக் கெடுத்து வைச்சே, என் மேல இல்லாததையும் பொல்லாததையும் சொல்லி."

"சரி சரி, இப்ப ஆரம்பிக்காதீங்க" என்றாள் அவள் அலுப்புடன். "நாதான் சொல்லித் தெரியணுமாக்கும். வளர்ந்த பிள்ளைக்கு அத்தனை சூட்சமம் கூடக் கிடையாதா?"

"என்னை அவனுக்கு ஆகாம பண்ணினதே நீதான்."

அவள் சடக்கென்று நின்றாள்.

"இதைப் பாருங்க, என்னை வம்புக்கிழுக்காதீங்க. உங்க தப்புக்கெல்லாம் என்மேல பழி போடறதே உங்க வழக்கமாப் போச்சு. உங்களை நான் ஆகாம பண்ணியிருந்தா, அவன் இப்ப எப்படி உங்ககிட்டப் பாசமா பேசறான்? அரைகுறை நினைவிலே கூட உங்க உடம்பைப் பத்திக் கவலைப்படலேே?"

அவர் வாயை மூடிக் கொண்டார். காமாட்சி உணர்ச்சிவசப்பட்டால் இடம் காலம் தெரியாமல் குரல் உயர்ந்துவிடும். அவருக்கும் உயர்ந்துவிடும். பிறகு அவள் கண்ணீர் பெருக்குவாள். எங்குதான் பதுக்கி வைத்திருப்பாளோ அந்தக் கண்ணீரை. அவரை எரிச்சலூட்டும் அந்தக் கண்ணீர்தான் ராஜாவைப் பலவீனப்படுத்துவது என்று அவர் நினைத்துக் கொள்வார். அந்தக் கண்ணீரிலிருந்து கடந்த இரண்டு ஆண்டுகளாக ராஜா விலகி இருந்தது அவனுக்கு நல்லது என்றுகூட ஒரு சமாதானம் ஏற்படும். ஆனால் இப்போது அதையெல்லாம் கிளறாமல் இருப்பதே நல்லது. ராஜா இப்போது அவரைப் பார்க்கும் பார்வையே வேறு. எந்த வகையிலோ அது அவருக்கு ஒரு பாதுகாப்பு உணர்வைத் தந்தது. நம்பகமான ஊன்றுகோல் கிடைத்ததுபோல. முந்தைய ஏமாற்றங்களையெல்லாம் மறந்து வாழ்க்கையைப் புதிதாகத் துவங்கலாம் என்று எழுபதைக் கடந்தவர்களின் கூட்டத்தில் சொற்பொழிவாற்றிய அந்த இளைஞனின் நினைவு வந்தது.

"அப்பா உங்கிட்ட இணக்கமா இருக்காரே" இதற்கு ரோசப்படக் கூடாது. அது உண்மையாக இருக்கும்பட்சத்தில், இந்த டில்லி பயணம் ஒரு திருப்பு முனையாகத்தான் கொள்ள வேண்டும். அவருக்கு வயது எழுபத்தைந்து. இன்னும் கொஞ்ச தூரமே உள்ள பயணத்திற்குதான் துணை தேவை. இணக்கம் தேவை. டில்லிக்குக் கிளம்புகிறவரை இது புத்தியில் உறைக்கவில்லை.

சற்றுமுன் பேசியதை முற்றிலும் மறந்தவராக "காபி சாப்பிடலாமா?" என்று கேட்டவரை, காமாட்சி வியப்புடன் பார்த்துச் சிரித்தாள்.

"இந்த நேரத்திலேயா? சரி வாங்க, நீங்க ஆசையா கூப்பிடறீங்க..."

அவர் தனக்குள் புன்னகை செய்து கொண்டார். நான்கே நாட்களில் ஏற்பட்டுப் போன மாற்றத்தை எண்ணி. டில்லி காற்றாக இருக்க வேண்டும். சென்னையில் இப்படிப் பட்ட சரசத்துக்கே இடமிருந்திருக்காது.

அவர்கள் கான்டீனில் மேஜையைத் தேடி அமரும்போது அங்கு கதிர் வந்து சேர்ந்தான்.



விவேக் அளவு இவன் பரிச்சயமில்லா விட்டாலும், இரவு ராஜாவுக்குத் துணை யிருக்க இங்கு தங்குகிறான் என்று அவருக்கு அவன்மேல் மதிப்பு இருந்தது.

"ஹலோ!" என்று புன்னகை செய்தார். "காப்பி சாப்பிடுகிறாயா எங்களுடன்?" என்றார்.

"ஓ, ஷ்யூர் தாங்க்ஸ்!" என்று சிரித்து அவன் அமர்ந்தான்.

"ராஜாவைப் பார்க்க வந்தாயா?" என்றார் சரவணன்.

"இல்லை" என்றான் கதிர்.

"என்னை அவனுக்கு அடையாளம் தெரிய வில்லை. இரண்டு நாள் விட்டுப்பிடிப்போம் என்று விவேக் சொன்னான்."

"இவன் வெள்ளைக்காரன் மாதிரி பேச றான்" எனறாள் காமாட்சி.

சரவணன் அதை அவனுக்கு விளக்கிய போது அவன் சிரித்து, "நான் ரொம்ப நாள் அமெரிக்காவிலே இருந்தேன்" என்றான்.

"யாருக்கு உடம்பு சரியில்லை?" என்றார் சரவணன்.

"என்னுடைய கர்ள்ஃப்ரெண்டுடைய மாமாவுக்கு ஹர்னியா ஆபரேஷன் ஆயிற்று. இரவு அவருக்குத் துணைக்காக தங்குகிறேன்."

"அப்படியா?" என்றார் சரவணன் வியப் புடன். இதை ஒரு சேவையாகவே செய்கிறான் என்று பட்டது.

"கல்யாணம் எப்ப?"

"ஸாரி?" என்றான் கதிர் விளங்காமல்.

"கர்ள்ஃப்ரெண்டு என்று சொன்னாயே, எப்பத் திருமணம் என்று கேட்டேன்."

"ஓ, அதுவா?" என்று ஓர் அசட்டுக் கேள் வியை எதிர் கொண்டதுபோல கதிர் தலையசைத்துக் கொண்டான்.

"நாங்கள் திருமணம் செய்து கொள்ள வில்லை. சேர்ந்து வாழ்கிறோம்."

ஒரு விநாடி திகைத்து சரவணன் காப்பி குடிப்பதை நிறுத்தி அவனைப் பார்த்தார். அமெரிக்க பெண்ணாக இருக்க வேண்டும் என்று நினைத்தார். இவன் இத்தனை வெளிப் படையாகப் பேசுவதற்கும் அவனுடைய அமெ ரிக்க வாழ்வுப் பின்னணி காரணமாக இருக்க லாம். ஆனால் அவருக்குக் கூச்சமாக இருந்தது.

"ஸாரி, நான் பழைய காலத்து ஆள். சம்பிரதாயக் கேள்வி கேட்டேன்" என்றார்.

"நோ ப்ராப்ளம்" என்று அவன் சிரித்தான்.

"ராஜாமோகனுக்கு சீக்கிரம் நினைவு திரும் பணும்" என்றான் அவன் சற்று பொறுத்து சம் பந்தமில்லாமல். "என் கர்ள்ஃப்ரெண்டு ஸ்நேகா வுக்குப் பயம் பிடித்துவிட்டது. உனக்கும் அந்த மாதிரி விபத்து ஏற்பட்டு எல்லாவற்றையும் மறந்து போனியானால், நீ யார் என்று என் னைக் கேட்டால் நான் உன் கர்ள்ஃப்ரெண் டுன்னு எதை வச்சு நம்ப வைக்கிறது? சகுந்தலா வைப் போல நானும் விழிப்பேன் என்கிறாள்."

சரவணன் நிமிர்ந்து உட்கார்ந்தார். சகுந்தலாவுக்கும் அவளுக்கும் என்ன சம்பந்தம் என்று கேட்க நினைத்தார். ஆனால் வாக் கியத்தை ஆரம்பிக்குமுன் விளங்கிவிட்டது போலிருந்தது. கூடவே, மெல்லிய அதிர்ச்சி ஏற் பட்டது. சே, அது சாத்தியமில்லே என்று சொல்லிக் கொண்டார். இத்தனை வெளிப்படையாகப் பேசும் இந்தப் பிள்ளையிடமே கேட்டால் போச்சு என்று அவர் யோசிக்கையில்,

"நான் கிளம்புகிறேன். காபிக்கு தாங்க்ஸ்" என்று கதிர் திடீரென்று அவசரமாகக் கிளம்பினான்.

"என்ன சொல்றான் அவன்?" என்றாள் காமாட்சி.

"அவனும் அவன் சிநேகிதியும் கல்யாணம் செய்துக்காம சேர்ந்து வாழறாங்களாம்" என்றார் சரவணன் குரலைத் தாழ்த்தி.

"ஐய்யே, என்னங்க அது? கேட்கவே அசிங் கமா இருக்கு" என்றாள் காமாட்சி புருவத்தை நெறித்து.

(தொடரும்)

## ஜாலி சிவம்



நேர்ந்து கொண்டது வீண் போக வில்லை. 'அன்பே சிவம்' படத்துக்கான முழு கதைக்கும் ஒரே மூச்சில் வசனம் எழுதி ஜமாய்த்திருக்கிறார் 'ஹாய்' மதன்! "வெறும் துணுக்குத் தோரண மாக இல்லாமல், இன்டெலிஜென்டான காமெடிப் படம்" என்கிறார்கள் கமல் வட்டாரத்தில்.

— அஜய்

## மாற்றான் தோட்டம்

**பிற பத்திரிகைகளில் வெளியான கடிதங்கள். சற்றே சுருக்கமாக.**

சதாம் உசேனின் பல பயங்கர முகங்களை உங்கள் இதழ் எடுத்துக் காட்டியது. ஆனால் ஈரான்மீது படையெடுக்க அமெரிக்கா ஏன் துடிக்க வேண்டும்? அப்படிப்பட்ட படையெடுப்பு தேவை என்பதற்கான அசைக்க முடியாத ஆதாரங்கள் முன் வைக்கப்பட வேண்டும். இது குறித்த தீவிர விவாதங்களும் தேவை. ஆயிரக்கணக்கான அமெரிக்க ராணுவ வீரர்கள் மற்றும் ஈராக் பொது மக்களின் உயிர்கள் மலிவானவை அல்ல.

(டைம் - டெர்ரி செரேனா, சின்சினாடி, யு.எஸ்.)



"இந்திய ஏவுகணை திட்டத்தின் தந்தை டாக்டர் கலாம் என்பது உண்மை. ஆனால் (அவர் ஜனாதிபதியானால்) இதுவே தவறான சமிக்ஞைகளை அளித்து விடும் என்பது சரியல்ல. அணுகுண்டை உருவாக்கிய மன்ஹாட்டன் திட்டத்தில் ஆல்பர்ட் எய்ன்ஸ்டீன் கூட, பிற விஞ்ஞானிகளுடன் பங்கு கொண்டார். ஆனாலும் அவர் ஓர் அமைதி விரும்பியாகத் தான் கருதப்படுகிறார். பாகிஸ்தான், சீனா போன்ற அண்டை நாடுகளைப் பெற்றுள்ள நாம் உறுதியாக இருக்க வேண்டும். அப்போது தான் அவர்கள் நம் எல்லைக்குள் வாலை நுழைக்க மாட்டார்கள்.

அமெரிக்க ஜனாதிபதி ஆவதற்குமுன் ஜார்ஜ் புஷ் (சீனியர்) சி.ஐ.ஏ.வின் இயக்குனராக இருந்தார். ரஷ்யப் பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு முன் விளாடிமிர் புடின் கே.ஜி.பி.யில் பதவி வகித்தார். இந்தப் பின்னணிகள் உலகுக்குத்



# ஐஸ்வர்யா!

தவறான சமிக்ஞைகளை அளித்ததா என்ன?"

(தி ஹிண்டு - ஸ்ரீவாஸ் ரமேஷ், மும்பை)

**வ**ழக்கம்போல ஷோபா டே தனது ஒரு கண்ணை மட்டும் திறந்து கொண்டு கருத்து கூறியிருக்கிறார். பெண்கள் எப்படி வியாபாரப் பொருள்கள் போல நடத்தப்படுகிறார்கள் என்பதற்கு சாட்சியாக வலைத்தளத்தில் உள்ள சில திருமண விளம்பரங்களையும் குறிப்பிட்டிருக்கிறார்.

நானும் கொஞ்சம் ஆராய்ச்சி செய்தேன். கிட்டத்தட்ட ஐஸ்வர்யா ராய் அளவுக்கு அழகுள்ள பெண்களைத்தான் மனைவியாக்கிக் கொள்ள பல ஆண்கள் விரும்புகிறார்கள் என்பது புரிந்தது. ஆனால் அதே சமயம் இந்த விளம்பரங்களை மேலும் கவனித்த போது அமெரிக்காவில் வாழ்ந்தபடி மூட்டை மூட்டையாக டாலர்களைச் சம்பாதிக்கும் ஆண்களைத்தான் பெரும்பாலான மணப் பெண்கள் விரும்புகிறார்கள் என்பதும் புரிகிறது. ஒரு மனிதனின் பிற குணங்களைப் பற்றி இவர்களுக்கு அக்கறையிருப்பதாகத் தெரியவில்லை. வாலிபர்கள் பெண்களை அழகு பொம்மைகளாகவே கருதுகிறார்கள் என்றால், இளம் நங்கைகள் அமெரிக்காவுக்குச் செல்ல ஒரு இலவச பாஸ்போர்ட் என்றுதான் வருங்காலக் கணவர்களைக் கருதுகிறார்கள்!

(தி வீக் - என்.எம். வினோத்குமார்)



**கா**ல்பந்தின் தாயகம் என்று கூறப்படும் இங்கிலாந்து அணியை பிரேசில் வென்றிருக்கிறது. இது ஒரு விதத்தில் அமீர் கானின் லகான் திரைப் படத்தை நினைவு படுத்துகிறது. ஆனால் பிரேசில் விளையாட்டு வீரர்கள் நிஜத்திலும் அசகாய சூரர்கள். உலகக் கோப்பையைத் தட்டிச் செல்வதை வழக்கமாகக் கொண்டவர்கள்.

(தி டைம்ஸ் ஆஃப் இண்டியா- ஜெயப்பிரகாஷ், ஈமெயில்)

**இ**ரு ஜெர்மனிகளும் ஒன்றானது ஐரோப்பிய யூனியன் உருவாவதை விரைவுபடுத்தியது. அதே போல் யூரோ என்ற பொது நாணயம் உருவானதும் ஐரோப்பிய யூனியனுக்குச் சாதகமான அம்சம். தெற்காசிய நாடுகள் முழுவதும் ஒரு குடையின் கீழ் வருவதும், அங்கு ரூபாய் பொது நாணயமாக விளங்கப் போவதும் வருங்காலத்தில் நடக்கக் கூடியவைதான். 'ஒரே உலகம்' காணுவதற்கு இவையெல்லாம் சரியான பாதைகள். சொல்லப்போனால் புராதன காலத்து இந்து மதத்தின் கொள்கையான 'உலகமே ஒரு குடும்பம்' (வசுதைவ குடும்பகம்) என்பதை உலகின் அனைத்து நாடுகளும் ஏற்றுக்கொண்டால் சிறப்பு. அப்படியொரு நிலை வரும்போது சில விஷயங்களை மனத்தில் கொள்ளலாம்.

அ) பாதுகாப்புத்துறை ஐ. நா. சபையிடம் ஒப்படைக்கப்பட வேண்டும்

ஆ) உலகெங்கும் ஒரே நாணயம் மற்றும் ஒரே தொடர்பு மொழிதான் இருக்க வேண்டும்

இ) பொதுச் சட்டங்கள் இயற்றப்பட வேண்டும்

(அலைவ் - டி.ஏ.ரமேஷ், பாண்டிச்சேரி)

தொகுப்பு - ஜி.எஸ்.எஸ்.

கந்தனைக் காண்கையில் கவலைகள் எல்லாம் தீரும்!



முருகனுடைய திருவடியில் தண்டையாகவும், சிலம்பாகவும் இருப்பது வேதம்தான்

மென்பொருள் துறையில் வேலை வாய்ப்புகள் சமீபத்தில் சரிவடைந்தபிறகு (முக்கியமாக அமெரிக்காவில்), கம்ப்யூட்டர் தொழில்நுட்பப் பொறியியல் படிப்பில் சேரும் ஆர்வம் சற்றுக் குறைந்திருக்கிறது. சென்ற ஆண்டில் கூட நிரப்பப்படாத பொறியியல் சீட்கள் சில ஆயிரங்கள் இருந்தன என்கிறது புள்ளி விவரம்.

அதிலும் இளம் பெண்கள் மத்தியில் இன்ஜினியரிங் படிப்பதை விட எம்.பி.ஏ, எம்.சி.ஏ, மைக்ரோ பயாலஜி என படிப்பது பயனுள்ளதாக இருக்கும் என்ற கருத்து நிலவுகிறது. ஆனால், ஒட்டு மொத்தமாகப் பார்க்கும்போது பொறியியல் துறைக்கு உள்ள டிமாண்ட் குறைந்ததாகத் தெரியவில்லை. ஒவ்வொரு வருடமும் சில கூடுதல் பொறியியல் கல்லூரிகளாவது திறக்கப் படுகின்றன.



• விஜய்



• ப்ரதிமா



• கிருஷ்ணகுமார், காயத்ரி, சிரஞ்சீவி

"அவருடைய மகனை பி.ஏ.விலே சேர்த்திருக்காரு. பாவம் ப்ளஸ் டூவிலே கம்மி மார்க் போல" என்பதுதான் இன்றைய நிலை! அதாவது அதிக மதிப்பெண்கள் எடுத்தவர்கள் (மருத்துவப் படிப்பு இல்லையென்றால்) பொறியியல் படிப்புதான் படிக்க வேண்டும். அதுதான் மதிப்பு!

ஏதற்காகப் பொறியியல் படிப்புக்கு இவ்வளவு டிமாண்ட்? சில காரணங்கள் வெளிப்படையானவை. என்றாலும் மாணவர்களின் நோக்கம் என்ன? இதை முதலில் அறிந்து கொள்வதற்காக சில மாணவர்களைச் சந்தித்தோம்.

பொறியியல் கல்லூரியில் படிப்பது ஒரு கௌரவம் என்பதை ஏற்றுக்கொண்ட மாணவர் கிருஷ்ணகுமார் தம்முடைய சாய்ஸ் எலக்ட்ரானிக்ஸ் பிரிவுதான் என்றார். "பிரச்னைகளைத் தீர்ப்பது எனக்குப் பிடித்தமானது. அதற்கு அதிக வாய்ப்பு இருப்பது பொறியியல் பிரிவில்தான். தவிர வேலை வாய்ப்பும் இதில் அதிகம் உண்டு" என்கிறார்.

பிளஸ் டூ முடித்த மற்றொருவரான காயத்ரி "எனக்கு சர்க்யூட்ஸ் பிடிக்கும். அதனால் பொறியியல்தான் என் வழி என்று தீர்மானித்தேன். பி.ஈ.க்குப் பிறகு எம்.டெக். படிக்க ஆசை. அதற்குப் பிறகு அமெரிக்காவிலோ நம் நாட்டிலோ எங்கு தகுந்த வேலை கிடைத்தாலும் ஓ.கே. பி.ஈ. ஒரு கௌரவச் சின்னம் போல் ஆகிவிட்டது. ஆனால் அதற்காக பி.எஸ்.ஸி. படிக்கிறவர்களெல்லாம் இரண்டாம் தரமானவர்கள் என்ற



* எஸ்.ஆர்.எம். மாணவர்கள் அர்ஜுன், பிரகாஷ், ரோஹிணி, ப்ரீத்தி

என்றுகூட இப்போது படுகிறது. பொறியியல் துறையில் ஆர்வம் இருப்பவர்கள் மட்டுமே அதில் சேர்வதுதான் நல்லது என்று இப் போது தோன்றுகிறது. வேலை வாய்ப்பு என்ற ஒரே கோணத்தில் பொறியியல் படிப்பது ரிஸ்க்."

"தரமான தனியார் கல்லூரி களுக்கு மவுசு எப்போதுமே உண்டு. நல்ல கோர்ஸுகள் சோடை போவதில்லை'' என் கிறார்கள் அட்டைப்பட மாண வர்கள் கோரஸாக..

பிடித்ததைப் படிப்போமே என்கிற எண்ணம் கொண் டவர்களும் இருக்கிறார்கள்தான். உதாரணமாக பிரதிமா. "ஏனோ எனக்குப் பொறியியலில் ஆரம் பத்திலிருந்தே ஈடுபாடு இல்லை. மற்றவர்கள் போகும் பாதை யிலேயே நாமும் போக வேண்டுமா என்று

# "எங்களுக்கு வேண்டாம் இன்ஜினியரிங்!"

தோன்றியது. எலெக்ட்ரானிக் மீடியா படிக்கலாமென்று விருப்பம். புதிய கோர்ஸ் என்பதால் வருங்காலமும் சிறப் பாகவே இதற்கு இருக்குமென்ற நம்பிக்கை" என்கிறார்.

ஆக, மாணவர்களின் சாய்ஸின் அடி நாதம் வேலைவாய்ப்பு என்பதாகவே இருக்

எண்ணம் உண்டாவது சரியல்ல. அப் துல் கலாம் பி.ஈ. படித்தவரா என்ன? அவர் அடையாத உயரமா?" என்கிறார்.

முதலாண்டு பொறியியல் மாணவரான சிரஞ்சீவி "முன்பு கம்ப்யூட்டர் பொறியியல் படிப்புக்கு இருந்ததைப் போன்ற ஒரு டிமாண்ட் இப்போது மின்னணுத் தகவல் பிரிவுக்குத்தான் இருக்கிறது. எதைப் படித் தால் என்ன, ஒரு நல்ல வேலை அமைய வேண்டும் அவ்வளவுதானே. இதற்கு பி.ஈ படித்துவிட்டு எம்.எஸ். செய்யலாம். அல்லது பொறியியல் படிப்புக்குப் பிறகு எம்.பி.ஏ என்றால் மேலும் உத்தமம். பி.எஸ்.ஸி அல்லது பி.காம் படித்துவிட்டுக் கூட எம்.பி.ஏ செய்யலாம். சொல்லப்போனால் அதைத்தான் செய்திருக்க வேண்டுமோ

* டாக்டர் பாலு



* சுசீலா மாரியப்பன்



கிறது. சரி, பொறியியல் படிப்போருக்கு வருங்கால வேலை வாய்ப்பு எந்த அளவு பிரகாசமாக இருக்கிறது?

அண்ணா பல்கலைக் கழகத்தின் 'பல்கலைக் கழக தொழில் துறை கூட்டியக்க மையத்தின்' இயக்குனர் டாக்டர் கே. பாலுவை அணுகினோம்.

"தமிழ்நாட்டில் அறுபதாயிரம் பொறியியல் பட்டதாரிகள் வருடந்தோறும் படிப்பை முடிக்கிறார்கள். அவர்களில் கால்வாசிப் பேர் வெளிநாடுகளுக்குச் செல்கிறார்கள். கால்வாசிப் பேர் தங்கள் குடும்ப வியாபாரத்தில் ஈடுபடுகிறார்கள். மீதி ஐம்பது சதவிகிதம் பேருக்காவது வேலை வாய்ப்பு தேவை. பொதுத்துறைகளில்கூட விருப்ப ஓய்வுத்திட்டம் அறிமுகமான பிறகு வருங்கால வேலைவாய்ப்பைப் பற்றி பெரும் சந்தேகம் ஏற்படுவது நியாயம்தான்.

"ஆனால் புதிய தொழிற்சாலைகள் துவங்கப்பட்டால் வேலை வாய்ப்புகள் பெருகும். கூடங்குளம் அணுமின் நிலையம், மற்றும் விரைவில் திறக்கப்படவுள்ள சிமெண்ட் மற்றும் ரசாயன தொழிற்சாலைகள் போதிய வேலை வாய்ப்புகளை அளிக்கும் என்று நம்பலாம். இப்போதைய அரசுக்கு இது குறித்து ஆர்வம் நிறைய இருக்கிறது என்றே தோன்றுகிறது. மணலியில் பெட்ரோ கெமிக்கல் தொழிற்சாலை, பயோகெமிக்கல் பார்க் வரவிருக்கின்றன.

"அதேசமயம் பொறியியல் பட்டதாரிகள் பிறரிடம் வேலை வாய்ப்பு கேட்பதை விடுத்து தாங்களே சிலருக்காவது வேலை வழங்கும் வகையில் சொந்தக் காலில் நிற்பது நல்லது. கோவையில் இப்போது பலர் அப்படிப் பிரகாசிக்கிறார்கள்.

இந்த ஆண்டு பொறியியல் கல்லூரிகளில் சேருபவர்களின் வேலை வாய்ப்புக் கனவு நிச்சயம் பலிக்குமென்றே எனக்குப் படுகிறது. பி.ஈ முடித்தவர்களுக்கு (அது எந்தப் பிரிவாக இருந்தாலும் சரி) ஒரு வருட தகவல் தொழில் நுட்பப் படிப்பை அண்ணா பல்கலைக் கழகம் அளிக்கிறது. "டூயல் டிகிரி' எனப்படும் இந்தப் படிப்பையும் முடித்தால் வளமான வருங்காலம் உண்டு.

"சமீபத்தில் இந்து நாளிதழில் "பலரது முதல் சாய்ஸாக இருக்கும் ஈ.ஸி.ஈ. பிரிவுக்கு வருங்காலம் கேள்விக்குறி" என்பது போன்ற கட்டுரை ஒன்று வெளி வந்திருக்கிறது. இது சரியல்ல என்று பதில் எழுதியிருக்கிறோம்.

"வெளிநாடு செல்வதுதான் ஒரே குறிக்கோள் என்றால் பயோடெக்தான் மிகவும் சிறந்த பிரிவு. மைனிங், கெமிக்கல் என்ஜினியரிங், பிரிண்டிங் டெக்னாலஜி போன்ற பிரிவு பொறியியல் பட்டதாரிகளை இங்குள்ள நிறுவனங்களே வேலைக்குச் சேர்த்துக் கொள்ளும் திட்டம் செயல்பட்டு வருகிறது. எம்.எஸ்.ஸி மெடிக்கல் பிஸிக்ஸ் என்ற படிப்பை முடித்தவுடனே ரேடியாலஜி துறையில் உதவிப் பேராசிரியராகச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்ற அரசாணையே இருக்கிறது" என்று நம்பிக்கை அளிக்கும் விதமாகப் பேசினார் டாக்டர் பாலு.

சென்னை பல்கலைக் கழகத்தில் இயங்குகிறது மாணவர் ஆலோசனை மையம். அதன் இயக்குனராக விளங்கும் டாக்டர் சுசிலா மாரியப்பனை இது குறித்துக் கேட்டோம்.

"என்ஜியரிங் பட்டத்தை முடித்துவிட்டால் எப்படியாவது வேலை கிடைத்து விடும் என்ற நம்பிக்கை பரவலாகவே இருக்கிறது. அது ஒரு ப்ரொஃபஷனல் கோர்ஸ் என்பது கூடுதல் சாதகம். பெற்றோரும் கௌரவமாக நினைக்கின்றனர். பி.ஏ.வும் பி.எஸ்.ஸியும் படிச்சா என்ன வேலை கிடைச்சுடப் போகுது என்கிற சலிப்பு வேறு.

"சரித்திரம், பொருளாதாரம் போன்ற பிரிவுகளைத் தேர்ந்தெடுக்கும் மாணவர்கள் மிகக் குறைந்துவிட்டனர். ஆங்கில இலக்கியத்துக்கும் இதே கதிதான். சமீபத்தில் திறக்கப்பட்ட கல்லூரிகளில் இதன் காரணமாக இந்தப் பிரிவுகள் இல்லாமலே போகின்றன. அறிவியல் - அதுவும் பயோகெமிஸ்டிரிதான் பலரது விருப்பம்.

"கம்ப்யூட்டர் பொறியியல் படிப்போருக்கு அமெரிக்க வேலை வாய்ப்பு குறைந்த பிறகு - சில வருடங்களாக அந்தப் பிரிவுக்கு முக்கியத்துவம் கொஞ்சம் குறைந்திருக்கிறது. மெடிக்கல் டிரான்ஸ்கிரிப்ஷன் போன்ற



"மழையில நனைஞ்சுட்டீங்க போலிருக்கே?"
"சுத்தமா நனைஞ்சுட்டேன்!"
"இல்லே! நனைஞ்சப்புறம் சுத்தமாயிட்டீங்க!"
- வலங்கைமான் நூர்தீன்

அமெரிக்க வேலை வாய்ப்புகள் குறைந்து விட்டன. ஆனால் சீக்கிரமே மென்பொருள் துறையில் மீண்டும் ஒரு புரட்சி நடந்து வேலை வாய்ப்புகள் பெருகும் என்று சமீபத்தில் ஒரு சர்வதேச இதழில் படித்தேன். இந்தியாவில் மட்டுமே ஒன்பது லட்சம் பொறியியல் பட்டதாரிகள் தேவைப்படுகிறார்களாம். ஆனால் வருடத்துக்கு ஏழரை லட்சம் பேர் தான் இப்படிப் பட்டதாரியாகிறார்கள்.

"ஆனால் தனியார்மயமாக்கல் வேகம் பெற்று வருவதை கவனத்தில் கொள்ள வேண்டும். ஊழியர்களின் இடங்களைக் கணினிகள் பிடித்துக் கொண்டு வருகின்றன. எனவே அது போன்ற இடங்களில் வருங்கால வேலை வாய்ப்புக்கு இடமுண்டா? எங்கள் அலுவலகத்திலேயே தினமும் பத்திருபது பேராவது (பி.ஈ மற்றும் எம்.சி.ஏ முடித்தவர்கள்) ப்ளேஸ்மண்டுக்காக அலை மோதுகிறார்கள்.

"பி.ஈ சேருபவர்களுக்கு ஒரு முக்கிய ஆலோசனை. உங்களுக்கு மிகவும் பிடித்த கோர்ஸ் ஒரு சுமாரான கல்லூரியிலும், இரண்டு அல்லது மூன்றவாது சாய்ஸாக வைத்திருக்கும் கோர்ஸ் பிரபலமான தனியார் கல்லூரியிலும் கிடைத்தால், மிகவும் பிடித்த கோர்ஸையே தேர்ந்தெடுங்கள். பெயர் பெற்ற பல தனியார் பொறியியல் கல்லூரிகளில் கூட மிகக் குறைவான அனுபவம் உள்ளவர்களையே ஆசிரியர்களாக நியமிக்கின்றனர். எனவே நன்கு படித்து நிறைய மதிப்பெண் எடுக்க கல்லூரியையே முழுவதுமாக நம்பிக் கொண்டிருக்காதீர்கள். நூலகம், வலைத்தளம் போன்றவற்றில் எல்லாம் உங்கள் துறை தொடர்பான சமீபத்திய தகவல்களைச் சேகரியுங்கள்.

"பொறியியலை விடுத்து கணிதம், அறிவியல் போன்ற பட்டப் படிப்பைத் தேர்ந்தெடுப்பவர்கள் கூடவே தகவல் தொழில்நுட்பத்தில் கவனம் செலுத்துங்கள். கணினியைப் பற்றிய ஞானம் மிகவும் அவசியம்.

"இரு தரப்பினருமே அரசு வேலை வாய்ப்பை மனத்தில் வைத்துக் கொள்ளாமல் பிற பாதைகளையும் நினைத்துப் பாருங்கள். தமிழ்நாட்டிலேயே வேலை என்பதைத் தாண்டி யோசியுங்கள்."

**- ஜி.எஸ்.எஸ்.**

அட்டைப்படம், படங்கள்: **யோகா**

## எம்.ஜி.ஆர். அளித்த மரியாதை!

பிரபல நாதஸ்வர மேதை பத்மஸ்ரீ ஷேக் சின்ன மௌலானாவின் சிஷ்ய குடும்பத்துத் தம்பதியான ஷேக் மஹபூப் சுபானி - காலீஷாபி மஹபூப் கடந்த இருபது ஆண்டுகளாக நாதஸ்வரக் கச்சேரிகள் நடத்தி வருகின்றனர்.

ஆந்திராவின் பிரகாசம் மாவட்டம் பெத கொத்தப்பள்ளி கிராமத்தில் பிறந்தவர் ஷேக் மஹபூப் சுபானி. அவரது அத்தை மகள் காலீஷாபி மஹபூப். தலைமுறை தலைமுறையாக இருவரது குடும்பங்களுமே நாதஸ்வரக் குடும்பங்கள்.



"ஒருமுறை திருவாரூரில் ஒரு எம்.எல்.ஏ. வீட்டுத் திருமணம். நாங்கள் நாதஸ்வரம் வாசித்துக் கொண்டிருந்தோம். அப்பொழுது முதல்வராக இருந்த எம்.ஜி.ஆர். அங்கு வந்து சேரவே திடீர்ப் பரபரப்பு. எங்கள் முன் வைக்கப்பட்டிருந்த மைக்குகள் விழா மேடைக்கு எடுத்துச் செல்லப்பட்டன. நாங்கள் வாசிப்பதை நிறுத்திக் கொண்டோம். உடனே விழா அமைப்பாளர்களைக் கூப்பிட்டு 'மைக்குகளை நாதஸ்வரம் வாசிப்போரிடம் கொண்டு போய் வையுங்கள். தொடர்ந்து வாசிக்கட்டும்!' என்று அன்புக் கட்டளையிட்டார். நெகிழ்ச்சியுடன் நாங்கள் தொடர்ந்து வாசித்தோம். மணமக்களுக்கான வாழ்த்துரையில் முதலில் அவர் பாராட்டியதும் எங்களைத்தான்" என்று பெருமைபட்டுக் கொள்கின்றனர் இந்த நாதஸ்வர தம்பதி!

**— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



# சிவகாமியின் சபதம்

## நாற்பத்து மூன்றாம் அத்தியாயம்

## பிக்ஷு யார்?

பிக்ஷுவிடம் தான் கவர்ந்து கொண்டு வந்தது விஷக்கத்தி என்று தெரிந்து நடுங்கிய குண்டோதரனைப் பார்த்து, ''பிக்ஷுவை எங்கே விட்டு விட்டு வந்தாய்? சீக்கிரம் சொல்!'' என்று சக்கர வர்த்தி கேட்டார்.

''கோயில் மடைப் பள்ளிக்குள்ளே அடைத்துத் தாளிட்டு வந்திருக்கிறேன், பிரபு!'' என்றான் குண்டோதரன்.

''நல்ல காரியம் செய்தாய்! வா, போகலாம்! கிராமத்துக்கு வழி காட்டு!'' என்றார் மகேந்திர பல்லவர்.

அப்போது சத்ருக்னன், ''பிரபு! கிராமத்துக்கு நாம் ஏன் இப்போது போக வேண்டும்? நாம் வந்த காரியம் ஆகிவிட்டது. புத்த பிக்ஷுவைக் குண்டோதரன் கவனித்துக் கொள்ளுவான். நாம் போகலாம், வாருங்கள்!'' என்று கவலை தொனித்த குரலில் கூறினான்.

மகேந்திர பல்லவர், ''இல்லை சத்ருக்னா! நாம் வந்த காரியம் இன்னும் ஆகவில்லை. வாதாபிப் படைகளைத் தடுப்பதைக் காட்டிலும் முக்கியமான காரியம் இங்கே நமக்கு இருக்கிறது. துரோகி துர்விநீதனைச் சிறைப்படுத்தியது பெரிய காரியமில்லை. நாகநந்தி பிக்ஷுவைச் சிறைப் பிடித்துக்கொண்டு போனோமானால், இந்த யுத்தத்தில் நமக்கு முக்கால் பங்கு வெற்றி கிடைத்துவிட்டது'' என்றார்.

''பிரபு! அவ்வளவு முக்கியமான காரியமாயிருந்தால், பிக்ஷுவை வெகு நாளைக்கு முன்பே சுலபமாகச் சிறைப் படுத்தியிருக்கலாமே? ஆயனர் வீட்டிலேயே பிடித்திருக்கலாமே?''

''இத்தனை நாளும் பிக்ஷு சுயேச்

அமரர் கல்கி

சையாக இருத்தல் நான் உத்தேசித்திருந்த காரியங்களுக்கு அவசியமாயிருந்தது. இனி மேல் அவர் வெளியில் இருந்தால் பாதகம் விளையும்."

"பிரபு! பிக்ஷுவைச் சிறைப் பிடிக்கும் வேலையை என்னிடமும் குண்டோதரனிடமும் ஒப்படையுங்கள். தாங்கள் உடனே புறப்பட்டுச் செல்லுங்கள். ஆற்றுக்கு அக்கரையில் கண்ணபிரான் ரதத்தைப் பூட்டி ஆயத்தமாய் வைத்திருக்கிறான்."

"இந்த வேலையை உங்கள் இருவரிடமும் கூட ஒப்படைக்க முடியாது சத்ருக்னா! நானேதான் செய்தாக வேண்டும். குண்டோதரா! போ முன்னால்!" என்றார் மகேந்திர பல்லவர்.

இதற்கு மேல் சத்ருக்னன் வாய் திறக்கவில்லை. மூன்று பேரும் ஏறக்குறைய பொழுது புலரும் சமயத்தில், மண்டபப்பட்டுக் கிராம எல்லையை அடைந்து, கோயில் வெளி மதிலைத் தாண்டிக் குதித்து உள்ளே சென்றார்கள். மடைப் பள்ளியின் கதவு வெளித் தாழிட்டபடி இருந்தது. சற்று கர்வத்துடனேயே குண்டோதரன் அந்த வெளித் தாழை அப்புறப்படுத்திக் கதவைத் திறந்தான். மூவரும் உள்ளே பிரவேசித்தார்கள். நாலாபுறமும் நன்றாய்ப் பார்த்தார்கள்.

மடைப்பள்ளியின் உட்புறம் சூனியமாயிருந்தது! மேற்கூரையில் சில ஓடுகள் எடுக்கப்பட்டபடியினால் உண்டாகியிருந்த துவாரம், பிக்ஷு எவ்விதம் அங்கிருந்து தப்பிச் சென்றார் என்பதைத் துலாம்பரமாகத் தெரியப்படுத்தியது.

"நினைத்தேன், சத்ருக்னா! பிக்ஷுவைச் சிறைப்பிடிக்கும் வேலையை உங்களிடம் நான் ஒப்புவியாததன் காரணம் இப்போது தெரிகிறதா?" என்றார் மகேந்திர பல்லவர்.

"குண்டோதரா! பல்லவேந்திரர் கூறியது காதில் விழுந்ததா? காஞ்சி ஒற்றர் படைக்கு நீ அழியாத அவமானத்தை உண்டு பண்ணி விட்டாய்!" என்றான் சத்ருக்னன்.

"எஜமானே! அந்த அவமானத்தை இன்றைக்கே போக்கிவிடுகிறேன். கருணை புரிந்து தங்களிடமுள்ள கத்தியை இங்கே கொடுங்கள். நாகநந்தி பிக்ஷு இந்த கிராமத்திலேதான் இன்னும் இருக்க வேண்டும். நாளைப் பொழுது விடிவதற்குள் அவரைக் கண்டுபிடித்து, அவருடைய தேகத்தில் இந்த விஷக் கத்தியைப் பதித்துக் கொல்லாவிட்டால், என்னுடைய நெஞ்சிலே இதைப் பதித்துக் கொண்டு உயிரை விடுவேன்" என்றான் குண்டோதரன்.

சத்ருக்னன் கத்தியைக் குண்டோதரனிடம் கொடுக்க யத்தனித்தபோது, மகேந்திர பல்லவர் குறுக்கிட்டு அதை வாங்கிக்கொண்டார்.

"குண்டோதரா! இந்த மாதிரி அசட்டுத்தனமான சபதம் இனிமேல் செய்யாதே! புத்த பிக்ஷுவின் உடம்பில் இந்தக் கத்தியை நீ செலுத்த முடியாது! அவருடைய தேகம் வஜ்ரதேகம். அவரைக் குத்தினால் கத்தியின் முனைதான் மழுங்கும். அப்படி அவரை நீ காயப்படுத்தினாலும், இந்தக் கத்தியிலுள்ள விஷம் அவரைக் கொல்லாது..." என்றார் மகேந்திர சக்கரவர்த்தி.

"அது எப்படி, பிரபு! பிக்ஷு மந்திரவாதியா? மந்திர சாதனங்களில் உங்களுக்குக் கூட நம்பிக்கை உண்டா?" என்று கேட்டான் சத்ருக்னன்.

"மந்திரமும் இல்லை; மாயமும் இல்லை. விஷத்தை விஷம் ஒன்றும் செய்ய முடியாதல்லவா? புத்த பிக்ஷுவின் தேகத்தில் ஓடும் இரத்தம் விஷங் கலந்த இரத்தம். எத்தனையோ காலமாக விஷ மூலிகைகளை அருந்தி உடம்பையே விஷமயமாகச் செய்து கொண்டவர் அந்த பிக்ஷு!"

"ஐயோ! என்ன பயங்கரம்!" என்றான் சத்ருக்னன்.

"புத்த பிக்ஷுவின் தேகக் காற்றுப் பட்டதும் அக்கம் பக்கத்திலுள்ள நாகங்கள் மிரண்டு அங்குமிங்கும் ஓடும்!"

"ஆம், எஜமானே! நானும் பார்த்திருக்கிறேன். அதன் காரணம் இப்போது

தான் தெரிகிறது!" என்று குண்டோதரன் கூறியபோது, அவனுடைய உடம்பு நடுங்கிற்று.

"கெடில நதிக்கரையில் அந்தப் பயங் கரமான சர்ப்பக் குகையைப் பார்த் தோமே, ஞாபகமிருக்கிறதா, சத்ருக்னா?"

"அதை மறக்க முடியுமா, பிரபு!"

"அதன் மர்மம் என்னவென்பதைக் கண்டுபிடித்தாயா?"

"என்ன யோசித்தும் ஊகிக்க முடிய வில்லை."

"நான் சொல்லுகிறேன். காஞ்சிக் கோட்டையை வேறு வழியில் பிடிக்க முடியாவிட்டால், கோட்டைக்குள் இருக் கும் குடிதண்ணீரிலெல்லாம் விஷத்தைக் கலந்து விடலாம் என்பதற்காகத்தான்....!"

"என்ன கொடுமை? இவ்வளவும் கருணாமூர்த்தியான புத்தபெருமானின் பெயரால், ஒரு புத்த பிக்ஷுவால் செய் யப்படுகிறதா? என்னால் நம்ப முடிய வில்லையே!" என்றான் சத்ருக்னன்.

"நம்ப முடியாத காரியந்தான். ஆனால், புத்த பிக்ஷு நிஜமான புத்த பிக்ஷு இல்லையே! காவித் துணியையும் பௌத்த சங்கங்களையும் தன்னுடைய காரியங்களுக்காக உபயோகப்படுத்திக் கொள்ளும் மிக மிகச் சாமர்த்திய சாலியான ஒற்றன் அல்லவா?"

"அப்பேர்ப்பட்ட கிராதகக் கொலை பாதகனைக் கொல்லாமல் விட வேண் டும் என்கிறீர்களே?"

"கொல்லுவதனால் பயனில்லை. சிறைப்பிடித்து வைத்தோமானால் புலி கேசியுடன் நாம் நடத்தும் யுத்தத்தில் ஒரு பெரிய ஆயுதமாகப் பிக்ஷு உபயோகப் படுவார்."

"பிரபு! பிக்ஷு யார்?" என்று கேட் டான் சத்ருக்னன்.

"ஓர் ஊகம் இருக்கிறது. நிச்சயமாகத் தெரிந்த பிறகு சொல்கிறேன். சத்ருக்னா! நீயும் உன் சீடன் குண்டோதரனும் இது வரையில் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு எவ் வளவோ மகத்தான சேவைகளைப் புரிந் திருக்கிறீர்கள். ஆனால், அவையெல்லா வற்றையும் விடப் பரம முக்கியமான காரியம் உங்களால் இப்போது ஆக வேண்டியிருக்கிறது. நான் சொல்லுவதை இருவரும் கவனமாகக் கேட்டு, அந்தப் படி செய்தால், காரியம் ஜயமாகலாம். என்ன சொல்லுகிறீர்கள்?"

"தங்கள் சித்தம், பிரபு! கட்டளைப்படி அணுவும் பிசகின்றி நடந்து கொள் கிறோம்" என்றான் சத்ருக்னன்.

பொழுதுபுலரும் நேரத்தில் பன்னீர் மரத்திலே மலர்ந்து குலுங்கிய புஷ்பங்கள் 'கம்' மென்று மணம் வீசின.

ஏறக்குறைய வட்டவடிவமாயிருந்த சந்திரன் பொன்னிறத்தை இழந்து, வெண் தாமரையின் நிறத்தைப் பெற்று, மேற்குத் திசையின் அடியில் அமிழ்ந்து கொண்டிருந்தான்.

அந்த அதிகாலை நேரத்தில் கோயில் பிராகாரத்தில் மடைப்பள்ளி வாசலில் மகேந்திர சக்கரவர்த்தி அமர்ந்து, சத்ருக்னனையும் குண்டோதரனையும் அருகில் உட்காரச் சொல்லி, அவர்கள் செய்யவேண்டிய காரியங்களைப் பற்றிக் கூறினார். ஒற்றர்கள் இருவரும் மிகக் கவனமாகக் கேட்டுக்கொண்டார்கள்.

## நாற்பத்து நாலாம் அத்தியாயம்

# சிங்க இலச்சினை

மறுநாள் பொழுது விடிந்து சூரியன் வான வெளியில் இரண்டு நாழிகைப் பிர யாணம் செய்திருந்தும், மண்டபப்பட்டுக் கிரா மத்து வீதிகளில் ஜன நட மாட்டமும் கலகலப்பும் இல்லை. இரண்டு நாளாக இரவில் நடந்த களி யாட்டங்களில் ஈடுபட்டதனாலும், எதிர்பாராத விந்தைச் சம்பவங் களினால் உள்ளக் கிளர்ச்சியடைந்து, தூக்கமின்றி இரவு நேரங்களைக்



கழித்ததனாலும், அந்தக் கிராமவாசிகள் அன்று காலை கொஞ்சம் மந்தமாகவே இருந்தார்கள். பல வீடுகளில் வாசற் கதவுகள் இன்னும் திறக்கப்படா மலே இருந்தன. திருநாவுக்கரசர் மடத்து வாசற்கதவும் அவ் வாறு உட்புறம் தாழிடப் பட்டுத்தான் இருந் தது. ஆனால்

உள்ளே பேச்சுக் குரல் கேட்டது.

குண்டோதரன், சத்ருக்னன், வஜ்ர பாஹு ஆகிய மூவரும் அந்த வேளையில் மடத்து வாசலுக்கு வந்தார்கள்.

குண்டோதரன் கதவை இடித்தான். உள்ளே கேட்டுக் கொண்டிருந்த பேச்சுக் குரலின் சப்தம் உடனே நின்றது.

மனிதர் நடமாடும் சப்தமும், கதவுகள் திறந்து மூடப்படும் சப்தமும் கேட்டன.

பிறகு, வாசற் கதவு திறந்தது.

ஆயனர் வெளியிலே வந்து, "நீதானா, குண்டோதரா! இராத்திரியெல்லாம் எங்கே போயிருந்தாய்? உன்னை நம்பி னால்..!" என்று சொல்லிக்கொண்டு வந் தவர், வஜ்ரபாஹுவையும் சத்ருக்னனை யும் பார்த்துவிட்டு, "இவர்கள் யார்?" என்று கேட்டார்.

"நேற்றிரவு, இரண்டு பேர் வந்திருந் தார்கள் - சிற்பக் கலையில் ஊக்கம் உள்ள வர்கள் - என்று சொன்னேனே, அவர்கள் தான்; இராத்திரியெல்லாம் இவர்களைத் தேடிக் கடைசியில் பொழுது விடியும் சம யத்தில் கண்டுபிடித்தேன். தங்களைப் பார்க்க வேண்டும் என்று சொன்னபடி யால் அழைத்து வந்தேன்" என்றான் குண் டோதரன்.

"அப்படியா! உள்ளே வாருங்கள்! அம்மா, சிவகாமி, மணை எடுத்துப் போடு" என்றார் ஆயனர்.

ஆயனருக்குப் பின்னால் நின்ற சிவ காமி, உடனே மணைகளை எடுத்துப் போட்டாள். ஆயனரும், வந்தவர்கள் இரு வரும் உட்கார்ந்தார்கள். சிவகாமியை வற் புறுத்தி உட்காரச் சொல்லியும் அவள் உட் காரவில்லை. புதிதாக வந்த இருவரையும் ஆவலுடன் மாறி மாறிப் பார்த்துக்கொண் டிருந்தாள்.

"உங்களைப் பற்றிக் குண்டோதரன் சொன்னான் - சிற்பத்தில் ஆர்வம் உள் ளவர்கள் என்று. உங்கள் இருவருக்கும் எந்த ஊரோ?" என்று ஆயனர் கேட்டார்.

"குருவே! என்னைத் தெரியவில்லை யா?" என்றான் சத்ருக்னன்.

"தெரியவில்லையே, அப்பா! நீ எப் போதாவது என்னிடம் சிற்பம் கற்றுக் கொண்டாயா, என்ன?"

"ஆம், ஐயா! சிவகாமி அம்மையை வேணுமானால் கேளுங்கள். அவருக்கு ஞாபகம் இருக்கும்."

"ஆமாம், அப்பா! இரண்டு மூன்று நாள் இவர் உங்களுடைய சீடராயிருந் தார்!" என்றாள் சிவகாமி.

"என் அதிர்ஷ்டம் அப்படி! நான் வந்த சில நாளைக்கெல்லாம் தாங்கள் மாமல்ல புரத்துக்குப் போனீர்கள்..." என்றான் சத்ருக்னன்.

"பிறகு, கொஞ்ச நாளைக்கெல்லாம் எல்லா வேலையும் நின்றுவிட்டது. இந்தப் பாழும் யுத்தம் எதற்காக வந்ததோ, எப் போது முடியப் போகிறதோ தெரிய வில்லை!" என்று ஆயனர் கூறிப் பெரு மூச்சு விட்டார்.

"இன்னும் கொஞ்சம் பொறுமையா யிருங்கள், ஆயனரே! யுத்தம் சீக்கிரத்தில் முடிந்துவிடும். தாங்கள் பழையபடி தங்கள் அரண்ய வீட்டுக்குப் போகலாம்" என்றார் வஜ்ரபாஹு.

அந்தக் குரலைக் கேட்டதும் ஆயனர் சிறிது திடுக்கிட்டவராய், வஜ்ர பாஹுவை உற்று நோக்கி, "ஐயா! தாங் கள் யாரோ?" என்றார்.

"என்னை நிஜமாகவே தெரிய வில்லையா, ஆயனரே!"

"பார்த்த ஞாபகமாய் இருக்கிறது."

அப்போது சிவகாமி தந்தையின் அரு கில் வந்து அவருடைய காதோடு, "சக் கரவர்த்தி, அப்பா, தெரியவில்லையா?" என்றாள்.

ஆயனர் அளவிட முடியாத வியப் புடன் ஒருகணம் வஜ்ரபாஹுவின் முகத்தை உற்று நோக்கினார். பின்னர், அவசரமாகப் பீடத்தை விட்டு எழுந்து, "பிரபு! இது என்ன வேஷம்? அடை யாளமே தெரியவில்லையே?" என்றார்.

"வேஷம் போடும் கலையில் என்னு டைய சாமர்த்தியம் இப்போதுதான் எனக் குத் திருப்தி அளித்தது. போர்க்களத்தில் புலிகேசியின் முன்னால் நின்று தூது சொல்லிவிட்டுத் திரும்பியபோது கூட இவ்வளவு திருப்தி எனக்கு உண்டாக வில்லை!" என்றார் மகேந்திரர்.

ஆயனர், "பல்லவேந்திரா! குண்டோ தரன் நேற்றிரவே என்னிடம் சொன் னான்: யாரோ இருவர் வந்திருக்கிறார் கள்; அவர்கள் இந்தக் கிராமத்துப் பாறை களைப் பார்த்துவிட்டுக் கோவில்

அமைப்பது பற்றிப் பேசினார்கள் என்று. உடனே தங்களுடைய ஞாபகம் எனக்கு வந்தது. அப்படிப்பட்ட சிற்ப மனோ கற்பனை உள்ளவர்கள் நம் சக்கரவர்த்தியைத் தவிர யார் உண்டு என்று எண்ணினேன். கடைசியில் தாங்களாகவே இருக்கிறீர்கள்! பிரபு! இந்த ஏழைச் சிற்பியைப் பார்ப்பதற்கா இவ்வளவு தூரம் தேடி வந்தீர்கள்? தங்களைப் பார்த்து எத்தனை காலம் ஆகி விட்டது? ஒரு யுகம் மாதிரி இருக்கிறது" என்றார் ஆயனர்.

"ஆயனரே! உங்களிடம் பொய் வேஷத்துடனே வந்தேன். அதோடு பொய் சொல்லவும் விரும்பவில்லை. நான் இங்கே வந்தது உங்களைப் பார்ப்பதற்காக அல்ல. என் மகன் மாமல்லனைத் தேடிக் கொண்டு வந்தேன்" என்றார் சக்கரவர்த்தி.

சிவகாமி நாணத்தினால் தலை குனிந்துகொண்டாள்.

ஆயனர் சிறிது தடுமாறிவிட்டு, "பல்லவேந்திரா! மாமல்லர் நேற்று இரவே புறப்பட்டுச் சென்று விட்டாரே! குண்டோதரன் சொல்லவில்லையா?" என்று கேட்டார்.

"மாமல்லனும் பரஞ்சோதியும் இத்தனை நேரம் காஞ்சிப் பாதையில் போய்க்கொண்டிருப்பார்கள். வந்த இடத்தில் உங்களையும் பார்த்துவிட்டு, மாமல்லனைக் காப்பாற்றியதற்காக நன்றி சொல்லிவிட்டுப் போகலாமென்று வந்தேன்" என்றார் சக்கரவர்த்தி.

"பிரபு! மாமல்லரை நாங்கள் காப்பாற்றவில்லையே? வெள்ளத்தில் முழுகிப் போக இருந்த எங்களையல்லவா குமார சக்கரவர்த்தி தக்க சமயத்தில் வந்து காப்பாற்றினார்!"

"ஆம், ஆயனரே! அதுவும் எனக்குத் தெரியும். ஆனால், மாமல்லனுடைய உயிரை நீங்கள் காப்பாற்றியதும் உண்மைதான்; 'நீங்கள்' என்றால் முக்கியமாக உங்கள் குமாரியைச் சொல்லுகிறேன். இதோ பார்த்தீர்களா, இந்தக் கத்தியை!" என்று சக்கரவர்த்தி கூறி, நாகப்பிடி அமைந்த கத்தியை எடுத்துக் காட்டினார்.

ஆயனர், சிவகாமி இருவரும் அந்தக் கத்தியை இன்னதென்று விளங்காத பயங்கரத்துடன் பார்த்தார்கள்.

"இந்த விஷக் கத்தி மாமல்லன் மேல் பாய்வதற்கு இருந்தது. அப்போது சிவகாமி பக்கத்தில் இருந்தபடியால் மாமல்லன் அந்த அபாயத்திலிருந்து தப்பினான்!"



சிவகாமி நடுங்கினாள். அவளுடைய இருதய பீடத்தில் வீற்றிருக்கும் தெய்வத்தின் பேரில் விஷக் கத்தி பாய்வதற்கு இருந்தது என்று எண்ணியபோது, அவளுடைய நெஞ்சில் அந்தக் கத்தி பாய்ந்துவிட்டது போன்ற வேதனை உண்டாயிற்று. அவ்விதம் நேராமல் தன்னால் மாமல்லரைக் காப்பாற்ற முடிந்தது என்ற எண்ணம், சொல்ல முடியாத உள்ளக் கிளர்ச்சியை உண்டாக்கிற்று. ஆனால், தான் காப்பாற்றியது எப்படி என்பது தெரியாதபடியால் திகைப்பும் ஏற்பட்டது.

"பிரபு! என்ன சொல்கிறீர்கள்? குமார சக்கரவர்த்தியின் மேல் விஷக்கத்தி ஏன் பாய வேண்டும்? அவ்விதம் செய்ய எண்ணிய பாதகன் யார்? அதை எவ்விதம் சிவகாமி தடுத்தாள்? எல்லாம் ஒரே மர்மமாயிருக்கிறதே? சிவகாமி! உனக்கு ஏதேனும் தெரியுமா?" என்று ஆயனர் கேட்டார்.

"சிவகாமியைக் கேட்பதில் பயனில்லை. அவளுக்கு ஒன்றும் தெரியாது. சமயம் நேரும்போது நானே எல்லாம் சொல்கிறேன். இப்போதைக்கு அபாயம் நீங்கிவிட்டது. மாமல்லன் காஞ்சிப் பாதையில் வெகுதூரம் இதற்குள் போயிருப்பான். நானும் போக வேண்டியதுதான். ஆயனரே! இந்த மண்டபப் பட்டுக் கிராமம் உங்களுக்குப் பிடித்திருக்கிறதல்லவா; யுத்தம் முடியும் வரையில் இங்கேயே நீங்கள் தங்கியிருக்கலாமல்லவா?"

"ஆம், பிரபு! அப்படித்தான் உத்தேசம். இந்தக் கிராமவாசிகள் மிகவும் நல்லவர்கள். கலை அபிமானம் உள்ளவர்கள். பாறைக் கோவில்கள் அமைக்க உதவி செய்வதாகச் சொல்லியிருக்கிறார்கள்."

"நானும் அதற்கு ஏற்பாடு செய்கிறேன். உங்களுக்கு வேண்டிய திரவியமும், ஆட்களும், கருவிகளும் கொடுத்து உதவும்படி திருக்கோவலூர்க் கோட்டத்து அதிகாரிகளுக்கு கட்டளை அனுப்புகிறேன்."

"பல்லவேந்திரா! தாங்கள் ஒரு நாளாவது இங்கே தங்கலாமா? இன்று சாயங்காலம் பாறைகளைப் போய்ப் பார்த்து எப்படி எப்படிக் கோயில் அமைக்கலாம் என்று தீர்மானிக்கலாமே?"

மகேந்திர சக்கரவர்த்தி சிரித்துவிட்டு, "ஆயனரே! காஞ்சிக்கு மூன்று காத தூரத்தில் வாதாபிப் படைகள் வந்து கொண்டிருக்கின்றனவாம். அந்தப் படைகள் காஞ்சிக்கு வருவதற்குள் நான் போயாக வேண்டும்" என்றார்.

"அப்படியா! இங்கிருந்து காஞ்சி ஏழு காத தூரம் இருக்குமே? எப்படிப் போவீர்கள்?" என்று ஆயனர் கவலையுடன் கேட்டார்.

"அதைப் பற்றிக் கவலையில்லை. நதியின் அக்கரையில் கண்ணபிரான் ரதத்துடன் காத்திருக்கிறான்."

அப்போது சிவகாமி ஆயனரைப் பார்த்து, "கமலி சௌக்கியமாயிருக்கிறாளா என்று கேளுங்கள் அப்பா!" என்றாள்.

"கமலி சௌக்கியம். அம்மா! கண்ணபிரான் உன்னைப் பார்த்துக் கமலியைப் பற்றிச் சொல்ல வேண்டுமென்று எவ்வளவோ ஆவலுடன் இருந்தான். நான்தான் வரக் கூடாதென்று தடுத்துவிட்டேன்."

சிவகாமி மறுபடியும் ஆயனரைப் பார்த்து, "அப்பா! கமலிக்குக் குழந்தை பிறந்ததும் சொல்லி அனுப்பச் சொல்லுங்கள்!" என்றாள். எக்காரணத்தினாலோ மகேந்திர பல்லவரை ஏறிட்டுப் பார்க்கவே அவளுக்குச் சங்கோசமாயிருந்தது.

"ஆகட்டும், சிவகாமி! அப்படியே சொல்லியனுப்பச் சொல்லுகிறேன். ஆயனரே! நான் புறப்படட்டுமா? போகும் வழியில் வேணுமானால் சற்றுப் பாறைகளைப் பார்த்துவிட்டுப் போகலாம். நீரும் வருகிறீரா?" என்று சக்கரவர்த்தி கேட்டார்.

"ஆகட்டும் பிரபு! அதைவிட எனக்கு என்ன வேலை?" என்று ஆயனர் எழுந்தார்.

"இன்னும் ஒரு விஷயம் மறந்துவிட்டேன்" என்று கூறி, மகேந்திர பல்லவர் தமது அங்கிப் பையிலிருந்து அறுகோண வடிவமான பதக்கம் ஒன்றை வெளியில் எடுத்தார்.

அதைக் காட்டி, "ஆயனரே! இது என்ன தெரிகிறதா?" என்று சக்கரவர்த்தி கேட்கவும், "தெரிகிறது, பிரபு! சிங்க இலச்சினை" என்றார் ஆயனர்.

"ஆமாம், ஆயனரே! இந்த இலச்சினை பல்லவ இராஜ்யத்தில் மொத்தம் பதினொரு பேரிடந்தான் இருக்கிறது. பன்னிரண்டாவது இலச்சினையை உம்மிடம் கொடுக்கிறேன். இதைக் காட்டினால் இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தின்

# அருள்வாக்கு

நிரிமாக ஒருத்தனுக்குத் தானம் பண்ணாமல் இருக்கலாம். எவனோ கடன் கேட்டால் கொடுக்க மாட்டேன் என்று சொல்லலாம். ''கொடுத்தா வைத்திருக்கிறீர்? என் பணம். கொடுப்பதும் கொடுக்காததும் என் இஷ்டம்'' என்று சொல்லலாம். ஆனால், நாம் கடன் பட்டிருக்கும்போது, கடன் கொடுத்தவன் திருப்பிக் கேட்டால் இப்படிச் சொல்ல முடியுமா? முடிகிறதோ இல்லையோ எப்பாடு பட்டாவது, அவனுக்குக் கொடுத்துத் தீர்க்கதானே வேண்டும்? இப்படித்தான் நாம் கடன்பட்டிருப்பவர்களுக்காக வேதம் பஞ்ச மஹா யஜ்ஞங்களை விதித்திருக்கிறது. கடன் என்றால் திருப்பித்தானே ஆக வேண்டும்? ஆகவே, இதைச் செய்ய மாட்டேன் என்று சொல்ல, நமக்கு 'ரைட்'டே கிடையாது. நம் போன்ற மனுஷ்யர்களுக்கும் பசு, பக்ஷிகளுக்கும் உபகாரம் என்ற ரூபத்தில் யஜ்ஞம் செய்து, அவற்றைத் திருப்திப்படுத்த வேண்டியது நம் கடமை. 'கடன்' என்பதிலிருந்து கடமை என்பது வந்திருக்கிறது. ஈச்வரன் இந்தப் பிரபஞ்சத்திலே ஒரு ஜீவனைப் பிறப்பித்து அந்தப் பிரபஞ்சத்தால் அவன் பலவிதமான ஸௌக்கியங்களை அடைய வேண்டுமென்று வைத்திருக்கிறபோதே, அதைச் சேர்ந்த எல்லா வகை ஜீவ இனங்களும் - பூச்சி பொட்டிலிருந்து ஆரம்பித்து, தேவ, ரிஷிகள் வரைக்கும் - தன்னாலான தொண்டை அவன் செய்ய வேண்டும் என்று வேதத்தின் மூலம் ஆர்டர் போட்டிருக்கிறான். ஆதலால், இதைக் கடனாக, கடமையாகச் செய்தேயாக வேண்டும். 'கடனே' என்று செய்யாமல், அன்பைக் கலந்து, உபகாரத்துக்குப் பாத்திரமாகிற எல்லாரையும் அந்த ஈச்வர ஸ்வரூபமாகவே பாவித்து அடக்கத்தோடு பணி செய்ய வேண்டும்.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சாரிய சுவாமிகள்

எந்த மூலை முடுக்கிலுள்ள அதிகாரியும் நீர் விரும்பியதைச் செய்வார். எந்தக் கோட்டைக் கதவும் உடனே திறக்கும். இதை வைத்துக்கொண்டு என்னையும் மாமல்லனையும் எந்த நேரத்திலும் பார்க்கலாம். இந்த யுத்த காலத்தில் உம்மிடம் இது இருக்கட்டும் என்று கொடுக்கிறேன். சர்வ ஜாக்கிரதையாய் வைத்துக் கொள்ள வேண்டும், ஏதாவது மிகவும் முக்கியமான காரணம் ஏற்பட்டாலன்றி இதை உபயோகிக்கக் கூடாது'' என்று கூறிச் சக்கரவர்த்தி இலச்சினையை நீட்டினார்.

"பிரபு! இந்த ஏழைச் சிற்பிக்கு எதற்காக இந்தச் சிங்க இலச்சினை?" என்று ஆயனர் அதை வாங்கிக் கொள்ளத் தயங்கினார்.

"ஆயனரே! இந்தப் பெரிய இராஜ்யத்தில் உம்மையும் உம்முடைய குமாரியையும் காட்டிலும் எந்தச் செல்வத்தையும் நான் பெரிதாய்க் கருதவில்லை. ஏதாவது ஒரு சமயத்திற்கு வேண்டியதாயிருக்கலாம். ஆகையால், வாங்கிப் பத்திரமாய் வைத்துக் கொள்ளும்" என்று மகேந்திர பல்லவர் கையை நீட்டிக் கொடுக்க, அதற்கு மேல் ஆயனரால் அதை மறுக்க முடியவில்லை. பயபக்தியுடன் வாங்கிக் கொண்டு, "அம்மா சிவகாமி! இதை உன் பெட்டியில் பத்திரமாய் வைத்து விட்டு வா!" என்று சொல்லிக் கொடுத்தார்.

சிவகாமி அந்தச் சிங்க இலச்சினையை வாங்கிக்கொண்டு, அடுத்த அறைக்குள் அதைப் பத்திரப்படுத்தப் போனாள். அங்கே அந்தக் கிராமத்துப் பெரிய வீட்டுப் பெண்மணிகள் அவளுடைய ஆடை ஆபரணங்களை வைத்துக் கொள்வதற்காக அளித்திருந்த அழகிய வேலைப்பாடமைந்த பெட்டி இருந்தது. பெட்டியைத் திறந்து, அதற்குள்ளே சிங்க இலச்சினையைச் சிவகாமி பத்திரப்படுத்தினாள்.

அவ்விதம் அவள் பெட்டியைத் திறந்து, சிங்க இலச்சினையை வைத்ததை, அதே அறையில் தூணுக்குப் பின்னால் மறைந்திருந்த நாகநந்தி பிக்ஷு கவனமாகப் பார்த்துக்கொண்டிருந்தார்!

(தொடரும்)

## ஜோதிட பயிற்சி வகுப்பு
## நேரடி/அஞ்சல் வழி

14.07.02 ஞாயிறு காலை 10.00 மணி
M.C.H.S.பள்ளி, R.M.S.ரோடு, மதுரை–1.

6 மாத கால நேரடி ஜோதிட பயிற்சி, திருவருள் ஜோதிட பயிற்சி மைய பேராசிரியர் மரு.கு.ம.பா.சாந்த லிங்கனார் மற்றும் பேராசிரியை மரு.சாந்தகுமாரி ஆகியோர்களால் பயிற்சி கொடுத்து பயிற்சி முடிவில் தேர்வு மூலம் தகுதிலை தெரிவு செய்து பயிற்சிசான்றும் சிறப்பு பட்டமும் வழங்கப்படும். கடந்த 10 ஆண்டுகளாய் சேவையாற்றி வருகின்ற நிறுவனம் சேவை கட்டணம் மாதம் ரூ.125/- மட்டும் பெண்கள் ஜோதிடத்தில் விழிப்புணர்வு கொள்ள வேண்டும். அஞ்சல் வழியில் பயில விரும்பு பவர்கள் திருவருள் ஜோதிட பயிற்சி மையம் என்ற முகவரிக்கு ரூ. 20/- M.O. செய்து விண்ணப்படிவம் மற்றும் விளக்க குறிப்பு பெற்றுக் கொள்ளவும்.

பல்கலைக்கழக தேர்வு எழுதுபவர்களுக்கு பயன் உண்டு ஆண் பெண் இருபாலரும் சேர்ந்து பயிற்சி பெறலாம்.

*தொடர்பு முகவரி*

**திருவருள் ஜோதிட பயிற்சி மையம்**
16, காருண்யநிவாஸ், ஜேம்ஸ் கார்டன் ரோடு,
பசுமலை, மதுரை–4. Ph:0452-371436, 566557
Cell : 98421-71346



# "கல்கி ஷாப்பிங்"

## பக்கங்களில்
## விளம்பரம் செய்ய
## ரூ. 1250/- மட்டுமே.
## செய்து பயனடைவீர்!

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடு தாங்கல், சென்னை - 97.
போன்: 2345622, 2345623

# ஆத்ரேயா

- ★ ரெடிமேட் ரவிக்கைகள்
- ★ பெட்டி கோட்ஸ்
- ★ நைட்டீஸ்
- ★ Childrens Nighties and Tops



ஹலோ! மந்திரி மணவாளன்தானே? நான் இளவரசன் ரகு வர்மன் பேசுகிறேன். நானும், இளவரசி அமிர்தவல்லி தாயாரும் சென்னையில் இன்னும் பத்து நாட்கள் தங்க தீர்மானித்துள்ளோம். ஆகையால் நீர் உடனடியாக இளவரசிக்கு வேண்டிய துணிவகைகளை கொரியரில் அனுப்புங்கள். என்னைப்பற்றி கவலை இல்லை. நான் இந்த ஒரே ஆடையை வைத்தே சமாளித்துக் கொள்கிறேன்.

ஐய்யோ மன்னா! கொரியர் வேண்டாம். ஏகப்பட்ட செலவாகும். அதைவிட சென்னையிலேயே பொற்காசுகள் கொடுத்து இளவரசிக்கு தேவையானதை வாங்கிவிடுங்கள். ரெடிமேட் ரவிக்கைகள் மட்டும் ஆத்ரேயாவில் வாங்குங்கள். அதை அணிந்தவுடன் அமிர்தவல்லிக்கு பத்து வயது குறைந்து மிகவும் எடுப்பாக இருப்பார்கள். ஹி! ஹி! ஹி! டாப் இளவரசே!

யோவ் மடமந்திரி! நாட்டைப் பற்றி ஜனங்களைப் பற்றி ஒரு கவலையும் இல்லை மண்ணும் இல்லை. ஆத்ரேயா ரெடிமேட் ரவிக்கை மிகவும் எடுப்பாக இருக்கும். பத்து வயது குறைத்துக் காட்டும்... இதெல்லாம் உமக்கு தேவைதானா? நான் வருவதற்குள் நாட்டை விட்டு ஓடிப் போய்விடு. ஹலோ! ஹலோ! ஆத்ரேயா அட்ரெஸ் என்ன?

**ATHREYA GARMENTS**™
House of Blouses

No.1, Jambulingam Street, (Valluvar Kottam High Road),
Nungambakkam, Chennai - 600 034.
☎ 8226586 Fax : 091-044-5360076
Website : www.athreyawoman.com E-mail : ois@md3.vsnl.net.in

ஆத்ரேயா ரெடிமேட் ரவிக்கைகள் கிடைக்கும் இடங்கள்

| SINGAPORE | : | MUSTAFFA (OLD) | NALLI Pvt. Ltd., |
|---|---|---|---|
| UAE | : | LULUCENTRE | |

CHARYS



'ரமணா' படத்தில் சாந்தமான கல்லூரிப் பேராசிரியராக நடிக்கிறார் விஜயகாந்த். "ஆக்ஷன் இல்லாத கதை. எனது சினிமா கேரியரில் இந்தப் படம் புது முயற்சி. தவிர இந்தப் படம் வெளிவந்தால் நிறைய பிரச்னைகளும் வரலாம்'' என்று பொடி வைத்து விஜய்காந்த் பேசியுள்ளதுதான் லேட்டஸ்ட் கோலிவுட் ஹாட் நியூஸ்!

படப்பிடிப்பு தொடங்கப்பட்டு பத்து தினங்களே ஆன 'பொன்மேகலை' படம் பற்றி இப்போதே டாக்!

'சேது' படம் அமைதியாய் வந்து அலையடித்து விட்டுப் போனது போல, ஒரு பாதிப்பை இந்தப் படம் ஏற்படுத்தும் என்ற செய்திக்கிடையே படத்தின் இயக்குனர் சக்தி சித்திரனை சந்திக்கும் வாய்ப்பு கிடைத்து விட, கதையென்னவென்று கேட்டு வைத்தோம். அறிமுகப் படமாயிற்றே, மனிதர் மூடி மறைப்பார் என்று பார்த்தால், முழுக் கதையையும் போட்டு உடைத்து விட்டார்.

"அரசு ஊழியர் ஒருவர் பணி நேரத்தில் திடீரென இறந்து போகிறார். அவரது மகள், கருணை அடிப்படையில் தனது தந்தையின் வேலையைத் தனக்குத் தரும்படி கேட்டு, சம்பந்தப்பட்ட அரசு அலுவலகத்திற்குச் சென்று உயர் அதிகாரியைச் சந்திக்கிறாள். ஃபார்மாலிட்டீஸ் என்ற போர்வையில் அவளை பாலியல் பலாத்கார முயற்சி செய்ய, அங்கிருந்து தப்பும் அவள் ஓரிரவில் சந்திக்கும் போராட்டங்களை விரசமோ, ஆபாசமோ இல்லாமல் யதார்த்தமாகச் சொல்லியிருக்கிறோம்'' என்கிறார் சக்தி சித்திரன்.

'பொன்மேகலை'யாக மலையாளத்திலிருந்து தமிழுக்கு வருபவர் நித்யதாஸ். இவர் அங்கே நடித்த மூன்று படங்களுமே சூப்பர்ஹிட்.

"படப்பிடிப்பு எதுவுமில்லாமல் குன்னூர் பங்களாவில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த என்னைத் தேடிப் பிடித்து 'மாறன்' படத்தில் நடிக்க கூட்டி வந்துவிட்

# இசை ராஜா... பராக்...பராக்...!







• நித்யதாஸ்

இந்தப் படத்தில் ஒரு பிரபல நடிகரின் மகனும் அறிமுகமாகிறார். பெயர் ரகு. அப்பா..? மணிவண்ணன்!

'காசி' படத்தில் பார்வையற்ற இளைஞனின், வாழ்க்கையைக் காட்டி உருக்கிய வினயன், இப்போது வாய் பேச முடியாத இளைஞன், கேட்கும் திறனற்ற யுவதி இருவருக்குமான காதலை நகைச்சுவைப் பின்னணியில் சொல்லப் போகிறாராம். காசிக்குப் பிறகு முகம் காட்டாத காவ்யா மாதவன் 'என் மன வானில்' மூலம் மறுபடியும் வருகிறார். இப்போதெல்லாம் இளம் மலையாள ஹீரோக்களும் விரும்பி தமிழில் நடிக்க வருகிறார்கள் என்பதற்கு இந்தப் படத்தின் மூலம் தமிழுக்கு அறிமுகமாகும் ஜெயசூர்யா ஓர் உதாரணம்.

மிக மோசமான நிலையில் படுத்துக் கிடந்த ஆடியோ மார்க்கெட் ராஜாவின் சுறுசுறுப்பிற்குப் பிறகு சூடு பிடித்துவிட்டதாமே. பின்னே! முன்னணி பட நிறுவனமான ஆஸ்கார் பிலிம்ஸ் தயாரிக்கும் மூன்று படங்களுக்கு ராஜாதான் இசை. இது தவிர [illegible]யைக் கேட்டு பதினைந்து படங்களை ஒப்புக் கொண்டிருக்கிறாராம் இளைய ராஜா.

— சக்கரம்

டார்கள். 'அமைதிப் படை' மாதிரி எனக்கு இந்தப் படம் ஒரு திருப்புமுனையாக அமையப் போகிறது'' என்று நம்பிக்கை தெரிவித்த சத்யராஜின் அருகில் பழகிய அழகிய முகம்! நம்ம சீதா பார்த்திபன். திருமணத்திற்குப் பிறகு 'மாறன்' மூலம் மீண்டும் சினிமா பிரவேசம். மாறன் ஒரு தூக்குத் தண்டனைக் கைதி. அவரைத் தூக்கில் போடக் கூடாதென்று தமிழகத்தில் உள்ள மாணவர்கள் ஒன்று திரண்டு போராடுகிறார்கள். ஏன் என்பதுதான் கதையாம்.



• ஜெயசூர்யா - காவ்யா மாதவன்

புக் பேங்க்

# சிதம்பர நினைவுகள்




தம் மனத்தில் மங்கிப் போகாமல் மீண்டும் மீண்டும் அலையடிக்கும் நிகழ்வுகளை 'சிதம்பர நினைவுகள்' நூலில் தொகுத்துத் தந்திருக்கிறார், பிரபல மலையாளக் கவிஞரான பாலசந்திரன் சுள்ளிக்காடு.

மனித வாழ்வு முழுமையும் மனிதர்களாலும், சம்பவங்களாலும், நினைவுகளாலுமே பிணைக்கப்பட்டிருக்கின்றன. தனக்கு நிகழ்ந்தவற்றை மிகையும், உன்னதமும் படுத்துகிற மனிதர்களின் மத்தியில் பாலசந்திரனது திறந்த, சுய கவனமற்ற இந்தத் தொகுப்பின் நினைவு கூரல்கள் அவரது மீதான மதிப்பை உயர்த்துகின்றன.

தந்தை தாய்க்கு உபயோகமற்றவராக இருந்திருக்கிறார். சாப்பாட்டுக்காக அலைந்திருக்கிறார். யாசகம் பெறுவதில் தயக்கமற்று போயிருக்கிறார்.

புகழ் பெற்ற கவியாயிருந்தபோதும் வீட்டுக்கு வந்த சேல்ஸ் கேர்ளிடம் தகாத முறையில் நடக்க முயன்றது, அதனை மனைவியிடம் சொன்னது, ஒரு வேசியின் மடியில் குழந்தைபோல் தலை சாய்த்து உறங்கியது, வாழ்வின் சோகங்களிலேயே உச்சமாக, தன் குழந்தையையே வறுமையின் காரணமாக கர்ப்பத்திலே கலைத்தது என்று விரிகிற சம்பவங்கள் யாவும் பாலசந்திரனை நமக்கு மிகவும் அண்மையான, உண்மையான மனிதனாக உணரச் செய்கின்றன. பலவீனங்களால் சிறுமைப்படுத்தப்பட முடியாத ஒரு மனிதனாக, கலைஞனாக மிளிர்கிறார் பாலசந்திரன்.

சில சம்பவங்கள் 'இப்படிக்கூட நடக்குமா?' என்கிற வியப்பை ஏற்படுத்துகின்றன. 'தீப்பாதி'யின் சாஹினாவும், 'விஷக்கன்னி' லைலாவும், 'மாயம்' ராதிகாவும்... நம்மை உலுக்குகின்றனர்.

மாதாவின் பெயரால் யாசகம் எடுக்கிற கிழவியின் குற்ற உணர்வும், கவிஞன் ஸ்ரீவத்ஸனின் வறுமையும் 'கர்ப்பவதத்'தில் பாலசந்திரனுக்கு நேர்ந்த அவலமும் புரட்டிப் போட்டு அழ வைக்கின்றன.

வெகு நாட்களுக்குப் பிறகு வாசிப்பின் போது நெகிழ வைத்த புத்தகம் இது.

வாசிக்கும் எவரும் இதனுள் அமிழ்ந்திப் போகிற விதமாக அருமையாக மொழி பெயர்த்திருக்கிறார் கே.வி. ஷைலஜா.

இதனைப் படித்தபோது ஏற்படுகிற அதே நிறைவு, நண்பர்களிடத்திலே 'இந்தப் புத்தகத்தைப் படியுங்கள்' என்று சொல்லும் போதும் ஏற்படுகிறது.

**காவ்யா, 14, முதல் குறுக்குத் தெரு, ட்ரஸ்ட்புரம், சென்னை - 24. விலை ரூ.60.**

**— பாஸ்கர் சக்தி**

# துணைப் பிரதமர் பதவி தேவையா?

● எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப் பட்டி

? அடி சக்கை என்று யாரையாவது அல்லது எதையாவது தராசார் பாராட்டியது உண்டா?

! ஏனில்லை! சமீபத்தில் கோல்டன் ஷூவைத் தட்டிச் சென்ற ரொனால்டோவை.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? காஷ்மீர் தேசிய மாநாடு கட்சித் தலைவர் பதவியை உமர் அப்துல்லா ஏற்றுள்ளது பற்றி..?

! ஷேக், ஃபரூக்குக்குக் கொடுத்தார். ஃபரூக், உமருக்குக் கொடுத்துள்ளார். கட்சித் தலைமை குடும்பத்துக்குள்ளேயே சுற்றுவது அழகாய்த்தான் இருக்கிறது. உட்கட்சி ஜனநாயகம்தான் விகாரமாகிவிட்டது.

● கே. தெய்வசிகாமணி, சென்னை - 30

? 'என்மீது இரக்கம் கொண்டு, என் தவறுகளை மன்னித்து, எனக்கு மறு வாழ்வு தருமாறு கேட்டுக் கொள்கிறேன்' என்று வலம்புரிஜான் 'அம்மா'வுக்கு எழுதிய கடிதம் குறித்து...?

! இலக்கியச் சொற்பொழிவுகளில் அவர் வலம்புரிச் சங்கு; அரசியலில் சாதா சங்கு! ஜான் மதிப்பு என்றோ 'கான்'!

● த. சத்தியநாராயணன், அயன்புரம் ❒

? துணைப் பிரதமர் பதவி அவசியமா?

! அவசியமில்லை என்பதனால்தான் அரசியல் சாசனத்தில் இடம் பெறவில்லை. ஆனால், கட்சிக்குள் அதிகார கேந்திரங்கள் தோன்றி, வலிமைகளைச் சோதிக்கும்போது பலவீனமான பிரதமர் விட்டுக் கொடுக்காமல் வேறென்ன செய்வதாம்!

● கே.என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்

? வாஜ்பாய் நிர்வாகத்தில் குறை ஏதேனும் தெரிகிறதா..?

! குறையைத் தவிர வேறெதாவது தெரிகிறதா என்று கேட்டிருக்கலாம் நீங்க!

● எஸ். ராஜகோபாலன், திருவனந்தபுரம்

? சேலம் மாவட்ட பள்ளி ஒன்றில் மாணவ மாணவிகள் 72 கி.மீ. நீளத்துக்கு வாழ்த்து எழுதி முதல்வருக்கு அளித்தார்களாமே..?

! குழந்தைகளின் மனம் புண்படக் கூடாது என்று ஏற்றாலும், ஆசிரியர்களை அழைத்து இந்த அபத்தத்தை முதல்வர் கண்டித்திருக்க வேண்டும்.

● ரஞ்சனிப்ரியன், ஈரோடு - 10

? வாஜ்பாய் உடல்நிலையை விமர்சித்த டைம் பத்திரிகை மத்திய அரசிடம் மன்னிப்புக் கோரியுள்ளதே..?

! கட்டுரையின் ஒரு சில பகுதிகள் எழுதப்பட்ட முறைக்கு மன்னிப்புக் கோருவதாகக் குறிப்பிட்டு (மேம்போக்காக) முடித்துவிட்டது. எழுதிய நிருபர் தாம் கூறியவற்றில் உறுதியாக இருக்கிறார் என்று சொல்லவும் தவறவில்லை.

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்

? தென்கச்சி சுவாமிநாதன் வானொலியிலிருந்து ஓய்வு பெறுவது பற்றி?

! இலட்சக்கணக்கான நேயர்கள் 'தகவல்' தொடர்ந்து ஒலிபரப்பாக வேண்டும் என விண்ணப்பித்திருப்பது, அவருடைய புகழுக்கு ஓய்வில்லை என்பதை உணர்த்துகிறது.

● வடபழனி சீனு, சென்னை - 26 ★

? நேபாள மன்னர் தம்பதி அண்மையில் வந்தபோது, அஸ்ஸாம், கல்கத்தா கோயில்களில் நேர்த்திக்கடன் என்கிற பெயரில் விலங்குகளை பலியிட்டிருக்கிறார்களே..?

! விலங்குகளை பலியிடும் அநாகரிகம் நம் நாட்டில் தடை செய்யப்பட்டிருக்கிறது. அயல்நாட்டு அரசு விருந்தினருக்காகக் கூட அத்தடை நீக்கப்பட்டது மாபெரும் தவறு.

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன் கோட்டை

? பாகிஸ்தானில் பட்டதாரிகள் மட்டுமே தேர்தலில் போட்டியிட முடியும் என்ற புது உத்தரவை முஷரஃப் பிறப்பித்திருப்பது எதைக் காட்டுகிறது?

! அவர் எப்பேர்ப்பட்ட சர்வாதிகாரி என்பதை.

● சி.பி. ராஜூ, கல்பாக்கம்

? வாகனங்களுக்கு நம்பர் பிளேட் மாற்று

❒ ரூ.100 பரிசு பெறுபவர் : த. சத்தியநாராயணன், 61, பழனியாண்டவர் கோயில் தெரு, அயன்புரம், சென்னை - 600 023.

**வதில் இவ்வளவு குழப்பமா...?**

! அதானே, கறுப்புப் பின்னணியில் வெள்ளை எழுத்தானால் என்ன, வெள்ளைப் பின்னணியில் கறுப்பு எழுத்தானால் என்ன..? நம்பர் பிளேட் தயாரிப்பாளர்கள் கொள்ளை அடிக்கத்தான் பயன்பட்டுள்ளது இந்தத் தேவையற்ற உத்தரவும் முடிவு தேதி ஒத்திவைப்புகளும்.



* நலிவும் சரிவும்

● லெ.நா. சிவகுமார், சென்னை - 33

**? அம்பானியின் உடல்நலக் குறைவால் பங்கு மார்க்கெட் சரிந்தது குறித்து...?**

! எல்லா நாடுகளிலும் இது போன்ற பங்கு மார்க்கெட் ஏற்றத் தாழ்வுகள் நிலவும். சமீப காலங்களில் இந்தியாவில் வெற்றிகரமாக நடந்து வரும் மிகச் சில தொழிலகங்களில் ஒன்று ரிலையன்ஸ் என்கிறபோது அதன் அதிபரின் உடல் நிலை பாதிப்பு பங்கு மார்க்கெட்டையும் பாதித்திருப்பது ஆச்சர்யமில்லை.

● கே.வி. ராமன், சென்னை - 73

**? குஜராத்தில் அஹிம்சை பல் கலைக் கழகம் தொடங்கப் போகிறா ராமே மோடி...?**

! அடி சக்கை! அப்படிப் போடு அரி வாளை!

● பி. குமார், சேலம் - 6

**? தமிழகம் முழுதும் கண்ணகி சிலை அமைக்கப்படும் என்கிறாரே கலைஞர்..?**

! சமுதாய நோக்கில் அர்த்தமற்றது.



* டீபியின் வேஸ்ட்



* பிரதமரின் பலவீனம்



* இரக்கமும் ஏற்றமும்!



* தொடரட்டும் தகவல்!



* தங்கத் தலைவன்!



* புதிய உத்தரவு

அரசியல் நோக்கில் தேவையற்றது.
இலக்கிய நோக்கில் அபத்தமானது.
பகுத்தறிவு நோக்கில் பரிதாபமானது.
சாணக்கிய நோக்கில் சாதாரணமானது.
மக்கள் சக்தியையும் நேரத்தையும் பொருளையும் வீணடிப்பது.

★ ரூ.50 பரிசு பெறுபவர் : வடபழனி சீனு, 'சாயி லோக்', பிளாட் 46, கதவு எண்.1, குமரன் காலனி, இரண்டாம் தெரு, சென்னை - 600 026.

# கிச்சன் டெண்டுல்கர்!

மும்பையும் அதன் சுற்றுப் புறங்களும் தண்ணீர்க் கடலில் மூழ்கியதால், மக்கள் கண்ணீர்க் கடலில் மூழ்கினார்கள்; அப்படி ஒரு வெள்ளக்காடு! தாணா, பிவண்டி பகுதிகளில், வீடுகளின் முதலிரண்டு மாடிகளின் உயரத்திற்கு நீர் உயர்ந்திருந்தது. கண்ட்ரோல் டவர்களிலும், போலீஸ் சௌக்களிலும் இருந்தவர்களே, சுற்றி நின்ற பாம்பு, தேள், தவளை, தேரை நெளியும் நீரைக் கண்டு அரண்டு பதுங்கியிருந்தனர் என்றால்... தரை மட்டத்தில், மாட்டுப் பண்ணைகளில், ஒரே கூரை அடியில் எருமைகளைக் கட்டிப் போட்டிருந்தவர்களின் மனநிலை எப்படி இருந்திருக்கும்? நூற்றுக்கணக்கான ஆடு மாடுகளுக்கு ஒரு சேர முக்தி கிடைத்து விட்டாலும், அவற்றின் பூத உடல்களிலிருந்து எழும் துர்நாற்றத்திலிருந்து சுற்றி வசிக்கும் மனிதர்களுக்கு இன்னும் முக்தி கிடைக்கவில்லை; பாய்கர் அருகே, ஒரு நூறு வயசான பாலம் ஆட்டம் காண, லோக்கல், நெடுந்தூர ரயில் போக்குவரத்து தடைப்பட்டது. பஸ்கள் ஊர்ந்தன; கிலோ 40, 50 ரூபாய்களில், காய்கறிகள் ராஜபார்வை பார்த்தன. உயிர்ச்சேதம், பொருட்சேதம் என்ற இரு முனைத் தாக்குதலில் தவித்த முதல்வர், மத்திய அரசிடம் 75 கோடி கேட்டு, கையில் திருவோடு ஏந்திவிட்டார்!



• வெற்றிக் களிப்பில் பாலிவுட் - அரசியல் ஜோடிகள்

கையில் திருவோடு ஏந்தி வந்தவர்... உன்னத உழைப்பால், கையில் 'திரு'வோடு உயர்ந்து நிற்பவர்... ரிலையன்ஸ் ராஜ்யத்தின் முடிசூடா மன்னனான 'திரு பாய்' அம்பானி இப்படிப் படுத்த படுக்கையாகி விட்டாரே? மகன்கள் அனைவருக்கும் முகேஷுக்கும், ப்ரீச் கேண்டிக்குப் படை எடுக்கும் வி.ஐ.பிகளுக்கு நன்றி தெரிவிக்கவே நேரம் போதவில்லையே? அரசியல் தலைவர்கள், சினிமா நட்சத்திரங்கள் ஒருபுறமென்றால் ஆன்மிகவாதிகள், மடாதிபதிகள் மறுபுறம். நம் ஜெயேந்திரரும் அவருக்கு, திருவண்ணாமலைக் கோயில் பிரசாதத்தை வழங்கி, காஞ்சிக் கோயிலில் சார்த்தப்பட்ட புனிதப் பொன்னாடையைப் போர்த்தி, ஒரு நாற்பத்தைந்து நிமிடங்கள் ஆஸ்பத்திரியில் கழித்தார். ஸ்வாமி நாராயண் இயக்கத்தைச் சார்ந்த 'பிரமுக் சுவாமி'களும், நூற்றாண்டு புராதான ஸ்வாமி நாராயண் விக்கிரகத்தை அம்பானியின் மார்பில் வைத்து, தலையிலிருந்து கால்வரை, பலமுறை தம் திருக்கரங்களால், சுவாமி நாராயண் பெயரைச் சொல்லி, வருடிவிட்டார். உஜ்ஜயினியிலுள்ள மஹாகாளி கோயிலில், மஹா ம்ருத்யுஞ்சய ஜபமும் செய்யப்பட இருக்கிறது. பிரார்த்தனைகள் பலிக்கட்டும்!



• வெட்டப்பட்ட சமூக சேவகி

பலித்துவிட்டதே ஷத்ருகன் சின்ஹாவின் நெடு நாளைய கனவு. பதினைந்தாண்டுகளாக, விசுவாசமாக ஒரே கட்சியில் குப்பை கொட்

• அம்பானிக்குப் பிரார்த்தனை

• சச்சின் காபியா?



டிக்கொண்டிருந்தவருக்கு, முதன்முறையாக காபினட் ராங்க்கில், குடும்ப ஆரோக்ய நல மந்திரி பதவி கிடைத்திருக்கிறதே! "வடை பாயசத்தோடு சாப்பிடும் நட்சத்திர அந்தஸ்தில் இருந்தவர்; பாவம்... பலமுறை வெறும் 'வடா பாவ்'வுடன் வாடும் அரசியல்வாதியாக, அலைந்து, திரிந்து வேலை செய்தார்; அவர் தகுதிக்கும் திறமைக்கும் ஏற்ற பதவி இத்தனை காத்திருப்புக்கு பின் பாவது கிடைத்ததில் எனக்கு மகிழ்ச்சியே" என்று ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறார் மனைவி பூனம். ஸ்டேட் ராங்க்கில், சுற்றுலா - கலாசார மந்திரியாக உயர்ந்திருக்கும் மற்றொரு நடிகர் வினோத் கன்னா. "இன்னும் அதிக வேலை செய்வதற்கு, இப்பதவி அவருக்கு வாய்ப்பை அளித்திருக்கிறது. அவர் நல்ல நடிகர்; நல்ல அரசியல்வாதி என்பதற்காகவெல்லாம் இல்லாமல், நல்ல உழைப்பாளி, நல்ல மனிதன் என்பதற்காகவே அவரைக் காதலிக்கிறேன்'' என்றார் அன்பு மனைவி கவிதா! ஆக மொத்தம்... பாலிவுட்டுக்குக் கிடைத்திருக்கிறது, இரட்டை மகுடம்!

இரட்டை மகுடத்தைச் சுமக்கும் ஆசை வந்துவிட்டது சச்சினுக்கு! ஏற்கெனவே ஒன்று, கிரிக்கெட் துறையில் வென்றாகி விட்டது; மற்றொன்று சொன்னால் நம்ப மாட்டீர்கள்... சாப்பாட்டுத் துறையைத்தான் குறி வைத்திருக்கிறார். பிரபல ஹோட்டலியர் சஞ்சய் நரங்குடன் பேசிவிட்டாராம்; மும்பையின் 'ஸூப்பர் செஃப்' ஒருவரையும் வளைத்துப் போட்டிருக்கிறாராம்; ரெஸ்டாரண்ட் ஆரம்பிக்க வேண்டியதுதான் பாக்கியாம்; இந்தக் கிசு கிசு மட்டும் உண்மையாகிவிட்டால், எல்லோரும் டெண்டுல்கர் கிச்சனிலிருந்து வரும் டெண்டுல்கர் சிக்கனுக்காக நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டிருப்பார்கள்!

தொங்கப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்... நாக்கையல்ல... தலையைத்தான்! விரார் - வசாய் பகுதியில் வசிப்பவர்கள் வேதனையால், இயலாமையால், தலை குனிந்து நிற்கிறார்கள்; இங்கு ஆதிவாசிகளுக்குச் சொந்தமான நிலங்கள் ஏராளம்; அதை பில்டர்களும் அண்டர்வால்ட் ஆசாமிகளும், அரசியல்வாதிகளின் ஆசீர்வாதத்துடன், இந்த ஏழை எளியவர்களை அதட்டி, மிரட்டி, பறித்து, கட்டடம் எழுப்பி, காசு பண்ணிக் கொண்டிருந்தார்கள். தட்டிக் கேட்டு, ஓரளவு வெற்றியும் பெற்றார், ஐம்பத்து நான்கு வயதுப் பெண்மணியான நல்லின் குமார். இவரை, இவரது வீட்டு மாடியிலேயே தீர்த்துக் கட்டியிருக்கிறார்கள். அவர் வசிக்கும் நல சோபாரா பகுதியே கூக்குரல் எழுப்பியும் காவல் துறையின் காதுகள் செவிடாகவே இருக்கின்றன!

- ஜெயஸ்ரீ ராஜ்



இப்போது, எல்லாம் பழகிவிட்டது... என்றாலும் முதலில் எத்தனை சிரமப்பட்டேன் நான்.

நான் ஒரு பத்திரிகைப் புகைப்படக்காரன். விநோதமான கலவைகள் நிறைந்த அனுபவங்கள் எங்களுக்கு நேரிடும். அந்தக்கால கிராமஃபோன் ரெக்கார்டு, திடுதிப்பென்று கொடுத்த கீ தளர, ஒருவித சோக - இசை இரைச்சலோடு மெதுவாகப் பாடும். அல்லது சில சமயம் படு ஸ்பீடாக கீச்சிட்டுப் பாடும்... எங்கள் அன்றாட அனுபவங்களும் அத்தகையவை!

பத்து மணிக்கு ஒரு பிரபலஸ்தரின் கல்யாணத்தில் இருப்பேன். புகைப்படம் எடுப்பேன். அடுத்து அங்கிருந்து நேராக ஓர் அரசியல்வாதியின் பேட்டிக்குப் படம் எடுக்கப் போவேன். அத்தோடு போற வழியில் ஏதாவது சாவு என்றால் செல்ஃபோனில் செய்தி வரும். இங்கே செல், அங்கே செல் என்று அவசரச் செய்தி!

முதல்முறையாக ஒரு விபத்தைப் படம் எடுத்தபோது எத்தனை பதற்றமாய் இருந்தது... இடதுபுறச் சந்தில் இருந்து படுவேகமாக வந்த பைக், நேர்ச்சாலையில் தன்னியல்பாய் வந்த லாரி, இரண்டும் மோதிக் கொண்டன எனத் தெரிகிறது. அந்த இளைஞன் குடித்திருக்கலாம். அதிரடியான வேகத்தோடு அவன் வீட்டை நோக்கி அல்ல, சாவை நோக்கி அல்லவா போய் விட்டான். பைக் லாரியில் இடிபட்டு எங்கோ கிடந்தது. அவன் லாரியின் அடியில் கிடந்தான். அவன் கிடந்த கோலத்தை நினைத்துப் பார்க்கவே சிலீரென்றது.

எனக்குக் குடலைப் புரட்டிக்கொண்டு வாந்தி வந்தது. பாவி, அவசரப்பட்டு விட்டான். எத்தனைக் கனவுகள், ஆசைகள் சுமந்து திரிந்தானோ... தலையைச் சுற்றியது. என்னால் என் வண்டியை ஓட்டவே முடியவில்லை. வரும் வாகனங்கள் எல்லாமே என்னை நோக்கி, என்னை இடித்துத் தள்ள வருவது போலவே பிரமை, பயம், உடம்பு நடுங்கியது.

ரொம்ப நேரத்துக்கு அதன் கோரம் திரும்பத் திரும்ப மனத்தில் வருவதாய் இருந்தது.

"தம்பி, நீ இந்த உத்தியோகத்துக்கு லாயக்கில்லை..." என்றார் எங்கள் மூத்த புகைப்படக்காரர். மிக அபூர்வமான புகைப்படங்களுக்கே அவர் அனுப்பப்படுவார். எத்தனைக் குறைவான வெளிச்சத்திலும் அவரால் காட்சிப் பதிவில் ஒரு தெளிவான செய்தியைப் பதிய முடியும்.

"செத்தது நமக்குத் தெரிஞ்சவங்கன்னாலும் பதற்றப்படக்கூடாது சிவா. காட்சியைத் தெளிவாப் பதிவு செய்யணும். அது நம்ம வேலை. முக்கியமான வேலை..." என்பார் அவர்.

"நிறைய பேர் நினைப்பாங்க... என்னடா, கண்ணெதிரே ஒரு விபத்து. கோரமான விபத்து. பார்த்த க்ஷணத்தில் உசிரே பயந்து நடுங்குது. மொதல்ல அந்த ரத்தமும் சதையுமான நாத்தம்... அதுவே குடலைப் புரட்டுது. இப்படி நின்னு அயராம இவன் படம் எடுக்கறானேன்னு தோணும். மனுசனா இவன்னு திட்டக் கூடத் தோணும்..." என்பார் முராரி.

நான் அவரையே பார்த்தேன்.

"நாம எடுக்கற படம் இருக்கே... அது மறுநாள் காலையில் பத்திரிகைல வரும்போது. அதன் தத்ரூபம் அதை நேர்ல பார்க்காதவனையும் நேர்ல பார்த்தாப்போல அதிரச் செய்யணும்... இல்லையா? அதுதான் நம்ம கடமை... இல்லையா?" என்று விளக்குவார்.

மற்றவர்கள் மாதிரி எங்களுக்கு எட்டு மணி நேர வேலை என்று சொல்ல முடியாது. அலுவலகத்தில் காத்திருந்து வேலை பணிக்கப்



பட்டு மும்முரப்படுவதும் உண்டு. சரி, வேலை யில்லை. திருமண விழா, புத்தக வெளியீட்டு விழா, பொதுக்கூட்டம்... என்று நிகழ்ச்சிகள் இல்லை என்று வீட்டுக்குக் கிளம்பினால் வழியிலேயே செல்ஃபோனில் அவசர வேலை கள் சொல்லப்படுவதும் உண்டு. சில இரவு களில் வீட்டுக்கே இரவுகளில் அழைப்புகள் வரலாம்."

"சிவா, மயிலாப்பூர் பாலத்தில் பஸ் ஒண்ணு கவுந்துட்டது. சாவு முப்பது தாண்டிட்டது இப்பவே... பத்து நிமிஷம் முன்னாடி போலீஸ் லேர்ந்து சேதி வந்தது. சட்டுனு பிடிச்சிட்டு வா. காலைல எந்தப் பேப்பர்லயும் வராது. நாம முந்திக்குவோம்..." என்பார்கள் எடிட்டோரி யலில் இருந்து. பெரிய பத்திரிகை. போலீஸ் காரர்கள் சட்டென்று தகவல் சொல்லி விடு வார்கள்..

பாதி இராத்திரில ஃபோன் தொந்தரவு வந்தாலே இவனுக்கு எங்க ஏரியாவில் ஏதோ எசகு பிசகு என்று புரிகிறது. அவனோடு வெளியே எங்காவது கிளம்பிப் போகலாம்... என ஆசைப்பட்ட நிமிடங்கள் சட்டென்று பறிபோவதுண்டு. மாடியில் காற்று வாங்கியபடி நான் அவனோடு 'ஸ்வீட் நத்திங்க்ஸ்' பேசிக் கொண்டிருப்பேன். பக்கத்தில் வளர்ப்பு நாய்

**சைதன்யா**

போல செல்ஃபோன்.

எனக்கு ஆசையான கத்திரிக்காய் வதக்கலில் அவள் ஸ்பெஷலிஸ்ட். நல்லா ருசி தெரிய சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் ஃபோன் வரும். அட, கோமாவில் கிடந்த முன்னாள் மந்திரிக்குப் 'போய்ச்சேர' நல்ல நேரம் கிடைத்ததே என்றிருக்கும்.

ஏதாவது முக்கியமான விஷயம் அவள் பேச வேண்டியிருந்தால், "அந்த செல்லை ஒரு பத்து நிமிஷம் ஆஃப் பண்ணி வைங்க..." என்பாள் சாவித்ரி. பிறகுதான் வேலையை மறந்து நாங்கள் பேசிக் கொண்டிருப்போம். சில நாட்கள் மூடு வந்து நான் அந்த மங்கிய ஒளியிலேயே அவளை எடுத்த படங்கள் அற்புதமானவை. எங்கள் வீட்டு முகப்பில், ஆ, படுக்கையறையில் என அவை மணக்க மணக்க அலங்கரிக்கின்றன.

இந்த பத்திரிகை - வேலை அமையு முன்னால் எத்தனை விதவிதமான பூக்களை, இயற்கைக் காட்சிகளையெல்லாம் படமெடுத்தேன். அவசரம் இல்லாமல், நிதானமாய், அனுபவித்து எடுத்த படங்கள். அவையே எனக்கு வேலை வாங்கித் தந்தன. இப்போதுகூட ஞாயிறு சிறப்பு மலருக்கான பிரத்யேக வண்ணப்படங்கள், அழகழகான படங்களை நான் எடுக்கப் பணிக்கப்படுகிறேன். அந்நாட்கள் உற்சாகமானவை. நல்ல பிக்னிக் ஸ்பாட் போன்ற 'கவரேஜ்'கள் அமைந்தால் அவளையும் தயாராகச் சொல்லி கூட அழைத்துப் போவேன். பிரசுரமான படங்களின் நுணுக்கங்களை, அவற்றிற்குப் பயன்படுத்திய லென்ஸ்களைப் பற்றிக்கூட அவளுக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறேன்.

அவளே நானறியாமல் என்னை ஒருமுறை படம் எடுத்தாள். ஒளியைச் சரியாகக் கையாளத் தெரியாமல், அட்ஜஸ்ட் செய்யாமல், என் உடம்பே முழுக் கறுப்பாய் விழுந்திருந்தது அதில்... "உன்னை நான் எடுத்த படத்தின் அருகில் இதையும் ஃபிரேம் போட்டு வைப்போமா?" என்றேன். அழுதுவிடுவாள் போலிருந்தது. எனக்குச் சிரிப்பாக இருந்தது.

மனிதர்களை அவர்களின் வாழ்க்கைச் சூழலோடு தனி எடுப்பாக இப்போதுங்கூட எடுக்க எப்போதாவது வாய்ப்பதுண்டு. பிரமுகர்களின் பேட்டி என அமையும் தருணங்களில் பத்திரிகையில் பேட்டியையும் படத்தையும் பார்த்துவிட்டு சில சமயம் தொலைபேசியில் அவர்கள் பாராட்டியிருக்கிறார்கள். மகிழ்ச்சியான தருணங்கள் அவை.

சில வருடங்கள் கழித்து அவரது மரணத்தையே நான் 'கவரேஜ்' செய்ய நேர்ந்ததும்

> ''இவ்வளவு செலவு செய்து உன் மாமியாரை ஏண்டி 'ஜம்மு பார்டருக்கு' அனுப்பி வைக்கிறாய்?''
>
> '' 'ஷூட்டிங்' பார்க்க ஆசையாக இருக்கு என்று புலம்பிக் கொண்டிருந்தார்...''
>
> — லலிதா செல்லப்பா

உண்டு. நான் எடுத்த அவரது சிறப்பான புகைப்படமும் தற்போதைய சடலமும் ஒன்றாக வாழ்க்கைக் குறிப்போடு பிரசுரமாவதும் சகஜமே.

நடிகை பத்மஸ்ரீயின் 'புதுமுகம் அறிமுகம்' என்ற படமும், கலைமாமணி விருது அவள் பெறும் படமும், கடைசியில் அவள் தற்கொலை செய்துகொண்ட படமும் அருகருகே செய்தியோடு எங்கள் பத்திரிகையில் வந்தது ஞாபகம் வருகிறது.

"அவ ஃபீல்டுக்கு வருமுன்னால் எத்தனை ஆசை வைச்சிருந்தா தெரியுமா? அவ வீட்ல நுழைஞ்சாப்ல பாக்கற மாதிரி நான் அவளை எடுத்த முதல் படம்தான் எப்பவும் மாட்டி வைச்சிருப்பா. நிஜத்தில் அந்தப் படம் எடுத்த ராசிதான்... அந்த நேர்த்திதான் ஃபீல்டுல அவளைப் பிரபலப்படுத்திச்சுன்னு பேச்சுக்குப் பேச்சு சொல்லுவா" என்றேன் சாவித்திரியிடம். "அந்தப் படம் எடுத்து முடிஞ்சதும் தன்னோட ஆசைகள், கனவுகள் எல்லாத்தையும் ரொம்ப இயல்பாகப் பகிர்ந்துகிட்டது இப்பவும் ஞாபகம் இருக்கு... ச், வாழ்க்கைல என்னென்னவோ குளறுபடியாகி தற்கொலையே பண்ணிக்கிட்டா..."

எங்களுக்கு இதெல்லாம் பழகிவிட்டன. படமெடுக்கும் எந்தச் சூழலும் பாதிக்க நாங்கள் அனுமதிப்பதில்லை. பதவியிலிருக்கிற பெருந்தலைவர், பெரிய நடிகர், நான் மிகவும் ரசிக்கிற கலைஞர்... அவர் இசைப் பிரமுகரோ, ஓவியரோ... இறந்துபோய் அவரை ஐஸ்பெட்டியில் பொது வளாகத்தில், பொதுஜனங்கள் பார்வைக்கு என வைத்திருப்பார்கள். பார்த்தவனெல்லாம் கதறியழுவான். நாங்கள் போய் அமைதியாய்ப் படமெடுத்துவிட்டு வருவோம்.

சாவித்ரியின் அபிமான எழுத்தாளர் ஒருவர்... சாகித்ய அகாதெமி விருது பெற்றவர்... அவர் இறந்துபோன சேதி கேட்டதும், முதலில் அவளுக்கு நான்தான் தொலைபேசியில் தகவல் சொன்னேன். "ஐயோ" என்றாள் அவள். எந்த அதிர்ச்சிக்கும் அவள் நெஞ்சைப் பிடித்துக் கொள்வாள். நான் தொலைபேசியில் பேசினாலும் அந்தக் காட்சியை என்னால் யூகிக்க முடிந்தது.



"அவரைப் படமெடுக்கத்தான் கிளம்பிட்டிருக்கேன்..."

"நம்ம வீடு தாண்டித்தானே போவீங்க. நானும் வரேன்" என்று கூட வந்தாள். எழுத்தாளரைப் பார்த்ததும் அவள் அழுத அழுகை... நான் மௌனமாய் அவரைப் படம் எடுத்துவிட்டு வெளியே வந்தேன். அவளுக்கு ஆச்சரியமாய் இருந்தது.

"உங்க நெஞ்சென்ன கல்லா?" என்றாள் சாவித்ரி. "பொறுத்துக்கும். எழுத்தாளர் சங்கத்துல மௌன ஊர்வலம் போறாங்க. அதைவிட, அவரோட அருமையான வாசகர் நீங்க..."

"தொழில்!" நான் சிரித்தேன்.

சில கலவரச் சேதிகளையும் படமெடுக்க வேண்டி வரும். பயந்து நடுங்க நடுங்கிப் போவோம். எதுவும் நேரலாம். எங்கள் உயிருக்கே உத்திரவாதம் இல்லாதிருக்கும். படம் எடுக்கப் போகவே நெஞ்சில் தில் வேணும். இதில் படம் சிறப்பாய் அமைய வேண்டும்...!

நான் எடுத்த சில பழைய கலவரப் படங்களையெல்லாம் எங்கள் ஆசிரியர் அவசரம் என்று புதுசாய்க் கிளம்பிய கலவரத்திற்குக் கூடப் பயன்படுத்தியிருக்கிறார்! செத்தவர்கள் அந்தப் படத்தில் மீண்டும் உயிர்தெழுந்து அடி வாங்கினார்கள்...

அரசியல்வாதிகளைப் படம் எடுக்கையில், அவர்கள் மேடையில் அமர்ந்து சக பேச்சாளர்களுடன், மாற்றுக் கட்சி அரசியல் பிரமுகர்களுடன் ஒரே மேடையில் அமர்ந்து பேசுகிற காட்சிகளையெல்லாம் சரசரவென்று படம் எடுப்போம். பிற்பாடு கூட்டணி உடன்பாடு என்றோ, முறிவு என்றோ அவற்றை தேவைப்படி பயன்படுத்துவோம்.

விநோதமான 'கவரேஜ்'களுடன் எங்கள் ஆல்பம் அமையும். கட்சித் தலைவர் பேசுகிற படங்கள், கொட்டாவி விடும்படம், தலையில் கை வைத்துக் கொண்டு, கை கூப்பிக் கொண்டு, டாடா காட்டிக்கொண்டு... இப்படி பிற்காலத்தில் செய்திகளின் சுவாரஸ்யப்படி, தேர்தலில் ஒரு பிரமுகர் தோற்றுப் போனபோது தலையில் அவர் கைவைத்த நிலையிலான படம் பார்க்க வேடிக்கையாக, படிக்கிறவர்களுக்குச் சிரிப்பை வரவழைக்கும், இல்லையா?

நடிகன் திலக்ராஜ் திடீரென்று முதல் மனைவியை விவாகரத்து செய்துவிட்ட சேதி பெரிய பரபரப்புக்குள்ளாகியிருந்தது. சாவித்ரி திலக்ராஜின் பரம ரசிகை. அவன் மனைவியும் ஒரு நடிகை. ஆனாலும் அவளை எவ்வளவு நேசித்தான்... அவளுக்கு உடம்பு சரியில்லாமல் இருந்தபோது அவன் மொட்டை போட்டுக் கொண்டான்.

விவாகரத்து செய்தி வெளிவந்த எங்கள் பத்திரிகையில் அவன் மொட்டைத் தலையாய் இருக்கிற படமும் வெளிவந்தது. அந்தப் படத்தை எடுத்தது நானே.

"சாவித்ரி?" என்று ஃபோனில் கூப்பிட்டேன் நான்.

"என்ன சுவாரஸ்யமான செய்தி இன்னிக்கு?" என்று கேட்டாள் உற்சாகமாய்.

"உன் அபிமான திலக்ராஜ்... இரண்டாங் கல்யாணம் பண்ணிக்கிட்டான்!"

"யாரை?" என்றாள் பரபரப்புடன்.

"தேவி கௌசல்யா..."

"போயும் போயும் அவளையா? அவ மார்க்கெட் விழுந்தே ரொம்ப நாளாச்சே..."

"சினிமா உலகத்துல இன்னதுதான் நடக்கும்னு சொல்லவே முடியாது... இன்னிக்கு பாலஸ் செந்தூர்ல ரிசப்ஷன் வேற... வரியா?"

"எப்ப வரீங்க? நான் மார்க்கெட்டுக்குக் கிளம்பலாம்னு பாத்தேன்."

"அதெல்லாம் முடிச்சிரு. இன்னும் அரை மணில தயாராயிருவியா? இன்னிக்குக் கல்யாணச் சாப்பாடு."

"ரைட்" என்றாள் உற்சாகமாய்.

அவளோடு வெளியே போய் ரொம்ப காலமாயிற்று. கட்டிப் பிடித்துக்கொண்டு ஜம்மென்று கூட வருவாள். இதமான சென்ட் மணம், கதகதப்பு, கைவிருப்பில் இருந்த படங்களையெல்லாம் கழுவி பாசிடிவ் தந்துவிட்டு, அலுவலகத்திலேயே முகம் கழுவிக் கிளம்பினேன்.

"காலைல ரிசப்ஷன் படம் தந்தால் போதும்ல சார்?"

"போதும் போதும்..." என்றார்கள்.

"இன்று மாலை என் மனைவியுடையது. ஐயா, தொந்தரவு செய்ய வேண்டாம்" என்று கிளம்பினேன். நெரிசலான கடைவீதிப் பக்கம் போகும்போதே செல் அலறியது.

"சொல்லுங்க" என்று குறித்துக் கொண்டபடியே மணி பார்த்தேன்.

தெரு திரும்புகையிலேயே கூட்டம் தெரிந்தது. விலக்கிக் கொண்டு உள்ளே போனபோது மனைவி ஞாபகம் வந்தது. ○

# பார்வதி தாண்டவம்!



● கன்னட எவர்க்ரீன் ஹீரோ ராஜ் குமாரின் மனைவி பார்வதம்மா பயங்கரக் கோபத்தில் இருக்கிறார். 'கன்னட சலன சித்திரத இதிகாசா' என்ற புத்தகம் சமீபத்தில் வெளியிடப்பட்டு, பயங்கர சர்ச்சைக்குள்ளாகி, கர்னாடகா ஃபிலிம் சேம்பர் ஆஃப் காமர்ஸ் உடனேயே அப்புத்தகத்திற்குத் தடை விதித்து விட்டது. திரையுலக நட்சத்திரங்களைப் பற்றிய விவரங்கள் அடங்கிய அந்தப் புத்தகத்தில் ராஜ்குமாரைப் பற்றி நிறைய பொய்யான தகவல்கள் வெளியிடப்பட்டது குறித்து வேதனை ப்ளஸ் கோபத்துடன் இருக்கிறார் பார்வதம்மா. கன்னட ஈ.டி.வியில் 'பெல திங்களாகி பா' என்ற பார்வதம்மா குடும் பத்தினர் தயாரித்து அளிக்கும் மெகா சீரியலின் விழாவன்று



கொதித்தெழுந்து விட்டார் பார்வதம்மா. "என் கணவர் தற் கொலைக்கு முயன்றார் என்று அபத்தமான தகவல் வெளியிட்டிருக்கிறார்கள். அப்படி ஒன்று நடக்கவேயில்லை. என் கணவருக்கு 'பத்மபூஷன் விருது' கொடுத்ததே அவர் அரசி யலில் நுழையக்கூடாது என்ற நிபந்தனையுட னாம்! எப்படி இருக்கிறது கதை? வீரப்பனுடன் காட்டில் இருந்தபோது அவர் எனக்கு எழுதிய கடிதத்தில், 'இதுவரை எனக்குக் கிடைத்த விருது கள், பரிசுகள், எல்லாவற்றை யும் அரசுக்கே திருப்பிக் கொடுத்துவிடு. அந்தப் பரிசுகளும் விருதுகளுமா என்னை மீட்கப் போகின் றன?' என வருத்தத்துடன் எழுதியிருந்தார். ஓரிடத்தில் இவரை 'ஹிட்லர்' என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஒரு காலத்தில் ஜீ.வி. ஐயர், நரசிம்மராஜு போன்றவர்களுடன் சேர்ந்து கன்னட வளர்ச்சிக்காக அரும்பாடு பட்டவர் அவர். அதைப் பற்றி ஒரு வார்த்தை கூட இல்லை. விட்டேனா பார்" என்று பார்வதி தாண்டவம் ஆடிவிட்டார். சிவ...சிவா!

● ஆசியாவிலேயே பெரிய நியூரோ - சர்ஜிகல் சென்டர் மருத் துவ மனை ஒன்று பெங்களூரில் தொடங்கவிருக்கிறது. உலக அமைதிக்காகவும் மருத்துவ நிதிக்காகவும் வயலின் கலைஞர் எல். சுப்ரமண்யம், தமது மனைவி பிரபல பின்னணிப் பாடகி கவிதா சுப்ர மண்யம் மற்றும் தமது குழந்தைகளுடன் ஓர் இன்னிசைக் கச்சேரி படைத்தார். இசைக் குழுவில் வெளிநாட்டினரும் கலந்து கொண்டு ஜமாய்த்தனர். விநாயக வழி பாட்டுடன் கவிதா ஆரம்பிக்க, சுப்ரமண்யம் தன் பிரபல்மான 'கன்வர்சேஷன்' வாசிக்க, அவர்களின் மகள்



**"இந்த ஊர்ல திருடர்களே கிடையாதா?"**

**"இருந்தாங்க சார்! பழைய இன்ஸ்பெக்டர் மேல உள்ள பிரியத்துல அவர் மாற்றலாகிப் போறப்ப இவங்களும் கூடவே போயிட்டாங்க!"**

**- அம்பை தேவா**

---

சிதா 'ரகுபதி ராகவ ராஜா ராம்' பாட, மகன்கள் நாராயணாவும் அம்பியும் தமிழ் பாட்டு பாட... ஜனங்கள் ஆர்ப்பரித்தனர். கவிதா சினிமா பாட்டும் பாடினார். "நான் அவருடைய மனைவியாக இருக்கலாம். இருந்தாலும் எனக்காக மேடையில் அவர் வாசித்ததை பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன்" என்று உவகையுடன் கவிதா சொல்ல, "ஷோ தொடங்குவதற்கு முன் இப்படியெல்லாம் பேச வேண்டும் என மன்றாடிக் கேட்டுக் கொண்டதன் பலன்" என சுப்ரமண்யம் ஜாலியாகக் கலாய்க்க எங்கும் சிரிப்பு!

● "நான் படிப்பில் மிகவும் மோசம். என் மகள் பாடத்தில் என்னிடம் சந்தேகம் கேட்க வரும் போதெல்லாம் அவளை என் மனைவியிடம் நைஸாக அனுப்பிவிடுவேன்" என்கிறார் கபில் தேவ். சமீபத்தில் பெங்களூர் வந்திருந்த அவர், ஓய்வு பெற்ற பிறகு தாம் மிகவும் பிஸியாகி விட்டதாகக் கூறினார். ஜாலியாக மனம் விட்டுப் பேசவும் செய்தார். "எனக்கு மிருகங்கள் என்றால் கொள்ளை ஆசை. என் வீட்டில் நாய், மீன், கிளி... என எல்லாமே உண்டு. டயம் போறதே தெரியாது இந்த ஜீவன்களுடன் இருந்தால்" என்றவர் "எனக்கு பிரேஸில் அணி மிகவும் பிடித்திருக்கிறது. அவர்களிடம் ஒரு டீம் ஸ்பிரிட் இருக்கிறது" என பாராட்டினார். கபிலுக்குப் பிடித்த விளையாட்டு கோல்ஃப். விடாமல் விளையாடுகிறாராம். "டெஸ்ட் கிரிக்கெட்டில் 434வது விக்கெட் எடுத்தது வாழ்வின் மகிழ்ச்சியான தருணம். வாழ்க்கையை வீணடிக்கவில்லை" என நினைத்தேன் என்கிறார்.

● ஸ்வீட் செவன்டீன் முன்னி இருபத்து நான்கு வயது சீனுவுடன் ஆந்திராவிலிருந்து பெங்களூருக்கு 'ஓடிப் போயிடலாமா' என தொணதொணத்து ஓடி வந்து விட்டாள். ஆனால் விதி யாரை விட்டது? தெலுங்கு தினசரிகளைச் சுமந்து வந்த வேனில் இருவரும் பயணம் செய்தபோது எதிரில் வந்த மாருதி வேனுடன் மோதி முன்னிக்கு இடது காலில் எலும்புமுறிவு. மாருதி வேன் ஓட்டி வந்தது கல்வி அமைச்சர் ஹெச். விஸ்வநாத்தின் மகன் என்று சொல்லப்படுகிறது. ஆனால் அமைச்சரின் மகனோ திட்டவட்டமாக மறுக்கிறார். "அந்த வேன் என் ஃப்ரெண்டு சுப்ரீத்தினுடையது. அவன்தான் ஓட்டிக் கொண்டிருந்தான்" என்கிறார். முன்னி இப்போது மருத்துவமனையில். கூடவே தாய் வேறு. இந்த மாதிரி ஒரு திருப்பம் ஏதேனும் சினிமாவில் வந்திருக்கிறதா என்று தெரியவில்லை. லவ் ஸ்டோரி என்றாலே துன்பம்தானா? முன்னிக்குக் கால் சரியானவுடன் இன்னமும் ஸ்பீடாக ஓடிப் போகப் போகிறாளா அல்லது ஏதாவது நொண்டிச் சாக்குடன் வீட்டிற்குத் திரும்பப் போகிறாளா?

● அங்கு முன்னி என்றால் இங்கே முனிராஜு என்று பிஏ.பிஎட் படித்த அறிவு ஜீவி செய்த செயல்களைப் படிக்கும்போது புல்லரிக்கிறது. மனிதர் வகுப்பறையில் தானே இருக்க வேண்டும். ஆனால் இப்போது இருப்பது சிறையில். இவன் ஒரு கிரிமினலாம். மதிய வேளையில் ஒவ்வொரு வீட்டிற்கும் போய் தன்னை இன்ஷூரன்ஸ் ஏஜண்ட் என்று சொல்லி, தாய்க்குலங்களை ஏமாற்றி மோசடி பண்ணுவது தான் தொழிலாம். பெண்களிடமிருந்து தாலிக் கொடியை மட்டும் வாங்கிக் கொண்டு போய் விடுவானாம். என்ன விநோத வேண்டுதலோ? சுமார் இரண்டு வருடமாக இந்த லீலைகளைப் புரிந்தவனை இப்போது பிடித்து உள்ளே போட்டிருக்கிறார்கள். சுமார் ஐந்து இலட்சம் ரூபாய் மதிப்புள்ள தாலிக் கொடிகள் இவனிடமிருந்து கைப்பற்றப்பட்டன. இதில் வேடிக்கை என்னவென்றால் மிகச் சில பெண்களே போலீஸ் ஸ்டேஷன் வந்து தத்தம் தாலியை அடையாளம் காண்பித்து எடுத்துப் போனார்களாம். மற்ற பெண்கள் தாலி பறிபோனது பற்றி கணவனிடம் சொல்லாததால் கமுக்கமாக உட்கார்ந்திருக்கிறார்களாம்.

**— லதா சேகர்**

"அட... கப்பல்ல சாமான் ஏத்தறபோது உடையறதுங்கறது சர்வ சாதாரணம். இதுக்கெல்லாம் மயங்கி விழுந்தீங்கன்னா என்னங்க அர்த்தம்."

அவருக்கு முதலுதவி செய்யப்பட்டது.

பெட்டிகள் ஏறிய பிறகு அவர் அலுவலகத்துக்கு வந்தார்.

"போலீஸுக்குச் சொன்னியா" என்று கேட்டார்.

"இல்லையே. உங்களைக் கேட்டுண்டு சொல்லலாம்னு நினைச்சுண்டிருக்கேன்" என்று குமாஸ்தா சொன்னதும் தலையில் அடித்துக்கொண்டார். உடனே போலீஸுக்கு ஃபோன் செய்தார்.

"காசு திருடலை. பணம் திருடலை. ஃபைல் திருடியிருக்கறான்னா உங்களுக்கு யாராவது வேண்டாதவங்க இருக்காங்க. யார் வேண்டாதவங்க. சொல்லுங்க. ஒரு லிஸ்ட் கொடுங்க. நாங்க விசாரிக்கறோம். நீங்க உதவி செய்யலேன்னா நாங்க ஒண்ணும் சொல்ல முடியாது."

போலீஸார் மேலோட்டமாகப் பேசிவிட்டுப் போய்விட்டார்கள்.

"வாசல்ல இரண்டு பேர் வந்து உட்கார்ந்திருப்பாங்க ஸார். எப்பவும் வந்து உங்களைப் பத்தி விசாரிப்பாங்க. இது பண்ணிடு, அதைப் பண்ணிடுன்னு சொல்விடுவாங்க. அவங்கதான் செய்திருக்கணும் ஸார்."

பியூன் வாயைத் திறந்தான்.

முதலாளிக்கு போன் செய்தார். முதலாளி பேசவில்லை. அவர் மனைவி பேசினார்.

"எக்ஸ்போர்ட் பண்ணதெல்லாம் போதுங்க. நீங்க இடத்தைக் காலி பண்ணுங்க. எங்களுக்கு ரொம்ப தேவைப்படுது அது" என்று சொன்னாள்.

அவருக்குப் புரிந்துவிட்டது.

"நீங்க எங்கனா மாம்பலம், மயிலாப்பூர் வீடு பாருங்க. குடக்கூலி நாங்க கொடுத்துடறோம். ஏன் இங்கேயே நின்னு எங்க பிராணனை வாங்கறீங்க? எங்களுக்குன்னு வந்த சொத்து, நாங்க ஏதாவது வித்து நல்லபடியா வேற இடத்துல முதலீடு பண்ண வேணாமா. உங்களுக்கு சொன்னாலும் புரிய மாட்டேங்குது. இங்கதான் இருப்பேன்னு சட்டமா பேசறீங்களே. நாடார் பேசறார்னா அது வேற. அவரை எப்படிச் சமாளிக்கறதுன்னு எங்களுக்குத் தெரியும். நீங்க என்னாத்துக்கு வம்புல மாட்டறீங்க. போங்க. சீக்கிரம் காலி பண்ணிக்கிட்டு போங்க, எங்களுக்கு இந்தக் கம்பெனி நடத்தணும்னு அவசியமேயில்லை. அனுபவிச்ச வரைக்கும் போதாதா? முப்பது ரூபா பீங்கான் ஜாடிக்கு பதிமூணு ரூபா வைக்



கோல். என்னா கணக்கு இது. ஐயரா இருந்துட்டு இவ்ளோ அட்டூழியம் பண்றீங்களே. காலி பண்ணிக்கிட்டு போனீங்கன்னா நல்லது. நாங்க சட்டப்படி நடவடிக்கை எடுப்போம். எதுக்கு...? காலி பண்றதுக்கு இல்லை. ஃபைலைத் தொலைச்சதுக்கு, ஜாடியை உடைச்சதுக்குன்னு. இனிமே நாங்க பொறுமையா இருக்க மாட்டோம். சீக்கிரம் கிளம்பிடுங்க."

"நான் வந்து பேசலாமா?"

"வந்து பேசறதுக்கு என்னா இருக்கு. என்னா நினைக்கிறீங்களோ அதை எழுதிக் கொடுத்துடுங்க."

அவர் இன்னும் இரண்டு மாதத்தில் காலி செய்வதாக எழுதிக் கொடுத்தார்.

எல்லாம் மௌனமாயிற்று. ஃபைல் தபாலில் வந்தது. பைலைப் பார்த்ததும் ராதாகிருஷ்ணன் அழுதார்.



# மனம் உருகுதே...

கம்பெனி கலைக்கப்பட்டது. கணக்கு வழக்குகளை முடிக்கும்படி அவரை மட்டும் இருக்கச் சொல்லிட்டு மற்றவர்களை வீட்டுக்கு அனுப்பிவிட்டார்கள்.

"ஏன் வெறுமனே காலி பண்றீங்க. நான் பன்னிரண்டு இலட்ச ரூபா கேட்டேன். சரின்னுட்டாங்க. நீங்களும் ஏதாவது கேளுங்க."

ராதாகிருஷ்ணனுக்கு உள்ளுக்குள்ளே வேகமாகப் பொங்கியது. இதற்குப் பழிவாங்க வேண்டுமென்று தோன்றியது.

காலை நேரங்களில் ராதாகிருஷ்ணனும், ரேவதியும் காளிகாம்பாள் கோவிலுக்குப் போய் உட்கார்ந்துகொண்டார்கள்.

எங்கயோ வெறித்துப் பார்த்து உட்கார்ந்திருப்பவரை ரேவதி பல வகையில் சமாதானம் செய்தான்.

"அவா பண்றது அநியாயம். அம்பாள்கிட்ட சொல்லிட்டோம். அம்பாள் கேட்காத விடமாட்டா. கவலைப்படாதீங்கோ, நமக்கு வழிகாட்டாத விடமாட்டா. கவலைப்படாதீங்க.

அவள் எழுந்து வெளியே போனான். அவர் தூணில் சாய்ந்து கண்மூடி உட்கார்ந்தி

ருந்தார்.

ஒரு மணி நேரம் கழித்து மெல்ல கோயிலைச் சுற்றி வீட்டிற்கு வெளியே போகும் போது சட்டென்று ஒரு மூலையில் ரேவதி உட்கார்ந்திருப்பது தெரிந்தது.

ரேவதி முந்தானையை விரித்து பிச்சை எடுத்துக் கொண்டிருந்தாள்.

அவள் முந்தானையில் பதினாலு ரூபாய் ஐம்பது காசுகள் இருந்தன.

"என்னம்மா, என்ன பண்ற நீ?"

அடிக்குரலில் ரேவதியிடம் கேட்டார்.

"வாரத்துக்கு ஒருநாள் பிச்சையெடுத்து தான் சாப்பிடுவேன். என் புருஷனுடைய கவலையை மாத்துங்கோ... அம்மா... என்னை தவிக்க விடாதீங்கோ. அவரை அழ



"நீ ஏன் பந்தைத் தடுத்து நிறுத்தலே?"
"அதுக்குதான் 'நெட்' இருக்கே!"
— வலங்கைமான் நூர்தீன்

விடாதீங்கோ. வாரத்துக்கு ஒருநாள் என்ன காசு கிடைக்கறதோ அந்தப் பிச்சையெடுத்து அந்தக் காசுலதான் சாப்பிடுவேன். எனக்கு பஞ்சபட்சபரமான்னம் வேண்டாம். பெரிய படுக்கை வேண்டாம். புருஷ சுகம் வேண்டாம். என் புருஷன் நிம்மதியா இருக்கணும். அதான் வேணும்'' என்று சொல்ல நெஞ்சைப் பிடித்துக்கொண்டு ராதா கிருஷ்ணன் பெரும் குரலில் அழத் துவங்கினார்.

பலர் சுற்றி நின்று வேடிக்கை பார்த்தார்கள்.

மனைவி என்பவள் எதற்காக. நாள் தவறாது சோறு சமைத்துப் போடவா? இல்லை, வீடு சுத்தம் செய்யவா, அல்லது படுக்கை அறையில் சுகம் தரவா. இல்லை, உறவினர்களுக்கு முன்பு நகைகளோடும், பட்டுப் பவிஷுகளோடும் பவனி வரவா. தன் சம்பாத்தியத்தை வெளிப்படுத்தும் ஷோகேஸாய் இருப்பதுதான் மனைவியின் லட்சணமா அல்லது குழந்தை பெற்றெடுக்கும் இயந்திரமா.

ஏதுமில்லை. பிரச்னைகள் ஏற்படுகிற பொழுது அந்தப் பிரச்னைகளை எதிர் கொள்ள புருஷனைத் தயார் செய்வதும் அவன் போர்க்களத்தில் சாயும்போது தான் வாள் உருவி போர் செய்யவும், தோளோடு தோள் நின்று பிரச்னைகளைத் தவிடு பொடியாக்கி வெற்றிக்கொடி ஏற்றுவதும் தான் மனைவியுடைய முக்கியமான வேலை.

பிரச்னையை எதிர்கொள்ளத் தயார் என்று ரேவதி தன்னுடைய இறைவழி பாட்டின் மூலம் தன் புருஷனுக்குச் சொல்லி விட்டாள்.

"இதோ உன்னுடைய அலுவலகப் பிரச்னை உன்னுடையது மட்டும் அல்ல. என்னுடையதும். அதற்காக என் போராட்டத்தை இந்தக் காளிகாம்பாள் கோவிலிலிருந்து ஆரம்பிக்கிறேன். என் மடிப்பிச்சையிலிருந்து ஆரம்பிக்கிறேன். நான் மற்றவர்களிடம் மன்றாடி என் புருஷனுக்காக நான் இவ்விதம் தவம் செய்கிறேன் என்று மற்றவருக்குச் சொல்லி என்னையும் உறுதிப்படுத்திக் கொள்ளவே இம்மாதிரி இறங்கியிருக்கிறேன். கவலை வேண்டாம். பிரச்னை எதுவும் உங்களுடையது மட்டுமல்ல. என்னுடையதும். உங்கள் அலுவலகத்திற்கும், எனக்கும் சம்பந்தமில்லையென்று என்னைப் புறக்கணித்து விடாதீர்கள். உங்களின் ஒவ்வொரு அசைவையும் எனக்கும் தெரியப் படுத்துங்கள். என்ன செய்வது என்பதை நானும் யோசிக்கிறேன். இரண்டு பேரும் பேசி கலந்து முடிவு செய்து இந்தப் பிரச்னையின் அடி வேரைக் களைவோம்" என்று சொல்லாமல் சொன்னாள்.

மனைவி என்பவள் உதவி செய்ய வந்தால் அதை ஏற்றுக் கொள்ள ஒரு புருஷனுக்கும் தெரிந்திருக்க வேண்டும். "என் பிரச்னை. நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்கிற ஆணாதிக்கத் திமிர், பிரச்னையின் பளுவை அதிகரித்திருக்கும். மனைவியைப் பிரச்னையிலிருந்து புறக்கணித்தல் மிகப் பெரிய ஆணாதிக்கத் திமிர். "உனக்கு எதுவும் தெரியாது. எனக்கு மட்டுமே சகலமும் தெரியும்" என்கிற அலட்சியம். அகம்பாவம்.

மனைவியைப் பிரச்னையிலிருந்து

நகர்த்தி வைக்கிறவன் நம்பிக்கையற்றவன். வாழ்வில் வேறு எந்த மனிதரோடும் தொடர்பு கொள்ள லாயக்கில்லாதவன். கூடி வாழும் இயல்பில்லாதவன். அவன் தனித்த மிருகம். நேசிக்கத் தெரியாத ஜென்மம். நேசிக்கத் தெரியாமல் வாழ்ந்தோ வாழ்வில் வெற்றியடைந்தோ எந்தப் பயனும் எவருக்கு மில்லை.

ஆனால், ராதாகிருஷ்ணன் அவ்வித மில்லை. மனைவி கோவிலில் மடிப்பிச்சை எடுத்தது அவரை நெகிழ வைத்தது. சில கணங்கள் நெகிழ்ந்து முகத்தைப் பொத்திக் கொண்டு சுவரோரம் போய் அரை நிமிடம் அழுதுவிட்டுச் சுதாரித்துக் கொண்டார்.

'எனக்காகப் பிச்சை எடுக்கற இல்ல. இது போறும்பா. இந்த ஆதரவு, இந்த ஸ்நேகம் போதும். நான் மறுபடியும் ஜெயிப்பேன். புருஷன் படுகிற அவமானம் தாங்காதுதானே நீயே வலிய அவமானத்தை வரவழைத்துக் கொண்டிருக்கிறாய். இந்த அன்பு போதும். இந்த ஆதரவு போதும். அது என்னை வெறியேற்றும். உக்கிரமாக்கும். இன்னும் வீரம் கொள்ளச் செய்யும். விவேகமாகச் சிந்திக்க வைக்கும். ரேவதி, நிச்சயம் நான் ஜெயிப்பேன். மறுபடியும் நான் போர்க்களம் போவேன். நிச்சயம் ஜெயிப்பேன். என் கையில் தனுசு உண்டு. காண்டீபம் அதன் பெயர்.'

அவர் உள்ளுக்குள் கொக்கரித்தார்.

"போறும்டா... டேய் வா!" என்று மனைவியைப் பிரியமாய் ராதாகிருஷ்ணன் அழைத்தார்.

**கோ**வில் கோபுரத்தை மனைவியோடு தாண்டுகிறபொழுது யாரோ அழகாய் கை கூப்பினார்கள்.

எங்கோ எதிலோ இலக்கின்றி லயித் திருந்த மனது சட்டென்று விழித்துக் கொண்டு வணங்கியது யார் என்று உற்றுப் பார்த்தது.

கும்பிட்டவருக்கு நாற்பது வயதிருக்கும். நரைக்கத் துவங்கியிருந்தது. நீண்ட தாடியும், தலைமுடியும், நெற்றியில் குங்குமப் பொட்டும், மேலே வெள்ளைச் சட்டையும் இடுப்பில் காவி வேட்டியுமாய் அவர் நின்றிருந்தார்.

முகத்தில் ஒரு ஒளியிருந்தது. அமைதி இருந்தது.

"யாருன்னு தெரியலையே."

ராதாகிருஷ்ணன் மரியாதையாகக் கேட்டார்.

"எனக்கும் நீங்க யாருன்னு தெரியாது. ஆனால், உங்களுடைய வேதனையைப் பார்த்தபோது வயிறு கலங்கித்து. அவங்களுடைய வருத்தத்துல ஒரு உண்மை தெரிஞ்சது. எத்தனை துக்கமிருந்தா இந்த மாதிரி ஒரு குடும்ப ஸ்திரீ ஒரு கோவில்ல வந்து கண்ல ஜலம்விட்டு மடிப்பிச்சை கேட்பா. என்ன கஷ்டமோ அப்படின்னு ஒரு ஆதங்கம் வந்தது. சொல்லுங்கோ, என்ன கஷ்டம்?"

கோவில் வாசலில் யாரோ கேள்வி கேட்க அதற்குப் பதில் சொல்ல வேண்டுமா என்பது போல் சற்று நேரம் அமைதியாக ராதா கிருஷ்ணன் இருந்தார்.

ஆனால், தன் துக்கத்தை யாரிடமாவது வாய்விட்டுச் சொன்னால் தேவலை என்ற எண்ணம் எழுந்தது. கேள்வி கேட்ட முகத்தை உற்றுப் பார்க்க, அவர் அமைதியாக பதிலுக்குக் காத்திருந்தார்.

"எல்லா துக்கமும் ஒண்ணா சேர்ந்தாப் போல ஆயிடுத்து."

"ம்ம்... அப்புறம்?"

"வேலை செய்யற இடத்துல பிரச்னை. இரண்டு தலைமுறையா இருந்த ஒரு இடத்தைக் காலி பண்ணு அப்படின்னு சொல்றான். காலி பண்ண முடியாதுன்னு சட்டரீதியா நான் ஏற்பாடு பண்ணா, அவா ஆள்வச்சு மிரட்டறா. வேலையிலே குத்தம் கண்டுபிடிக்கறான். முக்கியமான ஃபைலைத் திருடிக்கிட்டு ஓடறான். நான் இந்த வம்புக்கு வரலை; காலி பண்ணிடறேன்னு சொன்னவுடனே எல்லாத்தையும் டக்குனு நிறுத்திட்டு சிரிக்கிறான். ஃபைலும் திரும்ப வந்துடுத்து. அது பெருசாகறதுக்கு நான் ரொம்ப உழைச்சுருக்கேன். சீரா இருக்கணும்னு நான் ரொம்ப பாடுபட்டிருக்கேன். எல்லாத்தையும் சுத்தமா துடைச்சு எடுத்துட்டு கொஞ்சம்கூட நன்றியில்லாமல், வாடகை கிடைக்கும்னு ஒரே காரணத்துக்காக என்னை வெளியே துரத்தறான். இந்தக் கட்டடத்துக்குக் கீழே இருக்கற வியாபாரியை ஒண்ணும் பண்ண முடியலை. என்னைத் துரத்தறதுதான் அவனுக்குப் பெரிய வெறி. நான் தோத்துட்டேன். அவன் பணபலத்துக்கு முன்னாடி, ஆள் பலத்துக்கு முன்னாடி, நிக்க முடியாம தோத்துட்டேன். நான் தோத்தது பார்த்து என் பொண்டாட்டி அழறா."

"அவ்ளோதானே. வாழ்க்கையிலே வெற்றியும் தோல்வியும் சகஜம். ஜெயிக்கறபோது அலட்டவும் கூடாது, தோக்கறபோது அழவும் கூடாது."

விசாரித்தவர் கையைக் கட்டிக் கொண்டு நிதானமாகப் பேசினார்.

"நம்மள மாதிரி இருக்கறவங்க எதிரிகளை அழிக்க முடியாது. நம்மால பழி வாங்க முடியாது. பதிலுக்குப் பதில்னு பண்ண முடியாது. ஆனால், அவனை உருத்தெரியாம அழிக்க முடியும். நம் பக்கம் தர்மம் இருந்தா அவனைக் கதறடிக்க முடியும். கடவுளே... நல்லவங்களுக்குக் கெடுதல் பண்ணிட்டேனேன்னு அவனை விம்ம வைக்க முடியும். இதே தெருவுல எங்க குருநாதர் இருக்கார், சங்கரன்னு பேரு. உங்களை மாதிரி, என்னை மாதிரி குடும்பஸ்தர். இரண்டு பொண் குழந்தைகள் உண்டு. ஒரு பொண் குழந்தைக்கு போனமாசம்தான் ஜாம்ஜாம்னு கல்யாணம் பண்ணார். அவரைப் போய் பாருங்கோ."

"எப்போ பார்க்கறது?"

"பெரிய கிரிமினல் லாயர்கிட்ட குமாஸ்தாவா இருக்கார். உத்தியோகம்தான் குமாஸ்தா. ஆனா, கேஸ் கட்டைக் கையில எடுத்தவுடனே சொல்லிடுவார். இந்த கேஸ் ஜெயிக்கும் ஜெயிக்காதுன்னு. முடியும், முடியாதுன்னு சொல்லி விடுவார். கேஸ் வக்கீல்கிட்ட போனவுடனே வக்கீல் அந்தப் பேப்பரை, சங்கரன்கிட்ட கொடுத்து சங்கரன் இது என்ன அப்படின்னு கேட்பார் கொஞ்ச நேரம் கையில அந்தக் கேஸ் கட்டை வைச்சுண்டு முன்னயும், பின்னயும் பார்த்துட்டு 'ஒண்ணும் சரியா இல்லையே வேண்டாம்னு சொல்லிடுங்கோ' அப்படின்னுடுவார். அடுத்தது யார் என்ன சொன்னாலும் எத்தனைக் காசு கொடுத்தாலும் அந்தக் கேஸை வக்கீல் எடுத்துக்க மாட்டார். இன்னிக்கும் கோர்ட் வராண்டாவுல சங்கரன் நடந்து போனார்னா பெரிய பெரிய வக்கீலெல்லாம் நமஸ்காரம்னு சொல்லாமப் போக மாட்டா. ஏன், நீதிபதிகள்கூட கூப்பிட்டு அவர்கிட்ட உபதேசங்கள் கேட்டுப்பா."

**மதுரையில் போஸ்டர் போட்டி**



'லேட்டாக வந்தாலும் லேட்டஸ்டாக வருவார்!'– இது ரஜினி ரசிகர் மன்றம்!

'சிலரைப் போல லேட்டஸ்டாக வராமல் எப்போதும் கிரேட்டஸ்டாக வலம் வருவார்!' – இது கமல் மன்றம்.

தகவல்: எஸ்.என். சாந்தினி

"ஏதாவது பூஜை பண்றவரா?"

"இல்லை. போய்ப் பாருங்கோ தெரியும்."

"அவங்க விலாசம் என்ன?"

"இதே தெரு, பதினைஞ்சு வீடு தள்ளிப் போங்கோ. நீங்க சொன்னேளே இரண்டு தலைமுறையா இருக்கேன்னு, அவர் ஆறு தலமுறையா இருக்கார். பழைய வீடு. மாடி முழுக்க அவாளுக்குச் சொந்தம். வீட்டுக்குள்ள போனாலே ஜிலுஜிலுன்னு வரும். யாரோ தோள்பக்கம் புடிச்சு நிக்கறா மாதிரி தோணும். நான் சொல்லிக் கேட்கறதைவிட நீங்களா அனுபவிச்சுப் பாருங்கோ. போகும் போது உங்க வீட்டுக்காரம்மாவைக் கூட்டிட்டுப் போங்கோ. உங்களுக்குச் சரியா வரும்."

"நீங்க யாருன்னு சொல்லலையே."

"என் பேரு ஜெகன்னாதன். முப்பது வருஷத்துக்கு முன்னாடி நீங்க பட்ட கஷ்டத்தையெல்லாம்விட மிக மோசமான கஷ்டத்தை நான் அனுபவிச்சுருக்கேன். என் மேல கொலை கேஸ் இருந்தது. நான் பண்ண ஒரே தப்பு அவனைப் பார்த்து கொன்னுடுவேன்னு சொன்னதுதான். பழி வாங்கணும்னு அவன் என்ன தெரியுமா பண்ணான். டக்குனு காணாமப் போயிட்டான். அவன் பொண்டாட்டி என் மேல கேஸ் போட்டா. போலீஸ்காரன் என்னைக் கைது பண்ணிட்டுப் போய் உள்ள வைச்சு தாறு மாறா அடிச்சான். 'எதுக்குக் கொலை பண்ண? எப்ப கொலை பண்ணே. கொலை பண்ணி என்ன பண்ணினேன்'னு கேட்டான். மாட்டிவிட்டுட்டான்னு நல்லா தெரியுது. மீளத் தெரியலை. அப்போ சங்கரனே தேடிண்டு எங்கிட்ட வந்தார். நான் என்ன செய்யணும்னு சொன்னார். அவர் சொன்னதைச் செய்தேன். மூணாவது நாள் அவன் கார் விபத்துல மாட்டி நான் இந்த ஆஸ்பத்திரியில இருக்கேன்னு டெலிக்ராம் கொடுத்துட்டான். நான் அவனைக் கொலை பண்ணலைன்னு விடுதலை ஆயிட்டேன். அவர் இல்லைன்னா என் வாழ்க்கை முடிஞ்சுருக்கும். இந்த மாதிரி நிறைய இருக்கு. நான் சொல்றேன். போங்கோ, போய் அவரைப் பாருங்கோ."

ராதாகிருஷ்ணனுக்கு ஒரு நம்பிக்கை தோன்றியது. அவர் தம் மனைவியோடு ஜெகன்னாதன் சொன்ன விலாசத்தைத் தேடத் துவங்கினார்.

## கதவுகளின் காதலன்!

நாலடி உயரச் சுவர். அதில் கச்சிதமாக இரு கதவுகள். இருபுறமும் விளக்கு மாடம். எண்ணெய்க் கறையின் பதிவு கொண்ட அதில் அகல் விளக்கு ஏற்றி வைத்து, ஓவியக் கண்காட்சியைத் துவக்கி வைத்தார் டைரக்டர் மணிரத்னம். இடம் பெற்றிருந்த அனைத்து ஓவியங்களிலும் கதவு.கதவு.கதவுதான்! கும்பகோணத்துப் பழங்கால அக்ரஹார வீட்டுக் கதவில் தொடங்கி, ஜோத்பூர் அரண்மனைக் கதவு வரை வண்ண ஜாலம் புரியும் கதவு ஓவியங்கள். படைத்த ஓவியர்: சந்தான கிருஷ்ணன்.





"கும்பகோணம் ஓவியக் கல்லூரியில் நான் படித்தபோது, சர்க்கரைப் படித்துறைக்கு தினமும் அக்ரஹாரம் வழியே நடந்து போவேன். ஒவ்வொன்றும் பழங்காலத்து வீடுகள். அவற்றின் கதவுகள் அனைத்தும் மேலோட்டமாய்ப் பார்த்தால் ஒன்று போலத் தோற்றமளிக்கும். நுணுக்கமாக கவனித்தால், விளக்குமாடம், மரவேலைப்பாடு செய்த நிலைப்படி, மஞ்சள் பூசி வைக்கப்பட்ட குங்குமப்பொட்டுகள், சற்றே உள்நோக்கிப் பார்த்தால் துளசிமாடம்... என ரசிக்க ஏராளமான விஷயங்கள். அதன்பின், கதவுகளைக் காதலிக்கத் தொடங்கினேன்" என்கிறார் ஓவியர் சந்தான கிருஷ்ணன்.

இந்தக் காதல்தான் அவரை கர்நாடகா, ஆந்திரா, வங்காளம், ராஜஸ்தான், குஜராத் என்று இந்தியாவெங்கும் துரத்தியது. தூரிகையுடன் டூர் போய், கண்ட கதவுகள் அனைத்தையும் மண் வாசனை பொங்கும் ஓவியங்களாக்கிக் கொண்டு வந்து விட்டார்.



"கண் என்னும் வீட்டுக்கு இமைதானே கதவு. அதைத் திறந்தால், உலகமே வண்ணமயம் தானே!" என்று கண்ணையும், கதவையும் இணைத்து, கவிதைத்தனமாகப் பேசுகிறார் சந்தான கிருஷ்ணன்.

— கௌதம்



# குறையில்லாத அழகி!

அழகி நெம்பர் ஒன்.

நாம் குறிப்பிடுவது ஐஸ்வர்யா ராயையோ, நந்திதாவையோ இல்லை. சென்னையைச் சேர்ந்த கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர் இஞ்சினியர் விஸ்வநாதன் உருவாக்கியுள்ள தமிழ் மென்பொருளின் பெயர்தான் அழகி நெம்பர் ஒன்.

இஞ்சினியரிங் முடித்துவிட்டு, பூனாவில் வேலைக்குச் சேர்ந்தார் விஸ்வநாதன். வருங் காலம் பற்றிய கலர் கனவுகளுடன் இருந்த




அவரது வாழ்க்கையில் திடீர் இருள்.

ஆம்! அவருக்கு வயிற்றில் பிரச்னை. பரிசோதித்த டாக்டர்கள், அவருக்கு இருக்கும் வியாதிக்கு 'கோலிடிஸ்' என்று பெயர் சொன்னார்கள்.

சாப்பிடுகிற உணவு, குடலின் உட்புறச் சுவரில் உரசுவதன் காரணமாக புண்ணாகி ரத்தம் வடியும். இதனால் உணவு சாப்பிடுவதையே சில நாட்களுக்கு முற்றிலுமாக நிறுத்திவிட்டு, 'டிரிப்' ஏற்ற வேண்டியதுதான்.

ரணம் ஆறி, எல்லாம் நார்மலாக இருக்கும். பிறகு, மறுபடி புண் ஏற்படும். இப்படியே ஆஸ்பத்திரியிலும், வீட்டிலுமாக நோயுடன் போராடிய விஸ்வநாதன், ஒரு கட்டத்தில் ஆபீஸ் போய் வேலை பார்ப்பதே இயலாத காரியம் என்ற சூழ்நிலை ஏற்பட்டது.

"கம்ப்யூட்டர் இஞ்சினியரான நான், வீட்டில் இருந்தால் என்ன? ஏதாவது உருப்படியாக செய்ய முடியாதா? என்று சிந்திக்க ஆரம்பித்தேன். ஏ.ஆர். ரஹ்மான் இசையில், 'வந்தேமாதரம்' பாடல் கேஸட் வெளியிடப்பட்ட தருணம் அது. இன்டர்நெட்டில் ஒரு தமிழ் மென் பொருளைத் தேடிக் கண்டுபிடித்து, பாடலைக் கம்ப்யூட்டரில் பதிவு செய்தேன்.

"நான் பயன்படுத்திய தமிழ் மென் பொருளில் பல குறைபாடுகள் இருந்தன. இவற்றையெல்லாம் போக்கி, நோயுடன் போராடிய படியே, நானே உருவாக்கிய தமிழ் மென்பொருள்தான் அழகி நெம்பர் ஒன்."

தமக்கு எல்லாவிதமான உதவிகளையும் செய்து, தொடர்ந்து உற்சாகமூட்டி வரும் தமது மனைவி மீராவின் அழகான, அன்பான இதயத்தைக் குறிக்கும் விதமாகத்தான் அப்படிப் பெயரிட்டிருக்கிறாராம்.

"இந்த மென் பொருளைப் பயன்படுத்த தமிழ் டைப்ரைட்டிங் தெரிந்திருக்க வேண்டிய அவசியமே இல்லை. ஆங்கில கீ போர்டைப் பயன்படுத்தி, 'avan' என்று ஆங்கிலத்தில் டைப் அடித்தால், தமிழில் அவன் என்று திரையில் தெரியும்.

"இதுபோன்ற தமிழ் சாஃப்ட்வேர்கள் ஏற்கெனவே இருக்கின்றனவே?"

"வாஸ்தவம்தான். ஆனால், மற்றவற்றைவிட அழகி சிறந்தவள் என்று சொல்கிறேன். முதலில் நாம் டைப் அடிக்கிற ஆங்கிலப்பகுதி அதற்குரிய தமிழ் வடிவம் இரண்டுமே திரையில் தெரியும். தேவையான திருத்தங்களை ஆங்கிலப் பகுதியில் செய்தால், தானாகவே தமிழ் வடிவத்திலும் திருத்தம் செய்யப்பட்டுவிடும்." "இப்போதுள்ள மற்ற தமிழ் சாஃப்ட்வேர்கள் சிலவற்றில் 'Bharathi' என்று ஆங்கிலத்தில் டைப் செய்தால், தமிழில் 'பாஹரதி' என்று வரும். இத்தகைய குறைகள், அழகியில் களையப்பட்டுவிட்டன. தவிர, dear, easy போன்ற தமிழில் வழக்கில் உள்ள வார்த்தைகளை ஆங்கிலத்தில் அடித்தால், அவை தமிழில் டியர், ஈஸி என்றே வந்துவிடும்" என்கிறார்.

சந்திப்பு : கௌதம் ராம்.

படம் : யோகா



என்னை தோசை மாதிரி திருப்பிப் போட விடை வரும். (1) 98901 (2) 87912

3வது கணக்கு: கடைசியிலுள்ள 3ஐ முன்னால் கொண்டுவந்து நிறுத்தவும். தட்ஸால்!

— கே. சந்தோஷிணி

*ஒரு சிறந்த நடிகன் லட்டு தின்பது போன்ற ஒரு காட்சியில் நடிக்கும்போது அவனிடம் மண்ணால் செய்த ஒரு லட்டுவைக் கொடுத்தாலும் அதை நிஜ லட்டுவைத் தின்பது போலவே நடித்துக் காட்டுவான். ஒரு மோசமான நடிகனிடம் நிஜ லட்டுவைக் கொடுத்தாலும் மண் லட்டுவைத் தின்பது போல் நடிப்பான்!*

*(ஒரு பேட்டியில் காலஞ்சென்ற நடிகர் எஸ்.வி. ரங்க ராவ்)*

*— அனிதா ராமச்சந்திரன்*

# தோசைகணக்கு!

ஸ்பெயின் நாட்டிலிருந்து பிலிப்பைன்ஸ் நாடு வழியாகத் தான் நிலக்கடலை நம் நாட்டுக்கு வந்திருக்கிறது. பிலிப்பைன்சின் தலைநகரமான மணிலாவின் பெயர் நிலக்கடலைக்குத் தங்கி விட்டது. இந்த 'மணிலாக் கொட்டை' தான் நாளடைவில் தேய்ந்து 'மல்லாக் கொட்டை' என ஆகிவிட்டது.

— வில்லியனூர் மலர் சூர்யா

ஒரு சிறிய மெழுகுவர்த்தி கூட தன்னால் இயன்ற தூரம் ஒளி வீசுகிறது. உங்களது ஒரே ஒரு நல்ல செயல் கூட ஒளி வீசிப் பிரகாசிக்கும்.

தகவல்: ஆர். பார்த்திபன்

*கீழே கொடுக்கப்பட்டுள்ள மூன்று கணக்குகளையும் 10 செகண்டுக்குள் பெருக்கி விடை தர வேண்டும். இந்தவார தேன்கூடு தலைப்புதான் 'க்ளூ'*

1) 10989 ஐ 9ஆல் பெருக்கவும்.
2) 21978 ஐ 4ஆல் பெருக்கவும்.
3) 1034482758620689655172413793 x 3

**விடைபெற வழி:**

1,2, *கணக்கு: பெருக்க வேண்டிய*

புது டில்லியைச் சேர்ந்த "எஸ்கோடெல் மொபைல் கம்யூனிகேஷன்ஸ்" என்ற நிறுவனம் உத்திரபிரதேசம் மற்றும் ஹரியானாவின் கிராமப் புறங்களில் கட்டண தொலைபேசி பூத்கள் நிறுவியுள்ளது. சமயங்களில் தொலைபேசியை உபயோகிக்க விரும்பும் கிராமவாசியிடம் பணம் இருக்காது. எனவே பண்டமாற்று முறையில் காலிஃப்ளவர், பால், கரும்பு போன்றவற்றை பெற்றுக் கொண்டு ஃபோன் செய்ய அனுமதிக்கிறார்கள். அனேக கிராமவாசி



ஒரு புன்னகைக்கு மின்சாரத்தைவிட குறைவான செலவுதான். ஆனால் அதிக வெளிச்சம் தருகிறது!

— சாரதா நாராயணன்



களின் உறவினர்கள் வெளிநாட்டில் உள்ளனர். ஒரு பூத் வைத்திருப்பவருக்கு மாதம் மூவாயிரம் ரூபாய்க்குமேல் லாபம் கிடைக்கிறது. ஒரு பூத் உரிமையாளர் பால் நிறைய சேர்வதால் பாலாடைக் கட்டி தயாரிக்கும் உபதொழிலையும் ஆரம்பித்துள்ளார்!

ஆதாரம் : ஃபார்ச்சூன்

தகவல் : ராதா ராஜகோபாலன்

ஞாபக சக்தியை வளர்க்க உதவி செய்யும் நிறுவனம் ஒன்று அண்மையில் சென்னையில் ஒரு விழாவிற்கு ஏற்பாடு செய்திருந்தது. அதில் இந்த நிறுவனத்தின் முதன்மை மாணவர்கள் தங்கள் திறமைகளை, பார்வையாளர்கள் முன்பு வெவ்வேறு வழிகளில் வெளிப்படுத்திக் கொண்டிருந்தனர். அதில் ஒருவர், கீதையை முழுவதும் மனனம் செய்ததாகக் கூறி, பார்வையாளர்களைக் கேள்வி கேட்கச் செய்தார். எத்தனையாவது சர்க்கத்தில் குறிப்பிட்ட ஸ்லோகம் வருகின்றது போன்ற பல கடுமையான கேள்விகளுக்கு அனாயசமாக பதில் சொல்லி, பார்வையாளர்களின் பாராட்டுதல்களைக் கை தட்டலாகப் பெற்றார்.

மேடை விட்டு கீழே இறங்கிய அவர், ஒரு நிமிடத்தில் மீண்டும் அவசரமாக மேடை ஏறினார். மீண்டும் ஏதோ சொல்லப் போகிறாரோ என்று பார்த்ததில் மேடையின் ஒரு மூலையில் மறதியாக விட்டுச் சென்றிருந்த தமது செருப்புகளை எடுக்கவே வந்திருந்தார் என்று புரிந்தது. பார்வையாளர்கள் முன்னைக் காட்டிலும் பலமாகக் கைதட்டினர்!

— ஸ்ரீராஜா, சென்னை - 20

## தாண்டவக் கணக்கு

| | |
|---|---|
| சிவன் தாமாகவே ஆடியது | - 18 |
| தேவியுடன் இணைந்து ஆடியது | - 36 |
| ஸ்ரீ விஷ்ணுவுடன் ஆடியது | - 9 |
| முருகனுக்காக ஆடியது | - 3 |
| பிற தேவர்களுக்காக ஆடியது | - 42 |
| மொத்த தாண்டவங்கள் | = 108 |

தகவல்: பா. குணா

✱ உலகில் அதிக மசூதிகள் உள்ள இடம் இஸ்தான்புல்.

— விருதை ராஜா







● சுப்ர. பாலன்

மூன்று மாதங்களுக்கு முன்னால் 'கல்கி'யில் வெளியான 'சூரியன் எத்தனை சூரியன்கள்!' கட்டுரை நினைவிருக்கிறதா? இப்போது அதைத் தேடியெடுத்துப் படியுங்கள். (31.3.2002 இதழ்)

கலிபோர்னியாப் பல்கலைக் கழகத்தின் ஜியாஃப்ரே மார்ஸியும், வாஷிங்டன் கார்னகி நிறுவனத்தின் பால் பட்லரும் சேர்ந்து நடத்திய ஆய்வில், ஒரு சூரியக் குடும்பத்தைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். அண்மையில் வந்த பரபரப்பான செய்தி இது. பிபிஸி, சன் தொலைக்காட்சிகளில் பார்த் திருக்கலாம்.

பூமியிலிருந்து ஐம்பத்தோரு ஒளி ஆண்டுகள் தொலைவிலுள்ள '55 கான்க்ரி' நட்சத்திரம்தான் இந்த இன்னொரு சூரியன். இதைச் சுற்றி நம்முடைய வியாழன் அளவிலான கோள் ஒன்று சுற்றி வருவதைக் கண்டறிந்திருக்கிறார்கள். அதுவும் நம்முடைய சூரியனிலிருந்து நம்முடைய வியாழன் சுழன்று வருகிற அதே 5.2 விண் அலகுத் தொலைவில் இருக்கிறதாம். சூரியனிலிருந்து பூமி உள்ள தொலைவுதான் ஒரு விண்வெளி அலகு (அஸ்ட்ரானாமிகல் யூனிட்) A.u என்று குறிப்பிடுவது வழக்கம்.





இந்த 'வியாழ'னைத் தவிர இன்னும் இரண்டு கோள்கள் 1.44 கோடி கிமீ, 3.68 கோடி கிமீ தொலைவுகளில் இந்தக் கான்க்ரி சூரியனைச் சுற்றி வருவதும் தெரியவந்துள்ளது. இவை நம்முடைய சனிக்கோளைப் போன்றவை. இன்னும் தீவிரமாக ஆராய முடியுமானால், இந்தக் கான்க்ரி சூரியக் குடும்பம் நம்முடையதைவிடப் பெரிய சம்சாரியாய்ப் பத்துப் பன்னிரண்டு பிள்ளை குட்டிகளோடு காணப்பட்டாலும் வியப்பதற்கில்லை.

இந்த மார்ஸி-பட்லர் கூட்டணியினர் இதுபோல் தொண்ணூற்றோரு அயல் சூரியன்களைக் கவனித்திருக்கிறார்கள். இந்தக் கான்க்ரி சூரியனைக் கோள்கள் சுற்றிவருவது பற்றி இவர்கள் ஓராண்டுக்கும் முன்பே கொஞ்சம் அனுமானித்தார்கள். எனினும் அதன் கோள்கள் ஒருமுறையாவது 'சூரிய'னைச் சுழன்று வருவதைக் கவனித்துவிடலாம் என்று காத்திருந்து இப்போது அறிவித்திருக்கிறார்கள்.

"ஒரு பத்தாண்டுகளுக்கு முன்பு வரை மற்ற நட்சத்திரங்

# இதோ இன்னொரு சூரியன்!

களையும் கோள்கள் சுற்றிச் சுழன்று வருகின்றன என்பது அறிவியல் கற்பனையாக மட்டுமே இருந்து வந்தது" என்று நாஸா நிறுவனத்தின் ஆன் கின்னி சொல்லியிருக்கிறார்.

**எ**ப்போதுமே அறிவியலில், அதுவும் விண்வெளி ஆய்வில், முதலில் கற்பனைதான் பின்னாளில் நிஜமாகிவிடுகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் பிரஞ்சு நாவலாசிரியர் ஜூல்ஸ் வர்ன் எழுதிய 'நிலாவைச் சுற்றி' என்ற அறிவியல் நாவலில், நிலவைச் சுற்றி வருகிற விண்கலத்தில் மூவர் இருப்பதாகவே எழுதினார். சென்ற நூற்றாண்டில், அமெரிக்கர்கள் நிஜமாகவே நிலவைச் சுற்றி வந்த விண்கலங்களிலும் மூன்று மூன்று பேராகவே அனுப்பி வைத்ததைக் கவனிக்கலாம்.

அதேபோல் இன்னொரு கற்பனையாளரான ஆர்தர் ஸி. கிளார்க், 1940ஆம் ஆண்டில் எழுதிய கற்பனை ஒன்றில், பூமிக்கு மேலே 35,000 கிமீ. உயரத்தில் ஒரு செயற்கைக்கோளை பூமியின் சுழற்சி வேகத்துக்கு இணையாகச் சுழல விடுவதை எழுதினார். அதுதான் இப்போது நடை முறையில் தொலைத் தொடர்புக்காக நூறுக்கும் மேற்பட்ட நாடுகள் பயன்படுத்தும் 'ஜியோ ஸ்டேஷனரி' செயற்கைக்கோள்கள்!



இந்தச் சூரியன்களைச் சுற்றும் வியாழன்களைப் பற்றிய செய்திகள் வருகிறபோது, நம்முடைய 'மூதாதையர்கள்' நம்மையெல்லாம் எந்தச் சூரிய மண்டலத்திலிருந்து இங்கே கொண்டுவந்து 'விதை'த்து விட்டுப் போனார்களோ என்று கூட நினைக்க வைக்கிறது. ரஸமான விண்வெளிக் கற்பனைகள்தாம்! ஆனாலும் எங்கோ ஒரு சிறு பொறியாய் உண்மையும் இருக்கத்தானே வேண்டும். புகழ் பெற்ற ஹார்வர்ட் பல்கலைக் கழக வானியலறிஞர் டாக்டர் கார்ல் ஸாகன் ஒருமுறை சொன்னதும் நினைவுக்கு வருகிறது. நம்முடைய பூமியைப் போல் உயிரினங்கள் வாழக்கூடிய கோள்கள், பிரபஞ்ச வெளியில் நூறு கோடிக்கு மேல் இருக்கலாம் என்பதும் இந்த நம்முடைய பூமி உருவானதிலிருந்து ஆயிரக்கணக்கான தடவை, அயல் கோள்களிலிருந்து 'மனிதர்கள்' வந்து போயிருப்பதும் சாத்தியமே என்பதும் கார்ல் ஸாகனின் கருத்து.

புராணக் கதைகளை எல்லாம் கட்டுக் கதைகள் என்று ஒதுக்கிவிட முடியாத காலம் கூட வந்துவிடும் போலிருக்கிறது.

மிகப் புதிதாய் வந்த ஒரு செய்தி:

கே.ஹெச். 14 டி என்று பெயரிடப்பட்டுள்ள ஒரு புதிய நட்சத்திரத்தை இப்போது வெஸ்லியன் பல்கலைக் கழகத்து அறிஞர் வில்லியம் ஹெர்பஸ்ட் என்பவர் அடையாளம் கண்டு சொல்லியிருக்கிறார். நம்முடைய பூமியும் மற்ற கோள்களும் சூரியனைச் சுற்றி உருவான நிகழ்ச்சியைப் போலவே இந்தப் 'புதிய' சூரியனும் பிள்ளை குட்டிகளோடு உருவாகி வருவதாய்க் கருதப்படுகிறது.

படங்கள்- 'நாஸா'

உனது காத்திருத்தலின் தகிப்பில்
உருவான வெப்பத்தைக்
கடத்தி வருகிறது காற்று.

உனைக் காண
மிதிவண்டி மிதித்து
மின்னலாய் வருகையில்
முகத்தில் மோதி மகரந்தம் உதிர்த்த
பட்டாம்பூச்சியொன்று
பழுத்த இலையென
விழுகிறது புழுதியில்
பறக்கச் சக்தியற்று...

ஒரு ஜோடி பட்டாம்பூச்சிகள்
உடுத்திய உன் இமைகளை
இனி தைரியமாய்ச் சந்தித்தல் சாத்தியமா..?
தவிரவும் உனக்கான கவிதைகளில்
பட்டாம்பூச்சிகளை
இனி எப்படிப் பயன்படுத்த...?
படபடக்கிறது மனசு.



# சுவடுகள் - 27



# அது ஒரு தனிக் கலை...

உரையாடல் வேறு. மேடைப் பேச்சு வேறு. இரண்டுமே பேச்சாற்றல் தொடர்பானதுதான் என்றாலும், இரண்டும் வெவ்வேறு கலைகள். பிரமாதமாக உரையாடும் சிலர் மேடையில் உளறிக் கொட்டுவது உண்டு. சிறப்பாக மேடையில் பேசும் சிலரிடம் உரையாடும்போது, நமக்குக் கொட்டாவி வருவதும் உண்டு! உரையாடல் கலையில் பெரும் சாதுர்யம் படைத்திருந்த துமிலன் மேடைப் பேச்சு என்றால் ஒதுங்கிவிடுவார். மேடையிலும் உரையாடலிலும் சொற்களால் கேட்டுக் கொண்டிருப்பவர் மேல் பன்னீரைத் தெளித்துக் கொண்டே இருந்தவர்கள் கி.வா.ஜ., நா.பா., கண்ணதாசன் போன்றோர். சிறந்த உரையாடலை ரசித்தவர்கள் அதைத் தத்தம் மனப் பேழையில் முத்து போல் நிரந்தரமாய்ப் பூட்டி வைத்துக் கொள்கிறார்கள். அலுப்பும் சலிப்பும் ஏற்படுகிறபோது, அந்த உரையாடல் நினைவுகளில் மறுபடி மறுபடி மூழ்கி உற்சாகத்தை ஏற்படுத்திக் கொள்கிறார்கள். என் வாழ்வில் மறக்க முடியாத சில மேடை நினைவுகளும், சில உரையாடல் நினைவுகளும் உண்டு.



• சுவாமி கமலாத்மானந்தா

விவேகானந்தரைக் கதாநாயகராக வைத்து 'கெஞ்சும் சலங்கை' என்று ஒரு சிறுகதை எழுதினேன். நடனமாடும் தாசிப் பெண்ணுக்கு, விவேகானந்தர் ஆன்மிக அருள் வழங்கியது பற்றிய சரித்திரக் கதை. பல கட்டுரை நூல்களை வாசித்துக் குறிப்பெடுத்து எழுதிய படைப்பு. சென்னை மயிலை ராமகிருஷ்ண மடம் சென்று நான் பெரிதும் மதிக்கும் துறவி சுவாமி கமலாத்மானந்தரிடம் கதையை வாசிக்கச் சொல்லி வேண்டி கதைக்கு அவரது ஒப்புதல் பெற்றேன். தூய துறவி ஒருவரைக் கதாநாயகராக்கி எழுதும் கதையில் தகவல் பிழை எதுவும் நேர்ந்துவிடக் கூடாதே என்ற எச்சரிக்கைதான் காரணம். (இப்போது சுவாமி கமலாத்மானந்தர் மதுரை ராமகிருஷ்ண மடத்தில் தொண்டாற்றி வருகிறார்.)

கதை வெளியான பிறகு, எதிர்பாராத சில மகிழ்ச்சி தரும் சம்பவங்கள் அடுத்தடுத்து நடந்தன. ரமணி, ஸ்வாமிநாத சர்மா என்ற இரு நண்பர்கள் நடத்திவந்த விஜில் என்ற அமைப்பு சிறந்த சிறுகதைக்குப் பரிசு வழங்கிவந்தது. (அண்மையில் ரமணி காலமாகிவிட்டார்.) ஓர் ஆண்டுக்கு ஒரே ஒரு சிறுகதையைத் தேர்ந்தெடுத்து அதற்குப் 'பாஞ்சஜன்யம்' என்ற விருதை வழங்குவார்கள். என் கதை பாஞ்சஜன்யம் விருதுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது. விருது வழங்கும் விழாவில் ஓர் ஆச்சரியம். விருது வழங்க அழைக்கப்பட்டிருந்த பிரமுகர் சுவாமி கமலாத்மானந்தர். விவேகானந்தர் பற்றிய கதைதான் விருது பெறுகிறது என்பது அப்போதுதான் அவருக்குத் தெரியும். அவர் மேடையில் பேசும்போது, 'இந்த விருதை "இந்த ஆண்டு போல் இனி எப்போதும் பொருத்தமாக வழங்க இயலாது. இந்தப் பொருத்தமே தனி!"

**திருப்பூர் கிருஷ்ணன்**

என்று ஆரம்பித்தார். கூட்டம் பொருத்தத்தை அறிய ஆவலோடு காத்திருந்தது. "கிருஷ்ணன் கையில் இருக்க வேண்டியதுதானே பாஞ்சஜன்யம்!" என்றவாறே விருதை எனக்கு வழங்கினார் அவர். இந்தப் பேச்சும் இன்னொரு பெரிய விருதாக அமைந்துவிட்டது.

ஒரு துறவி சொன்ன இந்த ஆன்மிக உணர்வுள்ள சிலேடையை அன்று கூட்டத்திற்கு வந்திருந்த பலர் ரசிக்கும் வாய்ப்பு கிட்டியது. ஆனால் உரையாடலில் இதுபோன்ற நயங்கள் தோன்றும்போது அது சம்பந்தப்பட்டவர் மட்டுமே அனுபவிக்கக் கூடியதாகப் போய் விடுகிறது.

"தீபம்" இதழுக்கு ஒரு சிறுகதை நூல் விமர்சனத்திற்கு வந்தது. ஓர் எழுத்தாளரின் பன்னிரண்டு சிறுகதைகள் கொண்ட தொகுப்பு. அட்டையிலேயே 'சிறுகதைத் திரட்டு' என்று குறிப்பிட்டிருந்தார் அவர். என்ன கொடுமை! ஒவ்வொரு கதையும் பிரபலமான பல எழுத்தாளர்களின் கதையை உல்டா செய்து எழுதப்பட்டிருந்தது. ஒரு கதை ஜெயகாந்தன் கதைபோலவும், ஒரு கதை ஜானகிராமன் கதை போலவும், ஒரு கதை புதுமைப்பித்தன் கதை போலவும் தோற்றம் கொடுத்தது. (தமிழில் ஒரு புதுக் கவிஞர் இருக்கிறார். உல்டா நிபுணர். எல்லாப் புதுக்கவிதை நூல்களையும் வாசித்து, அவற்றில் உள்ள நயமான கற்பனைகளைக் குறிப்பெடுப்பார். பின் தம் சொந்த வாக்கியங்களில் அந்தக் கற்பனைகளைக் கவிதைகளாக எழுதித் தம் பெயரில் நூலாக்கி விடுவார்! தமிழில் ஒரு சிறுகதை ஆசிரியர் இருந்தார். ஒரு மாத இதழில் பணிபுரிந்தார். அந்த இதழுக்குப் பரிசீலனைக்கு வந்த கதைகளையெல்லாம் உல்டா செய்ய அவருக்கு நேரம் போதவில்லை. என்ன செய்வது! மேலே இருந்த கதாசிரியர் பெயரை மட்டும் அடித்துவிட்டு, அந்த இடத்தில் தம் பெயரை எழுதத் தொடங்கினார். ஏதோ இலக்கியத்திற்கு அவரால் ஆன கைங்கர்யம்! பின் முழுக் கதையையும் ஒரு வார்த்தை மாற்றாமல் தன் கையெழுத்தில் பிரதி எடுத்தார். இப்போது அவரே எழுதியது என்பதை யார்தான் மறுக்க முடியும்? அவற்றை வெவ்வேறு பத்திரிகைகளுக்கு அனுப்பத் தொடங்கினார். அவை அவர் பெயரில் பிரசுரமாகவும் தொடங்கின. விஷயம் தெரிய வந்தது. (அவர் வேலையை விட்டு அனுப்பப்பட்டார் என்பதைச் சொல்லத் தேவையில்லை.)

தீபம் விமர்சனத்திற்கு வந்த உல்டா சிறுகதைத் தொகுதி பற்றி நா.பா.விடம் உணர்ச்சியோடு தாக்கிப் பேசினேன். நா.பா. அந்தத் தொகுதி தாக்கப்பட வேண்டியதல்ல என்று அமைதியாகச் சொன்னார். அதில் உள்ள 'மூழ்கிய முத்து' என்ற கதை தமது வலம்புரிச் சங்கு கதையை ஞாபகப்படுத்துவதாகவும் அதைத் தாம் மிக அனுபவித்ததாகவும் குறிப்பிட்டார். ஒரே தொகுதி மூலம் ஏராளமான முக்கியமான எழுத்தாளர்களை ஞாபகப்படுத்த முடிகிறதென்றால் அது சிறப்பான இலக்கியத் தொண்டுதானே என்றும் சீரியஸ்ஸாக முகத்தை வைத்துக் கொண்டு கேட்டார். எனக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை.

ஆனால் புத்தகத்தின் அட்டையில் ஒரே ஓர் எழுத்துப் பிழை இருக்கிறதென்றும் அதை மட்டும் விமர்சனத்தில் கட்டாயம் குறிப்பிட வேண்டும் என்றும் கூறினார். "அதென்ன எழுத்துப் பிழை?" என்று வியப்போடு கேட்டேன். எனக்கு எந்தப் பிழையும் கண்ணில் படவில்லை. "சிறுகதைத் திரட்டு என்று அச்சிட்டிருக்கிறார்கள் அல்லவா? அதில் திரட்டு என்ற வார்த்தையின் இரண்டாவது எழுத்துத் தான் தவறாக அச்சாகியுள்ளது. அது 'ரு' என்று இருக்க வேண்டும்!" என்றார் துளியும் சிரிக்காமல். நானும் தீபத்தின் இன்னொரு துணையாசிரியரான திருமலையும் இலக்கிய ஆர்வமுள்ள அச்சுக் கோப்பாளரான ராஜதுரையும் அன்று நீண்ட நேரம் சிரித்துச் சிரித்து மகிழ்ந்தோம்!

(தொடரும்)

---

**"தோற்றுப் போன வேட்பாளர் மக்கள் மன்றத்தில் நீதி கேட்பேன்னு சொல்லாம, நிதி கேட்பேன்னு சொல்றாரே.. ஏன்?"**

**"கள்ள வோட்டுக்கு ரொம்ப செலவாயிடுச்சாம்!"**

**- அம்பை தேவா**



# பக்திக்கு கைலாசம்! மனதிற்கு உல்லாசம்!!

**கைலாஷ்–மானசரோவர் சுற்றுலா (23 நாட்கள்)**
சென்னை–கல்கத்தா–சிட்வான்–காத்மாண்டு
கைலாஷ்–மானசரோவர்–புதுடெல்லி–சென்னை
புறப்படும் தேதி : 11–09–2002.
(பாஸ்போர்ட் உள்ளவர்களுக்கு மட்டும்)

**நேபாள சுற்றுலா (11 நாட்கள்)**
சென்னை–கல்கத்தா–சிட்வான்–போக்ரா–காத்மாண்டு–
கோரக்பூர்–சென்னை
புறப்படும் தேதி : 11–09–2002. தொகை ரூ. 8,500/–
முக்திநாத் தரிசனம்
ஹெலிகாப்டர் மூலம் ரூ. 12,500/–. விமானம் மூலம் ரூ.8,500/–

**இலங்கைச் சுற்றுலா (9 நாட்கள்)**
சென்னை–கொழும்பு–கண்டி–கதிர்காமம்–
நுவரெலியா–திரிகோணமலை–சென்னை
புறப்படும் தேதி : 05–08–2002. தொகை ரூ. 18,900/–

* அருமையான தங்கும் வசதி.
* அற்புதமான தென்னிந்திய சைவ உணவு.
* ஆனந்தமாக சுற்றிப் பார்க்க பேருந்து வசதி

மற்றும் பலப்பல வசதிகளுடன்.

நாங்கள் அறுசுவை உணவு வகைகளை
நியாயமான விலையில் அனைத்து வகை
பார்ட்டிகளுக்கும், விசேஷங்களுக்கும்,
திருமணங்களுக்கும் மற்றும் எக்ஸிக்யூட்டிவ்
சந்தைகளுக்கும் உரிய நேரத்தில்
சப்ளை செய்கிறோம்.
கம்பெனிகளுக்கு, ஹவுஸ் கீப்பிங்கும் செய்து
தரப்படும். அணுகவும்.

**ஸ்ரீ கேட்டரர்ஸ்**
போன் : 8516799.

தொடர்பு கொள்ளவும் :

LTC வசதியும் உண்டு

ஏமாற்றத்தை தவிர்க்க இப்போதே டிக்கெட்
புக்கிங் செய்து கொள்ளுங்கள்.

## ஸ்ரீ டிராவல்ஸ்

194–ஏ, அண்ணா சாலை, முதல் தளம், ஆயிரம் விளக்கு, சென்னை – 600 006.
போன் : 851 67 99, 8418339. ஈ–மெயில் : sritrave@satyam.net.in.

---

# முக்கூட்டு மருத்துவத்தால் குறைந்த செலவில் குழந்தை பெறலாம். இனி பிள்ளை வரம் வேண்டி எங்கும் அலைய வேண்டாம்!



* உலகப்புகழ் பெற்ற மருத்துவ திலகம் டாக்டர் A. அர்ஜுனா, டாக்டர் V. A. ஆண்டாள் அர்ஜுனாவுடன் இருப்பவர்கள் திருவண்ணாமலை மாவட்டத்தில் குழந்தை பெற்ற ரங்கநாதன் - கீதா தம்பதிகள்

அருகில் உள்ள போட்டோவில் கண்ட தம்பதிகளாகிய நாங்கள் திருமணமாகி பல ஆண்டுகள் குழந்தை இல்லாமல் இருந்து பல டாக்டர்களிடம் சிகிச்சை பெற்று தோல்வியாகி பின் வந்தவாசி மருத்துவ திலகம் டாக்டர் **A.அர்ஜுனா**, டாக்டர் **V. A.ஆண்டாள்** அவர்களை சந்தித்தோம். அவர்கள் எனக்கு உயிரணு உற்பத்தி ஆகவும், என் மனைவியின் கருக்குழாய் அடைப்பு நீங்கவும், மற்றும் கருப்பை சம்பந்தமான பல குறைபாடுகள் நீங்கவும் முக்கூட்டு மருத்துவ சிகிச்சையளித்ததில் மலடு நீங்கி, கருத்தரித்து குழந்தை பாக்கியம் அடைந்தோம்.

படத்தில் உள்ள பெரிய பையன் முதலில் பிறந்தான். அடுத்து பெண் பிறந்தாள். மூன்றாவது சிறிய பையன் பிறந்தான். இதனால் நாங்கள் மகிழ்ச்சியாக வாழ்ந்து வருகிறோம். மேலும் இந்த டாக்டர்கள் ஆண்களில் அறவே உயிரணு இல்லாதவர்களுக்கும், உயிரணுக்கள் உற்பத்தி குறைவாக உள்ளவர்களுக்கும் முக்கூட்டு சிகிச்சை மூலம் அணுக்கள் உற்பத்தி செய்தும், பெண்களுக்கு மாதவிடாய் பிரச்சினைகளை ஒழுங்குபடுத்தியும், கருப்பை ஓவரிகளை வளர்ச்சியடையச் செய்தும், அதிலுள்ள கட்டிகளை கரைத்தும், கருக்குழாயில் உண்டாகும் அடைப்புகளை நீக்கியும், கருமுட்டை உற்பத்தி செய்தும், அதை வெடிக்க செய்தும் முக்கூட்டு மருத்துவத்தால் மலட்டுத் தன்மை நீக்கி குழந்தை பிறக்கச் செய்கிறார்கள். குழந்தை இல்லாத தம்பதிகள் இந்த டாக்டர்களை சந்தித்தால் எங்களைப்போல் நீங்களும் புத்திர பாக்கியம் அடைந்து மகிழ்ச்சியாக வாழலாம்.

**நவீன வைத்தியாலயா**

**ஹோமியோபதி-சித்தா-ஆயுர்வேத மலடு நீக்கும் ஆஸ்பத்திரி.**

சென்னையில் சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய தினங்களில் டாக்டரைச் சந்திக்குமிடம்: எண் 65, நெற்குன்றம் பாதை. (டி.எஸ். கவுரி சங்கர் கல்யாண மண்டபம் எதிரில்) 100 அடி ரிங் ரோடு, வடபழனி, சென்னை - 600 026. போன் : 4833464 STD.044

செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய தினங்களில் டாக்டரைச் சந்திக்குமிடம்: நெ. 30, பிராமணர் தெரு. ஈஸ்வரன் கோயில் அருகில், வந்தவாசி. திருவண்ணாமலை மாவட்டம் - 604 408 போன்: 25208, 26180 STD. 04183

# விலகிப்

'அடுத்த வாரத் தொடர் கைங்கர்யம் விஜி - ரவி தம்பதி' என்று எழுதியதில் சேலம் சாரதாம்பாளுக்கு எக்கச்சக்கமாக பி.பி எகிறி விட்டது. "கல்யாணமாகி ஒரு வருஷம்கூட ஆகலை. தாம்பத்தியம் போரடிச்சுப் போச்சாம்" என்ற தகவலைத் துப்பறிஞ்சு, தண்டோரா போட்டதே நான்தான்... உபய தாரர் லிஸ்டில் என் பெயர் எப்படி விட்டுப் போகலாம்?'' என்று என்னவோ புதிய மந்திரிகள் பட்டியலில் பெயர் விட்டுப் போனது போல டண்டணக்கா ஆடிவிட்டார்.

ஆகையினாலே, இந்த வாரத் தொடரை நகர்த்தி, பத்திரமாகக் கரையேற்றும் முழு உரிமையும் (ஓவர்சீஸ், திருட்டு விசிடி, ஆடியோ ரைட்ஸ் உள்பட) அவருக்கே தரப்படுகிறது. ஓவர் டு சே. சா!

கூவம் நதியாற்றின் புண்ணிய பூமியிலிருந்து... சாரதா பேசுகிறேன். சாதா சாரதாவாயிருந்த நான், இந்த அளவுக்குப் பாப்புலரானதே, 'சித்தி' சீரியலாலேதான். ராதிகா மேடத்துக்குத் தாங்க்ஸ்! கொஞ்சம் எக்ஸைட் ஆயிட்டு, கிளைக் கதைக்குத் தாவிட்டேன்... ஸாரி... என்னோட பேத்தி விஜி, சென்னையிலே தனிக்குடித்தனம் பண்ற அழகைக் கண் குளிரப் பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன். வந்த நாலாம் நாளே இது தனிக் குடித்தனமில்லை; தன்னந் தனிக் குடித்தனம்னு தெரிஞ்சு போச்சு.

புதுசா கல்யாணமான தம்பதியாச்சே. 'அலைபாயுதே' ஷாலினி - மாதவன் மாதிரி, வீட்டுக்குள்ளேயே ஜாலியா பந்து விளையாடுவாங்க... நாம்ப கோல் கீப்பரா இருக்கலாம்'னு கொசுவலை நெட்டெல்லாம் தயார் பண்ணிக்கிட்டு எடுத்துக்கிட்டு வந்தேன். இங்கே வந்து பார்த்தா, 'பாபா', 'ரமணா'னு ஆகிப் போச்சு.

விலாவாரியா விஷயம் தெரிஞ்சுக்கணும்னா, அடுத்த பாராவுக்கு வாங்க.

காலையிலே அலாரம் அடிச்சதும், ஆளுக்கொரு பாத்ரூமில் பூந்து, குளிச்சிட்டுத் தயாராகறாங்க... டீ.வி பார்த்துக்கிட்டே போர்ன்விடா, ப்ரவுன் பிரெட், கார்ன் ஃப்ளேக்ஸ்னு சாப்பிடறாங்க. மத்தியானம் ஆபீஸ்லே ஏதா க்விக் லஞ்சாமே, அது! சாயங்காலம் வரும்போதே, ஏழு மணி ஆயிடுது. டயர்டா வந்து, இன்ஸ்டன்ட் இட்லி, திடீர் இடியாப்பம், புளியோதரை மிக்ஸ்னு ஒப்பேத்தறாங்க. ரவி, ஐ.சி.டபிள்யூ. ஏ பரீட்சைக்குக் கண் விழித்துப் படிக்க, விஜி, கம்ப்யூட்டரில் கரைந்து காணாமல் போய் விடுகிறாள்.

லீவுநாள், ஞாயிற்றுக்கிழமைன்னா கொஞ்சம் தனிக் குடித்தனக் களை சொட்டுமானு பார்த்தால், அது இன்னும் மோசம்!

அவனுக்குப் பசிச்சா, உடனே தட்டிலே எடுத்துப் போட்டுக் கொண்டு, இவளுக்குப்

"ஹய்யா... என் பொண்டாட்டி ஊருக்குப் போயிட்டா'' என்று சந்தோஷக் கூச்சல் போட்டுக் கொண்டு வந்தான் முருகன்.

"உன் மனைவி ஊருக்குப் போனதுலே உனக்கு அவ்வளவு சந்தோஷமா?'' என்று கேட்டான் ரங்கன்.

"பின்னே இருக்காதா!'' என்று சொல்லி, மனைவி இல்லாத தனிமையில் என்னென்ன சந்தோஷங்களை அனுபவிக்கலாம் என்பதை விவரமாக எடுத்துக் கூறினான் முருகன்.

''ஓஹோ! இதிலே இவ்வளவு விஷயமிருக்கா?'' என நினைத்துக்கொண்டே விடை பெற்றான் ரங்கன்.

சற்று தூரம் போனதும், எதிரே வந்த இன்னொரு நபர், "முருகன் பொண்டாட்டி ஊருக்குப் போயிட்டா. ஜாலி!'' என்று சந்தோஷமாகச் சொல்லிக் கொண்டு வந்தார்.

ரங்கனுக்கு ஒரே சந்தேகம்! 'முருகன் பொண்டாட்டி ஊருக்குப் போனதுலே, முருகன் சந்தோஷப்படறது நியாயம். ஆனால் இவர் ஏன் சந்தோஷப்படறார்'னு மண்டை குடைச்சலாயிடுச்சு. உடனே அவரைக் கூப்பிட்டு, சந்தேகத்தைக் கேட்கவும் செய்தான்.

''அதுவா! என்னோட பக்கத்து வீட்டுக்காரர்தான் முருகன். அவரோட பொண்டாட்டி என்ன காரியம் செஞ்சாலும், அடுத்த நாளே என் மனைவியும் அதே மாதிரி செஞ்சுடுவா...'' என்றார் இளித்துக்கொண்டே!

ஜோக் உதவி:
கபிஸ்தலம் எஸ். இராஜேந்திரன்



# போனால்...

பசிச்சா தானே தட்டுலே எடுத்துப் போட்டுக் கொண்டு... ஸ்வயம் சேவக்ஸ்!

"ரைஸ் வைக்கட்டுமா?"

("அதென்ன ரைஸ்... அழகா சாப்பிட நீங்காளன்னு கேட்கக் கூடாதா...? என்ன ஸ்டைலோ!)

"உம்"

"கொஞ்சம் கிரேவி?"

"போதும்."

இப்படி துணுக்குத் துக்கடா சொற் புரட்சிகள்!

ஒரு வாரம் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன்....

"பொறுத்தது போதும்... பொங்கி எழு சாரதா!" என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டு, விஜியைத் தனியாகத் தள்ளிக் கொண்டு மொட்டை மாடிக்குப் போனேன்.

"என்னடி இது... கல்யாணமான புதுத் தம்பதி மாதிரி இல்லாமே... நீ கிழக்கே... நான் மேற்கேனு..."

"என்ன பாட்டி?"

"புது புருஷன்... பொண்டாட்டின்னா ஒரு ஆசை, அர்ச்சனையே இல்லையே! சிரிப்பு, சில்மிஷம்... ஒண்ணையும் காணோமே!"

"எப்படி இருக்கணுங்கிறே?"

"மண்டு... என்னென்னவோ படிக்கிறீங்க... சினிமா பார்க்கிறீங்க. இதுகூட தெரியலையா?"

விஜி பேசாமலிருக்கவே, நானே தொடர்ந் தேன்.

"எனக்குக் கல்யாணமானப்போ பதினாலு வயசு... பிரதோஷ கூட்டம் போல வீடு 'ஜே..ஜே'னு இருக்கும். உங்க தாத்தா எதிரிலே நிக்கறதே சில நிமிஷங்கள்தான். பேசறதுங் கிறதுகூட மணிரத்னம் சினிமா பாணிலே தான். நான் சமையல் கட்டுலே மாமியாருக்கு ஒத்தாசையா வேலை செஞ்சுக்கிட்டிருப்பேன். இவர் நைஸா வந்து, என்னோட நீள பின் னலை வலிக்கிறமாதிரி இழுத்துட்டு ஓடிடு வாரு. கோயில், சினிமான்னு தனியா போயிட முடியாது. டைட் செக்யூரிடி இருக்கும். ஆனாலும் அவரும் நானும் மட்டுமே போல மாதிரி, த்ரில்லிங்கா இருக்கும். அவர் வெளி யூருக்கு மாறுதலாகிப் போனப்போ, 'முருகன் மோட்டார் சர்வீஸ்' டிரைவர் கிட்டே... ரெண்டு பக்கமும் 'பின்' அடிச்சு, லெட்டர் கொடுத்து அனுப்புவார். அதைப் பிரிச்சுப் படிக்கிறதுக் குள்ளே, கை காலெல்லாம் நடுங்கிடும்."

"ஸோ வாட், பாட்டி...?" அவள்

அனுராதா சேகர்

இழுத்ததே பாவமாக இருந்தது...

"இந்த ஒரு வாரமா, நல்லா யோசிச்சு, உங்கப் பிரச்னை என்னன்னு தெரிஞ்சுக்கிட்டேன்."

அவள் வியப்புடன் பார்த்தாள். நான் தொடர்ந்தேன்.

"நீங்க இரண்டு பேரும் ஒரே ஆபீஸ்லே பல வருஷமா வேலை செய்யறீங்க. காதல் திருமணமில்லைன்னாலும், பல சௌகரியங்களைக் கருதி, பொருத்தம் பார்த்து நீங்களாவே, 'ஓ.கே' சொல்லி, முடிவு பண்ணின கல்யாணம். இந்த ஒரு விஷயம் போறாதா போரடிச்சுப் போக... ஆபீஸ்லே எப்பவும் கூடவே இருக்கே. வீட்டிலேயும் புதுசா பேச ஒண்ணுமே இல்லை. நீ என்ன பேசவேன்னு அவனுக்குத் தெரியும். என்ன பேசினால், என்ன பதில் வரும்னு உனக்கும் தெரியும். சர்ப்ரைஸா எதுவும் இல்லைங்கிறதனாலே பேசறதே நின்னு போச்சு..."

"இல்லை பாட்டி.... அவர் எப்பவுமே ரிசர்வ் டைப்தான். நானும் வளவள டைப் இல்லை."

"இரும்மா. நான் முடிச்சுடறேன்... இரண்டு பேரும் சின்னதா சம்பாதிச்சு, அழகா ஒரு ஃபிளாட்டு வாங்கி, ஒவ்வொரு பொருளா அலைஞ்சு திரிஞ்சு வாங்கினாலும் வாழ்க்கையிலே ஒரு பிடிப்பு இருக்கும். இந்த ஃபிளாட்டு, ரவியோட அண்ணாவுடையது. அவரு வெளிநாடு போயிட்டதனாலே, குக்கரிலிருந்து, ஏ.சி மிஷின் வரை எல்லாத்தையும் உங்கக்கிட்டே ஒப்படைச்சுப் போயிட்டாரு... தொப்புளுக்கு மிஞ்சின கஞ்சி... திகட்டாம என்ன செய்யும்?"

**"தூக்கத்துல நடக்கிற வியாதியால நம்ம தலைவருக்குப் பெரிய அடி பட்டுடுச்சா? எப்படி?"**

**"ஓடிக்கிட்டிருந்த பஸ்ஸுல தூங்கிக்கிட்டே போன தலைவர், சட்டசபைன்னு நினைச்சு வழக்கம் போல வெளிநடப்பு செஞ்சிட்டாரு!"**

- தஞ்சை மகா



பாட்டியம்மா சாரதா பேசப் பேச எம்.சி.ஏ கோல்டு மெடலிஸ்ட் விஜிக்கு, ஆச்சரியம்!

"வீட்டுலே காமாட்சியம்மன் விளக்கு இருக்கே... அதை அடிக்கடி, புளி போட்டு, துலக்கி வைச்சா, பளிச்னு தங்கம் மாதிரி ஜொலிக்கும். அதுவே, அப்படியே விட்டுட்டா, கருப்படிச்சுடும். கணவன் - மனைவி உறவும் அது மாதிரிதான். கொஞ்சம் மெனக்கெட்டு, தாம்பத்தியத்தைப் புதுசா, ஃப்ரெஷ்ஷா வைச்சுக்கணும். ஒரே மாதிரி பேசி, ஒரே மாதிரிப் பழகி, ஒரே மாதிரி இயந்திரத்தனமா வாழ்ந்தா, அலுக்கத்தான் செய்யும். பழகப் பழகப் பாலும் புளிக்குமே!" என்று சாரதாம்பாள் சொல்வதையே நான் மனோதத்துவ நிபுணர்களும் சொல்கிறார்கள்.

"கணவன் - மனைவி இடையே, தெரிந்து கொள்ள கொஞ்சம் ரகசியம், கொஞ்சம் சுவாரசியம் என மிச்சம் மீதி எப்போதும் இருக்க வேண்டும். ஆனால் தனிக்குடித்தனம் போகும் தம்பதிகளுக்கு ஓவர் சுதந்தரம் என்பதால், 'ஒளிவு மறைவு' 'பட்டும் படாமலும்' இலை மறை காய்' போன்ற விஷயங்களே இல்லாமல், ஆறே மாதத்தில் சலித்துப் போகிறது. 'கீப் டிஸ்டென்ஸ் - மெயின்டைன் ஃப்ரெஷ்னெஸ்' என்ற ஒரே ஒரு மாணிக்க வரியில் மேரேஜ் கவுன்ஸிலர்கள் இந்த விஷயத்தைச் சொல்லித் தருகிறார்கள்.

மறுபடி சாரதா பேசறேன். 'முழு உரிமையும் சாரதாவுக்கே'னு பிரமாதமா சொல்லிட்டு, நடுவுலே கருத்துப் படலத்தை மட்டும் லவுட்டிக்கிட்டது குறித்து மக்கள் மன்றத்துலே நீதி கேட்க இது சமயமில்லை.

ஏன்னா, விஜியை சேலத்துக்குக் கூட்டிட்டு வந்திருக்கேன். எல்லாம் பிளானோடு தான்.

'டிஸ்டென்ஸ் கீப்' செய்யணுமில்லையா?

முதல் நாள், "என்ஜாய் யுவர்செல்ஃப்" என்று ரவி ஃபோன் செய்தான்.

இரண்டு நாள் கழிச்சு, "டிக்கெட் புக் பண்ணிட்டியா?"னு பட்டும் படாமலும் ஒரு விசாரிப்பு. இன்னும் இரண்டு நாள் கழிச்சு, "எப்போ வர்றே?"னு செல்ல அதட்டல்...

வாரக் கடைசியில், அவனே ஒரு தோள்(ல்) பையோடு வந்து நிற்கிறான்!

இனி, 'ஃப்ரெஷ்னெஸ் மெயின்டைன் பண்ண வேண்டியது விஜி வேலை!

சரி, அடுத்த வாரம் லலிதாவின் கையில் அகப்பட்டுக் கொண்டு விழிக்கும் சுகுமாரின் பரிதாபக் கதையுடன் சந்திப்போம்...

# ஃபாக்ஸில் வந்த ஆபத்து!

டெல்லி காவல்துறையும் பாதுகாப்புத் துறையினரும் எக்குத்தப்பாக மண்டையைப் பிய்த்துக்கொண்டிருக்கின்றனர். பாதுகாப்பு அமைச்சர் ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ் வீட்டிலுள்ள அலுவலகத்துக்கு வந்த ஒரு தொலைநகல் செய்திதான் அந்த அளவுக்கு உலுக்கியுள்ளது. Y என்ற பெயர் தாங்கிய அந்த ஃபேக்ஸ் செய்தி: **பைபிளில் இருந்து, கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல். சுவிசேஷம் - யார் கத்தியை எடுக்கிறானோ அவன் கத்தியாலேயே காயப்படுவான் - அன்புடன் Y**. அதே தொலைநகலில் கிடைத்த இன்னொரு செய்தி **பயங்கரத்தின் நிறம் சிவப்பு**. எப்போதுமே தமக்கான பாதுகாப்பைக் கடுமையாக எதிர்க்கும் பாதுகாப்பு அமைச்சர் இப்போது மிகவும் கெடுபிடியான பாதுகாப்புப் படையினரால் சூழப்பட்டிருக்கிறார். புலனாய்வுத் துறையினருக்குக் கிடைத்துள்ள தகவல்களும் அவர்களை மிகவும் பதற்றமடைய வைத்துள்ளன லஷ்கர் - இ - தொய்பா அமைப்பினர் தம்முடைய பார்வையை ஜார்ஜ் மீது பதித்திருப்பதாகக் கிடைத்த தகவல், பதற்றத்தை மேலும் அதிகரித்துள்ளது. ஆனாலும் ஜார்ஜ் மட்டும் டென்ஷன் இல்லாமல் எப்போதும் போலத்தான் இருக்கிறார்.

'ஜெராக்ஸ் கார்ப்' என்கிற அமெரிக்கத் தனியார் நிறுவனம் இப்போது தானே சமர்ப்பித்த கணக்கு வழக்குகளினால் சிக்கலுக்கு உள்ளாகியிருக்கிறது. அந்த நிறுவனம் சமர்ப்பித்த ஆண்டு அறிக்கையில் அதன் இந்தியக் கிளையான 'ஜெராக்ஸ் மோடி கார்ப் லிமிடெட்' என்ற நிறுவனம் அரசு நிறுவனங்களுக்கு, நகலெடுக்கும் இயந்திரங்களை விற்ற வகையில் பல கோடி ரூபாயை அரசு அதிகாரிகளுக்குச் சட்டத்துக்கு புறம்பான வகையில் (நம்ம பாஷையிலேயே வருவோமே, மாமூல் கொடுத்ததாக) கோடிக் கணக்கில் செலவு செய்ததாகக் காட்டியிருக்கிறது. அதாவது 2000 வருட முடிவு வரை சுமார் 2.88 கோடியிலிருந்து 3.36 கோடி வரை லஞ்சமாக அரசு ஊழியர்களுக்குக் கொடுத்திருப்பதாகக் காட்டியிருக்கிறது.

இப்போது அந்த நிறுவனத்துக்கு நேர்ந்துள்ள சிக்கல் என்னவென்றால் இந்திய நிறுவனங்கள் சட்டத்தின்படி அந்த நிறுவனத்தின் மீது சட்டப்படியான நடவடிக்கை எடுக்கலாம். அடுத்த நாட்டில் லஞ்சம் கொடுத்து காரியம் சாதித்துக்கொள்வது சட்டப்படி குற்றம் என்கிற வகையில் அமெரிக்காவும் கடுமையான நடவடிக்கை எடுக்கலாம். விசாரணை முடுக்கி விடப்பட்டுள்ளது. இந்த விஷயத்தில் டெல்லியின் அலுவலக வட்டாரத்தில் பல தலைகள் உருளலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

பத்திரிகைகளும் பிற மீடியாவும் வரப்போகும் அப்துல்கலாம் பற்றியே பேசிப் பேசி குடியரசுத் தலைவர் மாளிகையை விட்டு வெளியேறப் போகும் நாராயணனைப் பற்றிக் கண்டு



கொள்ளாதது ரொம்பவும் அநியாயம். ஜூலை 25ம் தேதி ஓய்வு பெறும் கே.ஆர். நாராயணன் டெல்லியின் 34, பிரித்விராஜ் சாலையில் குடியேறத் தீர்மானித்து விட்டார். அவருடைய பக்கத்து வீட்டுக்காரர்கள் யார் தெரியுமா? துணைப் பிரதமர் அத்வானியும் கேபினெட் செயலர் டி.ஆர். பிரசாத்தும். மத்திய நகர வளர்ச்சித்துறை அலுவலகம், இரவு பகலாக அந்த மாளிகையை நாராயணனின் விருப்பத்துக்கேற்ப தயார் செய்து வருகிறது.

— இந்திரப்ரஸ்தன்

# ஜி.எஸ்.எஸ்.



எந்தப் பிரச்னையிலுமே எதிர்த் தரப்பை யும் அறிந்து கொள்வதே நல்லது, புத்திசாலித் தனம். காஷ்மீர் விஷயத்தில் பாகிஸ்தான் ஏன் இப்படியொரு குரங்குப் பிடிவாதம் பிடிக்க வேண்டும்?

இந்தியாவின் கிரீடம் என்று நாம் காஷ்மீரைக் கருதுவது ஒரு புறமிருந்தாலும், நமது மொத்தப் பரப்பில் அது குறைவானது தான். நமது பல மாநிலங்களில் அது ஒன்று, அவ்வளவே.



ஆனால் பாகிஸ்தானைப் பொறுத்தவரை அது ஏற்கெனவே தனது கிழக்குப் பகுதியை (அதாவது பங்களாதேஷை) மொத்தமாக இழந்து விட்டது. எனவே அளவில் சுருங்கி விட்டது. காஷ்மீர் அதைப் பொறுத்த வரை மிகப் பெரிய பரப்பு. அதாவது பாகிஸ்தானில் சுமார் மூன்றில் ஒரு பங்கு என்று காஷ்மீரைச் சொல்ல லாம். இதன் காரணமாக காஷ்மீரை விட்டுவிட பாகிஸ்தானுக்கு மன மில்லை.

தவிர, கீழ்க்கண்ட வாதங்களை, பாகிஸ்தான் உலக அரங்கில் வைத்து அனுதாபம் தேடிக்கொள்ளப் பார்க் கிறது.

"1947ல் பிரிட்டிஷ் அரசு இந்தி யாவுக்குச் சுதந்தரம் அளித்தபோதே, காஷ்மீரில் மன்னராட்சிக்கு எதிராக ஒரு பெரும் புரட்சி நடந்து கொண்டி ருந்தது. காஷ்மீர் விடுதலை ராணுவம் என்ற அமைப்பு 24.10.47 அன்று மன்னர் ஹரிசிங்கைத் தோற்கடித்து விட்டு, தானே அங்கு அரசமைத்தது" என்று தன் தரப்பைத் தொடங்கு கிறது பாகிஸ்தான்.

நிலைமையின் தீவிரத்தை உணர்ந்த ஹரிசிங், அக்டோபர் 26 அன்று ஸ்ரீநகரிலிருந்து விமானத்தில் பறந்து அன்று மாலை ஜம்முவுக்கு வந்து சேர்ந்தார். ஜம்முவில் நேருவின் பிரதிநிதியாக வி.பி. மேனன் காத்தி ருந்தார். அவரெதிரில் ஹரிசிங் இந்தி யாவுடன் காஷ்மீரை இணைக்கும் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார். அடுத்தநாளே இந்திய ராணுவம் ஸ்ரீநகரை நோக்கிப் பறந்தது. – இது இந்தியாவின் கூற்று.

"வானிலை சரியில்லாததால் ஸ்ரீநகரிலிருந்து கிளம்பிய மேற்படி விமானம் அன்று முழுவதும் ஜம்முவில் இறங்கவே இல்லை. ஆக ஹரிசிங் ஒப்பந்தத்தில் கையெழுத்திடுவதற்கு முன்பே





# காஷ்மீர்!

இந்திய ராணுவம், பாகிஸ்தான் ராணுவத்தினருக்கு எதிராகச் செயல்பட, காஷ்மீருக்குச் சென்றுவிட்டது. எனவே இந்திய ராணுவம் காஷ்மீரில் நுழைந்ததே ஓர் அநீதி. ஐ.நா. விதிகளின்படி சட்டமீறல்" என்கிறது பாகிஸ்தான்.

அது மட்டுமல்ல. "ஹரிசிங் மனப்பூர்வமாக இந்த இணைப்பு ஒப்பந்தத்தில் கையெழுத்திடவில்லை" என்கிறது பாகிஸ்தான். இந்தியாவினால் அவர் கட்டாயப்படுத்தப்பட்டாராம். தவிர பாகிஸ்தானோடு 'ஸ்டாண்ட்ஸ்டில் ஒப்பந்தம்'' ஒன்றில் ஹரிசிங் கையெழுத்திட்டிருக்கும்போது, இந்தியாவோடு வேறு மாதிரி ஒரு ஒப்பந்தத்தில் கையெழுத்திட அவருக்கு உரிமையில்லை. இதுவும் நமது அண்டை (சண்டை) நாட்டின் கருத்துதான்.

இதையெல்லாம் தூக்கியடிக்கும் வகையில் "காஷ்மீரிலிருந்து பயந்து வெளியேறியவர் ஹரிசிங். வலிமையற்ற இவருக்கு காஷ்மீரின் சார்பாகக் கையெழுத்திடும் உரிமை ஏது?" என்றும் கேள்வி எழுப்புகிறது.

இந்த வாதங்கள் குழந்தைத்தனமானவை என்பது நடுநிலைமையான எவருக்கும் புரியும். ஹரிசிங் எந்தவிதத்திலும் கட்டாயப்படுத்தப்படவில்லை என்பதற்கு அவர் தமது மீதி வாழ்நாளை இந்தியாவிலேயே நிம்மதியாகக் கழித்தது ஒரு சாட்சி. நீண்ட வாழ்க்கைக்குப் பின், மும்பையில் 1962ல்தான் அவர் இறந்தார்.

தவிர "ஹரிசிங் கையெழுத்திட்டப் பிறகு இந்திய ராணுவம் காஷ்மீருக்குச் சென்றதா? அல்லது இந்திய ராணுவம் கிளம்பிய பிறகுதான் ஹரிசிங் கையெழுத்திட்டாரா?" என்பது "தன்னை வைத்திழந்தபின் என்னை இழந்தாரா?" என்று பாஞ்சாலி கேட்பது போன்ற பொருள் பொதிந்த கேள்வியல்ல. ஏற்கெனவே தமது மனப்போக்கை ஹரிசிங் பட்டவர்த்தனமாக வெளியிட, காஷ்மீரின் பெரும் அரசியல் கட்சித் தலைவரான ஷேக் அப்துல்லாவும் இதை வழிமொழிய அதற்குப் பிறகே இந்திய ராணுவம் காஷ்மீரில் நுழைந்திருக்கிறது. இந்திய ராணுவம் அங்கு சென்றபோது பெரும்பாலான காஷ்மீரி மக்கள் சாலைகளில் இரு பக்கங்களிலும், மூவண்ணக் கொடியைத் தாங்கியபடி நின்று வரவேற்றதே ஒரு குறிப்பிடத்தக்கக் காட்சிதான். மேலும் இதற்கெல்லாம் முன்பே காஷ்மீரை ஆக்கிரமிக்க தனது படையைத் தந்திரமாக அனுப்பிய பாகிஸ்தானுக்கு இது குறித்துப் பேசும் யோக்யதை இல்லை.

ஸ்டாண்ட்ஸ்டில் ஒப்பந்தத்தையும் பாகிஸ்தான் மீறிவிட்ட காரணத்தால், இது குறித்துப் பேசும் தார்மீக உரிமையும் அதற்குக் கிடையாது.

காலம் உருண்டோடியது. காஷ்மீரிலும் நிலைமை சக்கரவட்டம் அடித்துக் கொண்டிருந்தது. 1974ல் இந்திராகாந்தியின் சார்பில் ஜிபார்த்தசாரதியும், ஷேக் அப்துல்லாவின் சார்பில் மிர்சா முகமது அப்சல் - பக் என்பவரும் 'காஷ்மீர் ஒப்பந்தத்தில்' கையெழுத்திட்டனர். இதன்படி ஜம்மு காஷ்மீரின் எந்த விஷயத்திலும் தலையிடும் உரிமை இந்திய பாராளுமன்றத்துக்கு உண்டு என்றானது. ஜம்மு காஷ்மீர் எல்லையைப் பொறுத்த எந்தத் தீர்மானத்தையும் எடுக்கும் உரிமை இந்திய பாராளுமன்றத்துக்கு உண்டு என்பது மேலும் தெளிவாக்கப்பட்டது.



• அப்துல்லா

இதற்கு இரு வருடங்கள் கழித்து காங்கிரஸ் கட்சியின் ஆதரவையும் இழந்ததும் ஷேக் அப்துல்லா தமது பதவியை ராஜினாமா செய்தார். ஜம்மு காஷ்மீர் சட்டசபை கலைக்கப்பட்டது. அதே ஆண்டான 1977ல் ஜம்மு காஷ்மீரின் முதல் தேர்தல் வெற்றிகரமாக நடைபெற்றது. மீண்டும் பதவிக்கு வந்தார் ஷேக் அப்துல்லா. தமது வாரிசாக தம் மகன் பரூக் அப்துல்லாவை நியமிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார் ஷேக் அப்துல்லா. ஆனால் இதற்கு எதிர்ப்பு தெரிவித்தார் ஷேக் அப்துல்லாவின் நெருங்கிய உறவினரான ஜி.எம்.ஷா. 1982ம் ஆண்டு செப்டம்பர் 8ம் தேதி ஷேக் அப்துல்லா இறந்தார். பரூக் அப்துல்லா ஜம்மு காஷ்மீரின் தலைமைப் பொறுப்பை ஏற்றார்.

ஜி.எம்.ஷாவின் தலைமையிலும் பிறகு ஜம்மு காஷ்மீர் அரசு அமைக்கப்பட்டது. ஆனால் 1986ல் அனந்தநாக் எனும் இடத்தில் இந்துக் கோவில்கள் பெருமளவு சேதப்படுத்தப்பட, ஷாவின் அரசு கலைக்கப்பட்டது. அந்த ஆண்டு மார்ச் மாதம் ஷா பதவியிழந்தார். அதே ஆண்டு நவம்பர் மாதம் பரூக் அப்துல்லா முதல்வரானார்.

1990 – 91ல் மீண்டும் பெரும் கலவரம். பாகிஸ்தான் தீவிரவாதிகளும் உள்ளே நுழைந்தனர். சுமார் 2,500 காஷ்மீர மக்கள் இறந்தனர். ஆயிரக்கணக்கில் காஷ்மீரில் வாழ்ந்த இந்து பண்டிட்கள் நிம்மதி நாடி நாட்டின் பிற பகுதிகளுக்கு வெளியேறினர். 'கையாலாகாத அரசு'க்கு எதிராக ஊர்வலங்கள் நடத்தப்பட்டன. கலவரம் பெருகியது. இதற்கிடையில் 1992 ஜனவரியில் குடியரசு தினத்தன்று பாரதிய ஜனதா கட்சி காஷ்மீரில் உள்ள லால்சௌக்கில் தேசியக் கொடியை ஏற்றியது.

அரசியல் ரீதியாகக் காஷ்மீருக்குத் தீர்வு காண்கிறேன் என்று கூறிய பிரதமர் நரசிம்ம ராவ், 1994ல் தீவிரவாதிகளான யாசின் மாலிக்கையும் ஷபீர் ஷாவையும் விடுதலை செய்தார். அடுத்த ஆண்டே ஜம்மு காஷ்மீரைப் பின் தங்கிய மாநிலமாக அறிவித்தார். அங்கு தொழில் தொடங்குபவர்களுக்கு ஐந்து வருடங்களுக்கு வருமான வரி கிடையாது என்று ஆசை காட்டினார். ஆனால் கலவரப் பகுதியில் தங்களை நிலை நாட்டிக் கொள்வது சுலபமான காரியமல்ல என்பதால் தொழிலதிபர்கள் பயந்தனர்.

காஷ்மீர் சரித்திரத்தில் மேலும் பல ரத்தக் கறைகள் தொடர்ந்தன. அல்ஃபரான் என்ற காஷ்மீர் தீவிரவாதக் குழு பகல்காம் பகுதியிலிருந்து வெளிநாட்டவர்களைக் கூட கடத்தியது. 1996ல் ஹஸ்ரத்பால் பகுதியில் ஏற்பட்ட மோதலில் 33 காஷ்மீர் தீவிரவாதிகளைக் கொன்றது இந்திய ராணுவம்.

சர்வதேச அரங்கில் பலரும் கேட்டுக் கொண்டதற்கு இணங்க, மாநில மனித உரிமைக் கழகமொன்றை இந்திய அரசு 1997ல் நிறுவியது. அந்த ஆண்டில் நடைபெற்ற தேர்தலில் பா.ஜ.க.வுக்கு ஒரே ஒரு தொகுதி கிடைக்க, மற்ற அத்தனையும் தேசிய கூட்டமைப்புக்குதான்.

பிறகு சமீபத்தில் நடைபெற்ற சம்பவங்கள் லாகூர் பஸ் பயணம், கார்கில் ஊடுருவல். இவையெல்லாம் நாமறிந்தவைதான். பாகிஸ்தானின் இந்த அத்துமீறல்களுக்கு முக்கிய காரணமே காஷ்மீர் பிரச்னையை மீண்டும் மீண்டும் உலக அரங்கில் கவனம் பெறச் செய்ய வேண்டும் என்ற நோக்கம்தான்...

பாகிஸ்தானின் வலுவான வாதம் இதுதான்: 'தொடக்கத்திலேயே காஷ்மீர் மக்களின் விருப்பப்படிதான் முடிவு எடுக்க வேண்டும் என்று நேரு கூறினார்; ஐ.நா.சபையும் வற்புறுத்தியது. ஆனால் இந்தியா, காஷ்மீர் மக்களிடையே இதற்காக வாக்கெடுப்பு நடத்த மறுத்து வருகிறது. காரணம், தோல்வி பயம்தான். காஷ்மீர் மக்கள் பாகிஸ்தானுடன் இணையத்தான் விரும்புகிறார்கள் என்பதற்கு இதுவே சாட்சியாயிற்றே!'

இன்றைய சூழலில் கருத்துக் கணிப்பு நடந்தால் அது யாருக்குச் சாதகமாக இருக்கும்? சுவாரசியமான இந்தக் கேள்விகளுக்கான விடைகளை அடுத்த இதழில் அலசுவோம்.

(தொடரும்)

# வெறுத்துப் போன டாக்டர்!

● "வன்னியர்களுக்கும், தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் இடையே தாம் ஏற்படுத்த முயற்சி செய்த நல்லிணக்கம் பயனளிக்கவில்லையே" என்ற வருத்தத்தில் இருக்கிறாராம் டாக்டர் ராமதாஸ். "சமீபத்தில் நடந்த அச்சிறுபாக்கம் இடைத்தேர்தலிலும் எங்கள் காலை தாழ்த்தப்பட்டவர்கள் வாரி விட்டார்கள். இந்த நிலையில் எங்கள் வோட்டு வங்கியான வன்னியர் சொந்தங்களையாவது நாங்கள் தக்க வைத்துக் கொள்ள வேண்டாமா? அதனால்தான் இந்த முறை கிடைத்த வாய்ப்பில் இரண்டு அமைச்சர் பொறுப்பையும் வன்னியர்களுக்கே கொடுத்து விட்டார் டாக்டர்" என்றார் பா.ம.க முக்கியப் பிரமுகர் ஒருவர். ஆனால் அதிலும் ஒரு சிக்கல். மிகவும் சீனியரும் கட்சிக்காக பல தியாகங்களைச் செய்தவருமான பு.தா. இளங்கோவனுக்கு வாய்ப்பு கொடுக்கப்படும் என்று உறுதி கொடுத்து விட்டு, பின்னர் தமது மகனின் அன்பு வேண்டுகோளைத் தட்ட முடியாமல், ஏ.கே. மூர்த்திக்கு வாய்ப்பு கொடுத்து விட்டாராம் ராமதாஸ். இப்போது பு.தா. இளங்கோவன் முறைத்துகொண்டு நிற்கிறார். அவருக்கு டாக்டர் ஏதாவது வைட்டமின் ஊசி போட்டாக வேண்டும்.





● த.மா.கா மீண்டும் காங்கிரஸில் இணைவதற்குத் தயாராகிவிட்ட நிலையில், சிதம்பரத்தின் ஜனநாயக பேரவை என்ன செய்யப் போகிறது?....

"தன்மானம், தனித்தன்மை, தமிழகத்தில் நல்லாட்சி என்பதுதான் எங்கள் கோஷம். எனவே காங்கிரஸுடன் இணைவது என்ற பேச்சுக்கே தற்போது இடமில்லை. ஆனால் காங்கிரஸுடன் கூட்டணிஅமைத்து திராவிட இயக்கங்களை வீழ்த்த நாங்கள் ரெடி" என்கிறார் பேரவையின் முக்கியத் தலைவர் ஒருவர். காங்கிரஸ் தனித்து நின்று தேர்தலைச் சந்திக்கும்போது சோனியாகாந்திக்கு மக்களிடம் முன்நிறுத்த சிதம்பரத்தை விட்டால் வேறு தலைவரில்லை என்பதையும் அடித்துச் சொல்கிறார்கள் அவர்கள். இது தவிர அந்தச் சமயத்தில் ரஜினியின் ஆதரவும் பசிக்கு கிடைக்குமாம். மாதத்துக்கு இரண்டு முறையாவது ப.சி.யின் மகன் கார்த்திக் ரஜினியைச் சந்திக்கிறார். ஆனால் அவர்களிடையே அதிகமாக அ(க)டிபடுவது அரசியலல்ல; ஆன்மிகமாம்!

● முதல்வருக்குச் செல்லும் கோப்புகளை முதல்வர் அலுவலக அதிகாரிகளைத் தவிர, மேலும் இரண்டு முன்னாள் தலைமைச் செயலாளர்களும் பார்த்து 'நோட்' போடுகிறார்களாம். ஹரிபாஸ்கர், டீ.வி. வெங்கட்ராமன் ஆகியோர்தான் அவர்கள் என்கிறது கோட்டை வட்டாரம். சமீபத்திய அதிகாரிகள் மாற்றங்களில் இவர்களின் கைவரிசை நிறையவே உள்ளதாம்.

● திருநாவுக்கரசருக்குத் திட்ட அமுலாக்கம், சமூகப் பாதுகாப்பு என்று பசையற்ற துறை ஒதுக்குவதாக இருந்தார்களாம். பிரமோத் மகாஜன், வெங்கையா நாயுடு ஆகியோரைப் பிடித்துப் போராடி மாற்றினாராம் அரசர்!

• சஞ்சயன்

# கழுகாசல அனுகூலன்

## தலம்தோறும் தமிழ்க் கடவுள் - 33

குருஜி ஏ.எஸ். ராகவன்

முருகன் இசைப் பிரியன். நாத ரூபன். சீத ஸ்வர ஆலயன். அடியார்களை ஆட்கொண்டு, ஊனையும் உள்ளத்தையும் உருக்கும் இசைப் பாடல்களை அவர்கள் மூலம் பெற்று மகிழ்ந்தவன். திருப்புகழ், திருமுருகாற்றுப்படை, கந்தர்கலி வெண்பா, பல பிள்ளைத் தமிழ்கள், திருப்போரூர் சந்நிதி முறை, குமரேச சதகம், கந்தபுராணம் என்று தெய்வீகத் தமிழ்க் கவிகளால் அலங்கரிக்கப்பட்டவன். அவற்றை இசைக்கும் அன்பர்களின் அன்புக்குக் கட்டுப்பட்டவன்.

இந்தப் பொக்கிஷங்கள் போதாதென்று 'சிந்து' என்கிற கிராமிய வகைப் பாடல்களும் பெற முருகன் இச்சை கொண்டான். அவற்றைப் பாடுதற்கு அவன் தேர்ந்தெடுத்த பாத்திரங்களுள் ஒருவர் அண்ணாமலை ரெட்டியார். ரெட்டியார் தம் மீது கொண்டிருந்த பக்தியைப் பார்த்தான் முருகன்... தமிழையும் சந்தத்தையும் அவர் நாவில் விளையாட அருள் செய்து ஆட் கொண்டான்.

அண்ணாமலை ரெட்டியார் ஆட்கொள்ளப்பட்ட இடம்தான் கழுகுமலை.

***தெள்ளுத்தமிழுக்குதவு சீலன் - துதி***
***செப்பும் அண்ணாமலைக் கனுகூலன்***

என்று முருகன் தமக்கு இழைத்த 'அனுகூலத்தை'யே பாடி வைத்துள்ளார் இந்தப் புலவர். முருகனை

***கள்ளவிழ் கடப்பமலர் வாகன் – குறக்***
***கன்னியை அணைக்கும் அதிமோகன் - வளர்***
***கழுகு மலை நகரின் வளம்***
***முழுமையும் நாவில் அடங் - காதே***
***மடமாதே***

என்று தலத்தின் இயற்கை வளத்தையும் முருகன் குணத்தையும் இணைத்து இணைத்துப் பாடியிருக்கிறார்.

கழுகாசல முருகனும் திருநெல்வேலிக்காரர்தான். அரை மலை என்றொரு பெயரும் உண்டு. கழுகாசலம், குருகுமலை, க்ருத்ர கிரி எனும் பெயர்களும் உண்டு.

நின்றசீர் நெடுமாறன் என்ற மன்னன் இத்தலத்தில் சமணர்களைக் கழுவில் ஏற்றியதால் 'கழு மலை' என்று பெயர் வந்தது. பின்னர் கழுகு மலை என்று மாறிற்று. சம்பாதி (கழுகு) முனிவரால் இம்முருகன் பிரதிஷ்டை செய்யப்பட்டதால் கழுகு மலை ஆயிற்று என்றும் சொல்கிறார்கள். மலையின் உருவமே கழுகை ஒத்திருக்கிறது.

அடிவாரத்தில் புஷ்கரிணி. ஒற்றைக் கல் கோயில், குடவரைக் கோயில், கட்டடக் கோயில் என்று மூவகையான கட்டடக் கலைகளுக்கும் உதாரணமாக இங்கே அமைப்புகளைக் காணலாம்.

மலையில் ஒரு பகுதியைக் குடைந்து குடவரையாக முருகன் கோயில் கட்டப்பட்டுள்ளது. குகையிலிருந்து திருக்கோயில் விரிவடைந்து செல்கிறது. முருகன் சந்நிதியும் கர்ப்பக் கிருகமும் குடவரையாகும்.

முருகன் மயில்மேல் அமர்ந்த திருக்கோலத்தில் இருக்கிறான். பொதுவாக நான்கு அல்லது பன்னிரண்டு கரங்கள் அல்லது இரு கரங்கள் கொண்ட தோற்றத்துடன் காணப்படும் வேலன் இங்கே ஆறு கரங்களுடையவனாய்க் காட்சி தருகிறான். வழக்கமாக வலப்பக்கத்தில் காணப்படும் மயில் இங்கே இடப்பக்கமாகக் காணப்படுகிறது. ஆறு கரங்களுள் இரண்டு அபய, வரத ஹஸ்தங்கள் மற்றவை சக்தி, வஜ்ராயுதம், கேடயம்,




சக்தீராயுதம் ஏந்தியிருக்கின்றனா. வேழ மங்கையும் வேடமங்கையும் இரு புறங் களிலும் எழுந்தருளியிருக்கிறார்கள்.

இங்கே அகஸ்தியருக்கு உபதேசம் செய்வதற்காக முருகப் பெருமான் தென் திசை நோக்கி எழுந்தருளியிருப்பதாக ஐதீகம்.

உத்ஸவரும் மூலவரைப் போலவே ஒரு முகம்_ ஆறு கரங்களுடன் காணப்படுகிறார். கருவறையின் மேல் அழகிய வேலைப் பாடுகள் அமைந்த எண் பட்டைச் சிகரம் அமைந்திருக்கிறது. இந்த விமானத்தின் கீழ்ப்பாகத்தில் அழகான நான்கு சிற்பங்கள் உண்டு. கிழக்குப் பகுதியில் பார்வதியுடன் அமர்ந்த கோலத்தில் பரமசிவன். தெற்கே தக்ஷிணாமூர்த்தி ம்ருதங்கம் வாசிக்கும் நிலையில் இருக்கிறார்! மேற்கே நரசிம்மரும் வடக்கே பிரும்மாவும் காட்சி தருகின்றனர்.

அர்த்த மண்டபத்தில் வீரவாகுத் தேவரும் வீர மகேந்திரரும் துவார பாலகர்களாக இரு பக்கமும் நிற்கிறார்கள். கம்பீரத் தோற்றம்.

மயில் மிகுந்த ஜீவனுடன் நிற்கிறது.

கழுகுமலையில் காணவேண்டிய மற்றொரு விஷயம் மலைச் சரிவில் செதுக்கப்பட்ட சமணர் சிற்பங்கள்.

ஷஷ்டி, கிருத்திகை, வைகாசி விசாகம் போன்ற நாட்களில் வந்து கழுகாசலனையும் பார்த்தாக வேண்டும். இரத்தினக் கிரீடம், இரத்தினவேல், தங்கக் கவசங்கள் என்று அலங்கரித்துக் கொண்டு அற்புதமாக இருப்பான்.

ஆம்பல் ஊருணியும் ஸ்கந்த புஷ்கரிணியும் புண்ணிய தீர்த்தங்கள். இவையே ஊரின் குடிநீர் நிலைகளும் கூட என்பதால் யாரும் குளிக்கக் கூடாது. பாத்திரத்தில் நீரை மொண்டு வந்து வெளியேதான் குளிக்க வேண்டும்.

குடவரைக் கோயில் என்பதால் மூலவரைத் தனியே வலம்வர முடியாது. கிரியைத்தான் வலம்வர வேண்டும்.

அருணகிரிநாதர் இத் தலத்துக்கு மூன்று திருப்புகழ் பாக்கள் படைத்துள்ளார். சிதம்பர சுவாமிகளின் 101 பாடல்கள் கொண்ட பிள்ளைத் தமிழ் உண்டு.

*கருணை முருகனைப் போற்றி - தங்கக்*
*காவடி தோளின்மேல் ஏற்றி - கொழுங்*
*கனல் ஏறிய மெழுகாய் வருபவரே*
*வரும்*
*இகமே கதி காண்பர்; இன்பம் பூண்பார்*

என்று பாடுவார் அண்ணாமலை ரெட்டியார்.

காவடித் தூக்கி ஆடிச் செல்வோரின் நடன கதி இந்தப் பாட்டில் அனாயாசமாய்த் தழுவித் தழுவி வருகிறது. அந்தத் தமிழின் பத்தில் லயிக்கும் நாம் கழுகுமலை முருகனைக் கண்டால் எப்படித்தான் உருகிப் போவோம்! அதையும் அண்ணாமலை ரெட்டியார் சொல்லி வைத்திருக் கிறார்:

*உள்ள மெல்ல மெல்ல முருகனென்று*
*நினைந்துருகுதே*
*முத்தங்கருகுதே கண்ணீர்ப்*
*பெருகுதே*

என்று நாயகி பாவத்தில் உருகி, உருகிக் கரைந்துவிடும் நம் மனம்.

## அலறும் மாநகராட்சி மைக்!



''அடையாறு வீட்டிலிருந்து காலையில் கிளம்பும்போதே, மாநகராட்சி மைக் அலறும். 'இந்த வட்டத்தில் குப்பை எடுக்கலையா? இந்தப் பக்கம் பள்ளம் வெட்டி எவ்வளவு நாளாச்சு? மூடலையா? அந்தத் தெருவுல விளக்கு எரியலையாமே... கவனிக்கலையா...?' என்று புதிய மேயரிடமிருந்து கேள்விகள் பறக்கின்றன''

என்கிறார் மாநகராட்சி ஊழியர் ஒருவர்.

''என் காரிலுள்ள மைக்கை மாநகராட்சிப் பணிக்காகத்தான் முழுக்க முழுக்கப் பயன்படுத்தறேன். ஆனால் ஸ்டாலின் இருந்தபோது காலையில் ஒரே ஒரு முறைதான் மைக் பயன்படுத்தப்படும். அதுவும் எதுக்குன்னா, கார் ரிப்பன் பில்டிங் பக்கத்துலே வந்துடுச்சு, லிஃப்டை ரெடியா வெச்சிருங்க' என்பதற்குத்தான்'' என்கிறார் கராத்தே!

''காங்கிரஸில் இருந்தபோதே அம்மா (ஜெ) மீது எனக்கு மதிப்பு உண்டு... உண்மையான விசுவாசத்துக்கு அம்மா காட்டற ஆதரவைப் போல வேற எந்தக் கட்சியிலயும் பார்க்க முடியாது'' என்று அம்மா பாட்டுப் பாடிய கராத்தே, அதிமுகவில் சேர்ந்ததுதான் தமக்குத் திருப்புமுனை என்கிறார்.

''இப்ப ஆளுங்கட்சியாக இருந்தாலும் கராத்தேவுக்குச் சவால்கள் இல்லைன்னு சொல்ல முடியாது. மாநகராட்சியில அதிமுகவுக்கு மெஜாரிட்டி இல்லை. தீர்மானங்கள் நிறைவேறணும்னா த.மா.கா தயவு வேணும்'' என்கிறார்கள் அதிகாரிகள்.

''மக்களுக்கு உதவி செய்ய மற்ற உறுப்பினர்கள் ஒத்துழைப்பாங்கன்னு நம்பறேன். கார், கொடி, சின்னம் இந்த விவகாரங்களையெல்லாம் விட மாநகராட்சிப் பணிகளில் கவனம் செலுத்துவதைத்தான் விரும்பறேன். ''ஸ்டாலின், மேயரானவுடன் மக்களுக்கு நன்றி சொல்லியிருந்தால் நன்றாக இருந்திருக்கும்... இப்ப பதவி போனவுடன் நன்றி சொல்றது இவர் ஒருத்தராத்தான் இருக்கும்'' என்கிறார்.

– ப்ரியன்



# பட்டம்

**மா**ஜிக் லேன்டர்ன் நாடகக் குழுவினர் 'பொன்னி யின் செல்வ'னை நாடக வடிவமாக வழங்கிய பிறகு, அடுத்த தயாரிப்பு பற்றி ஏதும் செய்திகள் விர வில்லையே என்று நினைத்தோம்.

முந்தைய தயாரிப்பைப் போன்ற பிரும்மாண்டம் வெளிப்படும் வகையில், இப்போது 'பட்டம்' நாடகத்தை, அதே சென்னை ஒய்.எம்.சி.ஏ. வளாகத்தில் ஜூலை 10 முதல் 14ஆம் தேதி வரை வழங்குகிறார்கள்.

கதை, ஷேக்ஸ்பியரின் ரிச்சர்டு-மூன்றாம் மன்னன். ஆனால் முழுக்க முழுக்க ஷேக்ஸ்பியர் நாடகத்தின் காட்சிகளை எடுத்துக் கொள்ளாமல், நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்ட தமிழ்க் கதையாக உருவாக்கியிருக்கிறார் இயக்குநர் ப்ரவீன்.

சிம்ம குல அரசன் வீரகேசரியும், சூரியகுல அரசன் மாறவர்மனும் அவன் சகோதரர்களும் நம் தமிழ்ச் சூழலில் வசனங்கள் பேசும்போது நிச்சயம் அந்த ஆங்கிலக் கவிஞர் நினைவுக்கு வர மாட்டார். "ஆட்சியிலுள்ளவர்கள் இப்போது ஜோசியத்தைத்தானே நம்பு



கிறார்கள்!" போன்ற வசனங்களும், சிம்மாசனத்துக்காக வஞ்சம் தீர்த்துக் கொள்ளும் போராட்டங்களும் அவ்வப்போது நிகழ்கால அரசியலையும் நினைவுபடுத்தக் கூடும்.

ஆனால் ஸ்கிரிப்ட்டைச் செய்திருக்கும் குமரவேலுக்கும், உரையாடலை எழுதியிருக்கும் ரூபன் - இயக்குநர் ப்ரவீனுக் கும் 'பட்டம்' இன்னொரு பூமாலை. தோட்டா தரணிதான் அரங்குக் கலை. மணிப்புரி வகை சண்டைக் காட்சி களோடு, சிலம்பத்தையும் சேர்த்து வழங்கியிருக்கிறார் பசுபதி. ஜெயகுமார் தான் மாறவர்மன். (இவருக்குத் தில்லி அமைப்பு 'சம்ஸ்கிருதி' விருது வழங்கிக் கௌரவித்தது. யாருக்காவது தெரியுமோ?)

போரும், சூழ்ச்சிகளும் வாளும் சிலம்பமும் ஒய்.எம். சி.ஏ. மைதானத்தின் ஒளி வெள்ளத்தில் பின்னணி எழுப்ப, கெட்டவனாகவே வாழத் தீர்மானித்துச் செயல் படும் மாறவர்மனின் தந் திரங்களை, 'பொன்னியின் செல்வ'னின் பிரும்மாண்டத் துடன் தமிழ் நாடக ரசிகர் கள் பார்க்க மாஜிக் லேன் டர்ன் கடுமையாய் உழைத் திருக்கிறது.

— சாருகேசி



# நாயகன்

அது 1994ம் ஆண்டு உலகக் கோப்பை கால்பந்து திருவிழா. அர்ஜென்டினாவுக்கு எதிரான போட்டியின் கடைசி பத்து நிமிடம். எதிராக ஆடிய பிரேஸில் ஆட்டக்காரர் பெபட்டோவுக்குப் பதிலாக களத்தில் இறங்கினார் அந்தப் பதினேழு வயது வாலிபர். அப்போது பெரிதாக எதையும் சாதிக்கவில்லையென்றாலும் அதற்கான அறிகுறிகள் தென்பட்டது அந்த வாலிபரிடம். அடுத்தடுத்த போட்டிகளில் திறமையைக் காண்பிக்க, இன்று உலகமே தலை உச்சியில் வைத்து ஆடிக் கொண்டிருக்கிறது அவரை. கடவுளுக்கு அடுத்த நிலையில் கொண்டாடுகிறார்கள் அவரது ரசிகர்கள்.

அந்த ஹீரோ ரொனால்டோ லூயிஸ் நஸாரியோ டா லிமா! அதாவது ரொனால்டோ!

• கால்பந்து காதலால் தொண்ணூறுகளில் பிரேஸிலின் ராமோஸ் கிளப்பில் ஆடிய ரொனால்டோ, 93 - 94ல் முதல் தர கிளப்பில் ஐம்பத்து நான்கு ஆட்டங்களில் ஆடி, ஐம்பத்து நான்கு கோல்களை அடித்துத் தம்மை, பெவிகாலால் புட் பால் உலகில் ஒட்ட வைத்துக் கொள்ள, 'ரொனால்டோ இல்லாத பிரேஸில் அணியா?' என்ற நிலை வந்துவிட்டது.

''கால் பந்து நாயகன் என்று பீலேவைச் சொன்னாலும் தமது கேரியரைத் தொடங்கும்போது அவர் ரொனால்டோ அளவுக்குப் பளிச்சிட்டிருப்பாரா என்பது சந்தேகம்தான்'' என்கிறார்கள் பிரேஸிலின் முன்னாள் ஆட்டக்காரர்கள் சிலர்.

1998 உலகக் கோப்பைப் போட்டி ரொனால்டோவுக்குச் சோதனை காலம். இந்தப் போட்டிகளில் நான்கு கோல்கள் அடித்திருந்தாலும் பிரான்ஸுக்கு எதிரான ஆட்டத்தில் பரிதாபமாகத் தோற்றது பிரேஸில். இந்த ஆட்டத்தை 'போஸ்ட் மார்டம்' செய்த பிரேஸில் புட்பால் தலைமை, ரொனால்டோவால்தான் தோற்றது என்று ஆர்.டி.எக்ஸ். போட, ஆடிவிட்டார் இந்த நாயகன்.

''அந்தக் குற்றச்சாட்டுக்குப் பதிலடி கொடுக்கும் விதமாகத்தான் இந்த உலகக் கோப்பையில் தம்மை மீண்டும் நிருபித்திருக்கிறார் அவர்'' என்கிறார் முன்னாள் கோச் ஒருவர்.

இரண்டு முறை நடந்த 'மூட்டு' அறுவை சிகிச்சையால் 'அவ்வளவுதான், ரொனால்டோ வரமாட்டார்' என்று எல்லோரும் நினைத்திருக்க காயத்தைப் பொருட்படுத்தாமல் களமிறங்கினார் இந்த ஹீரோ.

மிலன் டொமிங்யூஸ் என்ற கேர்ள் பிரண்டை, கர்ப்பத்துக்குப் பிறகு கல்யாணம் செய்து கொண்ட ரொனால்டோவுக்கு இப்போது ஒரு குட்டிப் 'பாப்பா' இருக்கிறது!

— ஏக்ஜி

Edited, printed and published by K. Rajendran at Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621
Subscription : (Inland) Annual Rs. 72/-; Half Yearly Rs. 36/-
Overseas (Air Mail) Annual Rs. 400/-; Half Yearly Rs. 200/-

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி

# P.R. JEWELLERY

GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES
Old No. 102, New No. 138, USMAN ROAD,
T. NAGAR, CHENNAI - 600 017.
PH: 4344442, 4327764 TUESDAY HOLIDAY
(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)

PROPRIETOR : P. RAVINDHIRAN

எங்கு ஜோதிடம் பார்த்தாலும் **P.R.** ஜுவல்லரிக்கு வந்து ரூ.400/-க்கு ராசிக்கல் வாங்கி பயன் பெறுங்கள். கல் ஒரிஜினல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.

| ராசி | ராசிக்கல் | | வெள்ளி மோதிரம் விலை |
|---|---|---|---|
| மேஷம், விருச்சிகம் | பவழம் - | 2 CARAT | 400/- |
| ரிஷபம், துலாம் | வைரம் - | 5 CENT | 2250/- |
| மிதுனம், கன்னி | மரகத பச்சை - | 20 CENT | 400/- |
| கடகம் | முத்து - | 2 CARAT | 400/- |
| சிம்மம் | மாணிக்கம் - | 20 CENT | 400/- |
| தனுசு, மீனம் | புஷ்பராகம் - | 1 CARAT | 400/- |
| | கனகபுஷ்பராகம் - | ½ CARAT | 1000/- |
| மகரம், கும்பம் | நீலம் - | 20 CENT | 400/- |

தங்கத்தில் ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 1800/- முதல் 5000/-ம் வரை உடனே கிடைக்கும்.

அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம் விலை ரூ. 400/- இதை அணிவதால் படிப்பு, ஞாபக சக்தி, வேலை வாய்ப்பு, வியாபாரம், செல்வ வளம் பெருகும்.

தபால் மூலம் மோதிரம் 1க்கு ரூ 450/-
M.O. (or) D.D. அனுப்பவும்.

தபால் எழுதினால் முழு விவர பாம்லட் இலவசமாக அனுப்புகிறோம்.

குறிப்பு : ஜெயா டீ.வி.யில் வியாழன்தோறும் மாலை 5.30 மணிக்கு சிறப்பு பேட்டியை பார்க்கவும்

மேஷ ராசி, விருச்சிக ராசி- பவழம் ✱ ரிஷப ராசி, துலாம் ராசி - வைரம் ✱ மிதுன ராசி, கன்னி ராசி - மரகத பச்சை

கடகராசி -முத்து ✱ சிம்மராசி - மாணிக்கம் ✱ தனுசு ராசி, மீனராசி - புஷ்பராகம் ✱ மகரராசி, கும்பராசி - நீலம் ✱

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 " Registered No. TN / Chief PMG-141 / 2002 "
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 " Registered as a Newspaper in Srilanka